என்றும் உங்களுடன்

# மங்கையர் மலர்

பெட்டகம் 1

பெட்டகம் - 2
கேட்டு வாங்குங்கள்

ரூ.16/-

MANGAYAR MALAR - AUGUST 2005

196 + 32 பக்கங்கள்

## திருமகளே வருக வருக!

மங்கையர் மலர்

ஆகஸ்ட் 2005 இதழுடன்
இலவச இணைப்பு



# உலகின் முதல் 50,000 கலர் பட்டுப் புடவை




**பட்டில் இதுவரை நீங்கள் பார்த்திராத வண்ணமயமான சாதனை.**

ஒரேயொரு பட்டுப் புடவையில் 50,000 கலர்கள் – இன்னும் பெயரிடப்படாதவை சில; இதுவரை பட்டில் பார்க்காதவை பல! RmKVயால் டிசைன் செய்து நெய்யப்பட்ட இந்த அற்புதமான படைப்பின் ஒவ்வொரு பட்டிழையும் பாரம்பரிய சாய முறைகளாலும், எங்களது விஞ்ஞானமயமான சாய ஆலையின் அதிநவீன தொழில்நுட்பத்தாலும் வண்ணமயமான உயிராக்கம் பெற்றுள்ளது.

50,000 கலர்களையும் ஒன்றாக நெய்வதில் நாங்கள் வல்லமை பெற்றிருப்பதால், அரிதான கலர்களில் கூட வியக்க வைக்கும் பட்டுப் புடவைகளை இனி நீங்கள் பெற முடியும்.

கின்னஸ் சாதனையில் இடம் பெறப் போகும் உலகின் மிக அழகிய வண்ணமயமான பட்டுப் புடவையைக் காண உடன் வாருங்கள்.

RmKV
Unique wedding silks

பனகல் பார்க், சென்னை Ph 044 - 281 44445 • வடக்கு ரத வீதி, திருநெல்வேலி Ph 0462 - 2333105 www.rmkv.com

Mudra South: RmKV 7321

# ஹலோ ஜெர்ம்ஸ்!

## அறிமுகம் பேர்ஸ் வித் மின்ட் எக்ஸ்ட்ராக்ட்.

கிருமிகளிடமிருந்தும் அதைப் பற்றிய கவலைகளிலிருந்தும் உங்கள் குடும்பத்தை பாதுகாக்க சிறந்த வழி. 100% இயற்கை புதினா சத்துக்களால் வளமூட்டப்பட்ட புதிய பேர்ஸ், இது கிருமிகளுடன் போராடுகிறது என்று மருத்துவரீதியாக நிரூபிக்கப்பட்டுள்ளது. அதுவும் சருமத்தின் மீது கடுமையாக இல்லாமல் எண்ணெய்-தண்ணீரின் நாசூக்கான சமநிலைக்கு பாதிப்பின்றி, சருமத்தின் மிருதுவான மற்றும் நெகிழ்வான தன்மையை இழக்கச் செய்யாமல். எனவே, கவலைகளை மறந்திடுங்கள், புதிய பேர்ஸ் வித் மின்ட் எக்ஸ்ட்ராக்ட் வாங்குங்கள் - சருமத்தை ஆரோக்கியமாக வைக்க ஆற்றலுள்ள, இதமான வழி.




**Pears®**

WITH MINT EXTRACT

GERM SHIELD

என்றும் உங்களுடன்
# மங்கையர் மலர்
மலர் : 25 இதழ் : 7







## தேன் துளிகள்...

### ஒரு சிறிய இடைவேளை!

வெள்ளி விழா நிகழ்ச்சிகள் ஒவ்வொரு ஊரிலும் கோலாகலமாக நடைபெற்று வருகின்றன. இனி, பண்டிகைகள் காலம். பத்திரிகை வேலைகளும் தலைக்கு மேல் அழுத்துகிறது. இத்தனை வேலைகளுக்கு இடையே சிறிது மூச்சுவாங்கிக் கொள்கிறோம். சிறிய இடைவேளைக்குப் பிறகு வெள்ளி விழா நிகழ்ச்சிகள் மீண்டும் தொடரும்.

\- ஆர்.


















இணைந்து வழங்கிய
பெங்களூரில் உணவுத் திருவிழா
– பக். 68



• வரலக்ஷ்மியை பூர்ணகும்ப இதயக் கமலத்தில் ஆவாஹனம் செய்து வரைந்து அனுப்பியவர் : மீனா ஹரிஹரன்



# எது அழகு?

உலகம் பிறந்ததிலிருந்து ஒருகணம் கூட நின்றதில்லை. அப்படி ஒரு இயக்கம்! அப்படி ஒரு சுழற்சி! அப்படி ஒரு மாற்றம்! மாறுகின்ற உலகில் காண்பவைகளும் கண்ணோட்டமும் மாறிக் கொண்டே இருக்கின்றன! ஆனால் அந்தந்தக் காலகட்டத்தில் வாழும் போது அழகு, அழகற்றவை என விமர்சிக்கிறோம். அது நியாயமாகவும் படுகிறது. உண்மையில் எது அழகு?

தீப்பட்ட முகத்தையுடைய தாய் ஒருத்தி தனது குழந்தையைக் கொஞ்சி விளையாடும் அழகான காட்சியைச் சற்று நேரம் நின்று பார்த்து ரசித்த போது, அவள் சொன்னவை எனக்குள் ஒரு சிலிர்ப்பை ஏற்படுத்தியது. ''என்னம்மா பாக்கறே? என் மகளுக்கு உலகத்திலேயே நான்தான் அழகாம்... பாத்துப் பாத்து சிரிக்கிறா!'' உண்மை! நாம் ஏற்றுக் கொள்ள வேண்டிய உண்மை! உலகிலேயே மிகச் சிறந்த அழகு தாய்மை!

வெறும் தோற்ற அழகை மட்டுமே எடை போடுகின்ற காலத்தில் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். ஆனால், நமது முன்னோர்கள், வரும் தலைமுறை எங்கே தவறி விடுமோ என்று எக்காலத்திலும் பொருந்தும் வகையில் அழகு எது எனத் தமிழ் வரிகளில் அன்று அழுத்தம் திருத்தமாகக் கூறிச் சென்றிருக்கிறார்கள்.

கல்விக்கழகு பேசும் சொற்களில் குற்றமில்லாமை, செல்வம் படைத்தவர்களுக்கு அழகு சுற்றத்தினரைக் காப்பாற்றுவது, மன்னர்க்கு அழகு நீதிமுறைப்படி நாட்டை ஆள்வது, வணிகர்க்கு அழகு நாணயம் தவறாமை, வேளாண் மக்களுக்கு அழகு உழவை உயிராக மதிப்பது, மற்றும் வருமுன் அறிவது மந்திரிக்கு அழகு, போர் வீரனுக்கு அஞ்சாமை அழகு, வறுமையிலும் ஒழுக்கம் அழகு, அறிவுடையோருக்கு அடக்கம் அழகு என்பது வெற்றிவேற்கை காட்டும் அழகின் அணிவகுப்பு!

அன்றைய பட்டியல் அழகு! இது நமக்குப் புரிவது கடினம். நேற்றைய வரிகளில், ''கண்ணுக்கு மையழகு, கவிதைக்குப் பொய்யழகு'' ஏற்றுக் கொள்ள எளிதான இந்த அழகுப் பட்டியல் நன்கு புரிகிறது! மென்மையாக மனதுக்குள் உட்கார்ந்து மணியடிக்கிறதே! இன்று மட்டும் ஏன் காலழகு, கையழகு, உந்தியழகு, விரலழகு, அதில் நகம் அழகு என்று சுருங்கி விட்டோம்! புரியவே இல்லை! மலரின் அழகை ரசிக்கலாம். இதழ் இதழாகப் பிய்த்துப் பார்ப்பது ரசனையா?

அழகென்பது அவரவர் கண்ணோட்டத்திலுள்ளது என்பதை இப்படியும் சொல்லுவார்கள். மஜ்னுவின்



ரேவதி சங்கரன்



# மங்கையர் மலர்

(கல்கி நிறுவன வெளியீடு)

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் : கி.ராஜேந்திரன்

கல்கி பில்டிங்க்ஸ், 47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை -32

ஆசிரியர் : ரேவதி சங்கரன்

உதவி ஆசிரியர் : சாந்தி ரங்கராஜன்

தொலைபேசி : 22251522, 22250623, 22251324

தொலைநகல் : 044 - 22251021

மின்னஞ்சல் :

ஆசிரியர் குழு : mangayarmalar@kalkiweekly.com

சந்தா பிரிவு : subscription@kalkiweekly.com

பிற தகவல்களுக்கு : info@kalkiweekly.com

மங்கையர் மலர் இன்டர்நெட் முகவரி : www.mangayarmalaronline.com

சந்தா விவரம் :

உள்நாடு :

ஒரு வருடம் : ரூ.200/-

ஆறு மாதம் : ரூ.100/-

வெளிநாடு (விமானத்தபால்) :

ஒரு வருடம் : 37.50 யு.எஸ். டாலர்

இலங்கை : ரூ.915/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

இந்தியாவின் நெ.1 மகளிர் இதழ் : மங்கையர் மலர்


## அறிவிப்பு

மங்கையர் மலர் இதழ் விற்பனை விலை ஆகஸ்ட் '05 முதல் ரூ. 16/- ஆக உயர்ந்துள்ளதால் சந்தாத் தொகையும் சிறிது மாற்றம் செய்யப்பட்டுள்ளது.

உள்நாட்டுச் சந்தா : ரூ. 190/-லிருந்து ரூ. 200/- (ஒரு வருடம்)
ரூ. 95/- லிருந்து ரூ. 100/- (ஆறு மாதம்)

வெளிநாட்டுச் சந்தா :
(ஒரு வருடம்) யு.எஸ். டாலர் 37லிருந்து 37.50

சந்தாதாரர்கள், தவிர்க்க முடியாத இந்த விலை மாற்றத்தை ஏற்று, தொடர்ந்து ஆதரவு அளிக்க வேண்டுமெனக் கேட்டுக் கொள்கிறோம்.

பதிப்பாளர்,
கல்கி நிறுவனப் பத்திரிகைகள்

*கண்களோடு பார்த்தால் லைலாவின் அழகு புரியும் என்று!*

*பிறந்த குழந்தைக்குத் தாயழகு, பள்ளிப் பருவத்தில் கற்பிக்கும் ஆசிரியை அழகு, (இது அன்றைய அனுபவம்), இளமைப் பருவத்தில் உள்ளத்தில் நிறைந்தவர் அழகு, முதுமையில் பேரப் பிள்ளைகள் அழகு. இப்படி நமக்குள்ளேயே எத்தனை மாற்றங்கள்!*

*மாறாத பேரழகும் இருக்கிறது! உலகளவில் தாய் நாட்டின் அழகைப் போற்றாதவர்கள் இல்லை.*

*இதில் எந்தவித மாற்றமும் இல்லை! அது போலவே சுரத்து மலரழகு! எரிகின்ற சுடர் அழகு!*

*தூரத்துப் பச்சை அழகு! தொடுகின்ற வான் அழகு!*

*ஓரத்துப் பார்வை அழகு! உனக்கு நீயே அழகு!!! - இந்த ரசனையிலும் அதிக மாற்றமில்லை! கடைசியில் சொன்னதில் மாற்றமிருந்தால் கண்ணாடிக்கு இங்கு வேலை இருந்திருக்காதே!*

*காட்டில் வாழும் மிருகங்களும், 'பசிக்கு மட்டுமே கொல்வது' என்ற கட்டுப்பாட்டுடன் தமது இனத்தவரே அழகு என்று கூடிக் குலவிச் சேர்ந்து வாழ்கின்றன.*

*மிருகங்களின் அழகைக் கூட ரசிக்கக் கற்றுக் கொண்டுள்ள மனிதன், மனித இனத்தின் அழகு, மற்ற எல்லா உயிர்களிடமும் காட்டுகின்ற மனித நேயத்தில்தான் இருக்கிறது என்பதை ஏன் மறந்து விட்டான்?*

*வாழ்க வளமுடன்! வாழ்க வையகம்!*

கும்பம், கேரளா விளக்கு, கலசம், அன்னப் பட்சி விளக்கு, கஜலட்சுமி விளக்கு, பாவை விளக்கு, அகல் விளக்கு, காமாட்சியம்மன் விளக்கு, குத்து விளக்கு.

மங்கையர் மலர்
கோலாகல வெள்ளி விழா



போட்டி கூப்பன் – ஆகஸ்ட் '05





KGEYES
KGEYES RESIDENCY PVT LTD.

**கேள்வி**

படத்தில் உள்ள மங்கலப் பொருள்களை வகைப்படுத்திப் பொருத்தவும்.

1. ................................................
2. ................................................
3. ................................................
4. ................................................
5. ................................................
6. ................................................
7. ................................................
8. ................................................
9. ................................................

பெயர் : ................................................ வயது : ....................

முகவரி : ................................................

தொலைபேசி : .............................. மின்னஞ்சல் : ..............................

என்றும் உங்களுடன்

# மங்கையர் மலர்



# KGEYES

**KGEYES RESIDENCY PVT LTD.**

இணைந்து வழங்கும்
10 மாதப் போட்டி

# என் இனிய இல்லம்

போட்டி 5

## என் வீட்டுத் தோட்டத்தில்...

"தண்ணீர்ப் பஞ்சத்தில் தோட்டமா ?" என்று கேட்காதீர்கள். ஒரு துளசிச் செடியாவது இல்லாத இல்லமே இல்லை. எனவே எவ்வளவு சிறியதாக இருந்தாலும் உங்களுடைய மினி தோட்டத்தைப் பற்றி எழுதுங்களேன்.

### போட்டி விதிமுறைகள் :

- மாதம் ஒரு போட்டித் தலைப்பும், மாதம் ஒரு கூப்பனும் 10 மாதங்களுக்கு தொடர்ந்து இங்கு இடம்பெறும்.
- வாசகிகள் பத்து மாதங்களும் தொடர்ந்து இப் போட்டியில் கலந்து கொள்ள வேண்டும்.
- பத்தாவது மாத இறுதியில் அனைத்துப் போட்டிகளுக்கும் உண்டான விடைத்தாள்களையும் மொத்தமாக அறிவிக்கப்படும் கடைசி தேதிக்குள் அனுப்ப வேண்டும்.
- போட்டியில் வழங்கப்பட்டிருக்கும் KGEYES போட்டிக் கூப்பனையும் சேர்த்து வைத்து கூப்பனில் கேட்கப்பட்டிருக்கும் கேள்விக்கான பதிலையும் அதிலேயே நிரப்பி மொத்தக் கூப்பன்களையும் பத்தாவது மாத முடிவில் அறிவிக்கப்படும் இறுதி தேதிக்குள் விடைத்தாள்களுடன் இணைத்து அனுப்ப வேண்டும்.
- போட்டியும் பரிசும் வருமான வரி விதிமுறைகளுக்கு உட்பட்டது.
- தேர்வு செய்யப்படும் விடைத்தாள்களிலிருந்து 5 இல்லத்தரசிகளின் வீட்டிற்கு மங்கையர் மலர் மற்றும் KGEYES குழு படையெடுக்கும்.
- இறுதியாக ஒருவர்க்கு மட்டும் வீடு பரிசு!
- பாரதன் பப்ளிகேஷன்ஸ் நிறுவனத்தில் பணிபுரியும் ஊழியர்கள் மற்றும் அவர்தம் உறவினர்கள் இந்தப் போட்டியில் பங்குகொள்ள வாய்ப்பில்லை.
- ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.



**KGEYES RESIDENCY PRIVATE LIMITED**

10,2nd Cross Street,R.A.Puram,Chennai-28. Ph:24313939(8Lines)
Mobile:9840 398009,98407 31854. Weekdays:9.30 to 6p.m.Sundays:10.30am to 1.30pm.
Website:www.kgeyes.com Email:sales@kgeyes.com

அனைத்து வசதிகளுடன்.... சென்னையில்... காத்திருக்கிறது.

குழந்தை தாய் வயிற்றில் இருக்கும்போதே ஒலிகளைக் கேட்க முடியும் என்று ஆராய்ச்சி செய்து நிரூபித்துள்ளனர். அதைப் போல் குழந்தை பிறந்தவுடன் வெளியுலக வெளிச்சத்தை இயற்கையாக ஏற்றுக் கொண்டவுடன் தன் கண்களால் ஆராயத் தொடங்குகிறது. வண்ணங்களைப் பார்த்து ரசிக்க ஆரம்பிக்கின்றது.

ஆனால், நாம் அநேகமாக பிறந்த குழந்தைக்கு வண்ண உடைகளை உடுத்த மாட்டோம். மருத்துவமனைகளிலும் வெள்ளை உடைதான் அணிவிப்பார்கள். ஏன் டாக்டர்கள், நர்ஸ், நோயாளி எல்லோருக்கும் வெள்ளை உடைதான். இது ஏன்?

வெள்ளை நிறத்திற்கு நோய்களை எதிர்க்கும் சக்தி உண்டு. ஒரு பொருளை இரண்டு பாகமாகப் பிரித்து ஒரு பாகத்தை இருட்டிலும் ஒரு பாகத்தை வெளிச்சம் உள்ள இடத்திலும் வைத்தால் இருட்டில் வைத்த பொருளில் மிகச் சீக்கிரத்தில் பாக்டீரியாக்கள் உண்டாகி இருப்பதைக் காணலாம்.

ஆகவே, குழந்தைகள் பிறந்து



# கை நாட்டுக் கலை



• ஹபிபுன்னிஸா

• மஹபுபுன்னிஸா

மூன்றில் இருந்து ஆறு மாதம் வரை அதாவது அவர்கள் உடல் வெளி சீதோஷ்ண நிலையை ஏற்றுக் கொள்ளும் பக்குவம் வரும் வரை நாம் குழந்தைகளுக்குக் கூடிய மட்டும் வெள்ளை உடைகளை அணிவிப்பதே மிகச் சிறந்தது. அந்த உடை மென்மையான துணியில் செய்ததாக இருக்க வேண்டும். வெள்ளை நிறம் தூய்மையை எடுத்துக் காட்டும் நிறம்.

பொதுவாக குழந்தைகளின் உடை வெளிர் நிறத்தில் பிளைனாக இருந்தால் அதை மேலும் அழகுபடுத்த நினைத்தால் அதில் சிறு சிறு பூக்கள், பறவைகள் போன்றவற்றை பெயிண்ட் கொண்டோ அல்லது எம்பிராய்டரி நூலைக் கொண்டோ அலங்கரிக்கலாம்.

குழந்தைகள் வளர வளர அவைகள் வண்ணங்களைப் புரிந்து கொள்ளவும், பறவைகள், மிருகங்கள் என தெரிந்து கொள்வதற்கும் மிக உதவியாக இருக்கும். நாம் அவர்கள் உடைகளில் எம்ப்ராய்டரி, அப்ளிக் பெயிண்டிங் என அலங்கரித்துப் போடலாம்.

இப்போது ரெடிமேட் அப்ளிக், சீக்கிரம் உலரக்கூடிய ஃபேப்ரிக் பெயிண்ட்கள் விற்பனையில் உள்ளன. இதை வாங்கி நாம் குழந்தைகள் உடைகளை அலங்கரிக்கலாம். செய்வது மிகவும் சுலபம். பார்க்க மிக உயர்ந்த உடை போல் காணப்படும்.



* ஒரு கோடு டிசைன்



* ஹெறிங் போன் டிசைன்





* லேசிடேசி டிசைன்

இங்கு படத்தில் ஒரு கோடு தையல், சோம்பேறி தையல், ஹெறிங்போன் தையல் தைக்கும் முறையைப் பார்த்து நீங்களே சுலபமாக எம்ப்ராய்டரி தைக்கலாம்.

மேலும், இன்னும் சுலபமாக முடிக்க வேண்டும் என்று எண்ணுபவர்கள் நம் கையின் கட்டை விரலில் பெயிண்ட்டைத் தடவி கைநாட்டு வைப்பது போல் படத்தில் காட்டியுள்ளபடி வரைந்து பறவைகள், பூக்கள் என அலங்கரிக்கலாம்.

**செய்முறை :**

நமக்குப் பிடித்தமான ஃபேப்ரிக் பெயிண்டை கட்டை விரலில் முழுவதும் ஒழுங்காகத் தடவி அதைத் துணியின் மேல் ஒட்ட வேண்டும். பிறகு இலைகள், கொடிகள் போன்றவைகளைப் பிரஷ்ஷினால் வரைந்து முழுமைப்படுத்தலாம். இப்போது மிகவும் அழகான பூ இலையுடன் கிடைக்கும்.

இதைப் போலவே தம்ப் இம்பிரேஷன் மூலம் பறவைகளையும் செய்யலாம். கட்டை விரலில் பெயிண்ட் தடவி அதைத் துணியில் அழுத்தி எடுத்தால் வடிவம் விழும். அதற்கு மூக்கு, வால் வரைந்து படத்தில் உள்ளது போல் பறவை உருவம் கொடுக்கலாம். இதைப் போல், ஆமை, எலி, யானை என்று நம் திறமைக்குத் தகுந்தாற்போல் வரைந்து அழகுபடுத்தலாம்.

**- ஹபிபுன்னிஸா பேகம், மஹபுபுன்னிஸாபேகம்**

படங்கள் : **ஸ்ரீஹரி**

## எரிபொருள் சிக்கனம்

# கேஸ் மிச்சம், காசு மிச்சம், நேரமும் மிச்சம்!



ஆஹா நம் வாசகிகளுக்குத்தான் என்ன திறமை! என்னே சிக்கனம்! இவர்களுக்கு யாராவது 'சிக்கன சிகாமணி'ன்னு பட்டம் கொடுங்களேன். எவ்வளவு சிக்கன வழிமுறைகளைக் கடைப்பிடிக்கிறார்கள் பாருங்கள். சரி, கவலையை விடுங்கள். உங்கள் மங்கையர் மலரில் பிரசுரம் செய்து அந்தப் பட்டத்தையும் நாங்களே சூட்டி விடுகிறோம். 'கடைசி தோசையை வார்க்கும் போது அடுப்பை அணைத்து விட்டால் கூட அதுவும் எரிபொருள் சிக்கனம்தானே!' ஆஹா இந்தச் சிறிய செயல்தான் எவ்வளவு பெரிய நன்மையைத் தருகிறது! அதுவும் சகோதரிகளிடம் இதுபோல் எக்கச்சக்க சிக்கன வழிமுறைகள் குவிந்துள்ளது போலிருக்கே. சரி, இதுபோல் தண்ணீரின் சிக்கனத்தைப் பற்றியும் அள்ளி விடுங்களேன். இதுவும் ஒரு வாசகி எழுதிய டிப்ஸ்லிலிருந்து பிறந்த ஐடியாதான். இதோ அவர் எழுதியது :

**தண்ணீரைச் சேமிக்க :**

பாத்திரங்களைத் தேய்க்கப் போடும் போது வரவரவென்று இருக்கும் பாத்திரங்களில் தண்ணீரை ஊற்றி ஊறவைப்பார்கள். அம்மாதிரி செய்தால் தண்ணீர் அதிகச் செலவாகும். பாத்திரங்களில் உட்புறமாகத் தண்ணீரை நன்கு தடவி கவிழ்த்துப் போட்டு வைத்திருந்தால் தேய்க்கும் போது ஊறிச் சுலபமாகத் தேய்க்கலாம். நான் அனுபவத்தில் அறிந்தது.

**- ஜெயலக்ஷ்மி சேஷாத்ரி, கும்பகோணம்.**

**சரி, நீங்க எப்படி? சிக்கன சிக்கன தண்ணீர் சேமிப்பைச் செய்வது எப்படி தோழி? - எழுதி அனுப்புங்கள்.**

**- ஆர்.**

- கேஸ் சேவர் இரண்டு பர்னர்களிலும் போட்டே ஆகணும். எப்பொழுதும் அடி அகலமான பாத்திரங்களிலேயே சமைக்கப் பழகணும்.
- எப்போதும் சிறிய பர்னரையே உபயோகிக்கணும்.
- குக்கர் ஆவி வந்ததும், குழம்பு போன்றவைக் கொதிக்க ஆரம்பித்ததும் தணலைக் குறைத்து வைக்க வேண்டும்.
- குக்கர் தண்ணீர் கொதி வந்த பிறகு அரிசியில் வெந்நீர் ஊற்றி வைத்தால் இன்னமும் வேகமாகச் சமையல் செய்ய முடியும்.

**- கே. ராதிகா.**

1. சாம்பார் செய்வதற்கு, அதற்கு வேண்டிய, உப்பு, புளி, சாம்பார்ப் பொடி போட்டு கொஞ்சம் தண்ணீரில் தானையும் போட்டுக் குக்கரில் வைத்து ஒரு விசில் வரும்படி வைத்து பிறகு அதை வாணலியில் கொட்டி ஒருமுறை கொதிக்க வைத்தால் போதும். காஸ் மிச்சப்படும். குழம்பும் நொடியில் தயார்.

2. வாணலியை கடுகு தாளிக்க வைக்கும் பொழுது அதில் தண்ணீர் இருந்தால் வாணலியைத் துடைத்துப் பிறகு எண்ணெய் ஊற்றித் தாளிக்கவும்.




3. கடுகு தாளிக்க அடுப்பில் வாணலியை வைத்து எண்ணெய் ஊற்றி சூடு வந்ததும் கடுகைப் போட்டு காஸை அணைத்து விட்டால் அந்தச்

**Angels®**
Advanced Clinic (P) Ltd

**hair, skin & body care**

***Since 1991***

Website: www.angelsadvancedclinic.com
Email: angels@angelsadvancedclinic.com



**Dr. Radhika Reddy M.A., Ph.D.,**
Doctor of Philosophy in Cosmetology
Recipient of Indira Gandhi Priyadarshini Award, Member of International Aestheticians, **ENGLAND** (1997)
Member of British Association of Beauty Therapy & Cosmetology, UK.



## தேவையற்ற ரோமங்களுக்கான சிகிச்சை

முகத்திலுள்ள தேவையற்ற ரோமங்களை நீக்குவதற்கு பலரும் எலக்ட்ராலிசிஸ் போன்ற சிகிச்சைகளையே நாடுகின்றனர். இவை, தற்காலிகமான தீர்வையே தருகின்றன என்பதோடு, பக்கவிளைவுகளையும் ஏற்படுத்தக்கூடும். ஆனால் ஏஞ்சல்ஸின் அட்வான்ஸ்டு லேசர் சிகிச்சை, ரோமங்களை வேர்களிலிருந்தே நீக்குவதால் அவை மீண்டும் வளர வாய்ப்பில்லாமல் போகிறது. இதில் லேசர் கதிர்களின் உதவியுடன் ரோமக்கால்களை வலுவிழக்கச் செய்வதன் மூலம் அனாவசிய ரோமங்கள் அறவே நீங்குகின்றன. இது பெண்களுக்கு மேல் தாடை - கீழ் தாடை - அக்குள் - வயிறு - மார்பகம் போன்ற பகுதிகளிலும் தேவையற்ற ரோமங்களை நீக்கி விடலாம்.

## Good Bye to Bald Head within One Hour




பாதி வழுக்கை,
பாரம்பரிய வழுக்கை, வியாதிகளால்
உதிர்ந்த உங்கள் தலைமுடியை சிலிகான் சிஸ்டம் என்ற அதிநவீன தொழில் நுட்பத்தின் மூலம் தலைமுடியை ஒழுங்கு படுத்திவிடலாம். இந்த சிகிச்சை ஆண்கள் மற்றும் பெண்களுக்கும் பொருந்தும். இச்சிகிச்சையின் மூலம் எந்தவித பக்கவிளைவுகள் கிடையாது.

## மார்பகம் வளர்ச்சி பெற ஏஞ்சல்ஸை நாடுங்கள்

உடலமைப்பிற்கு ஏற்றவாறு மார்பகம் வளர்ச்சி அடையாத பெண்களுக்கு இங்கு அட்வான்ஸ்ட் மசில் ஸ்டிமுலேஷன் தெரபி என்ற அதி நவீன சிகிச்சையின் மூலம் மார்பகத்தை சுற்றியுள்ள தசைகளை ஸ்டிமுலேட் செய்து சீரான மார்பக வளர்ச்சி பெற முடியும்.

இது Non-Surgical சிகிச்சையாகும்.




2B, 3rd Avenue, T-53/99, (Opp. 14 Shops) Rajeshwari Mansion,
Anna Nagar Chennai - 40. Timings: 9 am to 7 pm (Open on all days)

**Cell: 98400 46599 Ph: 044 - 52176679 / 26212547 / 26213468**

- Hyderabad - (040)23222111, 55368999
- Vijayawada - (0866)2477149
- Vizag - (0891)2598697
- Rajahmundry - (0883)2461007
- Bangalore - (080)51153995

சூட்டிலேயே கடுகு வெடித்து விடும்.

**- லலிதா.**

● குழம்பு, ரசம் எதுவாக இருந்தாலும் கொதி நிலை வரும்வரை பாத்திரத்தை மூடி போட்டு வைத்தால் சீக்கிரம் கொதித்து விடும்.

**- மனிஷா மணிமாறன்**

● ஒரு நாளைக்குத் தேவையான குடிக்கும் தண்ணீரை அகல பாத்திரத்தில் தட்டு போட்டு மூடி காய்ச்சி ஒரே தடவையாக வைத்து விடவும்.

**- பி. கமலா**

● சிக்கன காஸ் செலவிற்கு நான் கடைப்பிடிப்பது சமையல் வேலை முடிந்தவுடனே சிலிண்டர் ரெகுலேட்டரை மூடி விடுவேன். அதனால் காஸ் சிலிண்டர் குழாய் (ரப்பர் ட்யூப்பில்) உள்ள காஸினால் ஆபத்து ஏற்படாது. வெளியே செல்லும் போது முக்கியமாக ரெகுலேட்டரை மூடி விட்டே செல்வேன். அநேகம் பேர் இரவு படுக்கும் முன்புதான் சிலிண்டரை மூடுவார்கள். இது தவறு. சமையல் செய்த உடன் மூடினால் காஸ் சில நாட்கள் கூடவே வரும். நான் என் நண்பர்களுக்குக் கூறி, அவர்களும் இதே மாதிரி செய்து பலன் அடைந்துள்ளனர்.

2. இட்லி அல்லது ஆவியில் வேக வைக்கும் பொருள்களை குக்கரில் வைத்து, அதன் ஆவி வரும் இடத்தில் சிறிய பாத்திரம் வைத்து மூடினால் மிக விரைவில் இட்லி தயாராகும். வெயிட் (குக்கர் வெயிட்) போடக்கூடாது. வரும் ஆவி நின்றதும் காஸ் அடுப்பை அணைத்து குக்கரில் வெயிட் போட்டால் இட்லி பூப் போல் நன்றாகவே வெந்திருக்கும். இதனால் காஸ் செலவு மிச்சப்படுத்தலாம்.

3. பால் காய்ச்சும் முன்பு குளிர்சாதனப் பெட்டியிலிருந்து பாலை எடுத்து வெளியில் வைத்து சிறிது நேரம் கழித்து பால் காய்ச்சினால் பால் விரைவில் காய்ந்து, காஸும் சிக்கனமாகும். அது போல், தோசை மாவு, அடை மாவு, காய்கறி வகைகளும் குளிர்சாதனப் பெட்டியிலிருந்து முன்பே வெளியில் எடுத்து வைத்து விட்டால் காஸ் சிக்கனம் செய்யலாம்.

4. தோசை, சப்பாத்தி வகைகள் செய்யும் போது 'தவா'வில் (தோசைக் கல்லில்) தோசையோ, சப்பாத்தியோ போட்டு விட்டு இட்லி மூடி போட்டு மூடி சிம்மில் வைத்து செய்யும் போது துரிதமாகவே ஆகிவிடும். மறுபடி மூடி திறந்து திருப்பி மறுபடி இட்லி மூடியினால் மூடிச் செய்வதால் காஸ் சிக்கனம் செய்யலாம். தோசைக்குத் திருப்பிப் போடக்கூட அவசியமில்லை. ஸ்பான்ச் தோசை உங்கள் கையில்!

5. ப்ரஷர் பான் அல்லது சிறிய குக்கர் உள்ளவர்கள் நேரிடையாகவே பருப்பு அல்லது சாதம், காய்கறிகள் வேகவைத்தால் காஸ் செலவு சிக்கனம் ஆகும். எல்லாவற்றையும் நேரிடையாகவே வைத்து அதிலும் சிம்மில் வைத்து பக்கத்தில் இருந்து சமைத்தால் சமையலும் விரைவில் ஆகும். காஸும் சிக்கனம் ஆகும்.

6. இறுதியாக 'ஃபோன்' அல்லது 'காலிங்பெல்' யாராவது கூப்பிட்டால் உடனே காஸ் அடுப்பை அணைத்து விட்டுப் போய்ப் பார்ப்பேன். ஃபோன், தபால்காரர் போன பிற்பாடு மறுபடி வேலை தொடர்வேன். அதனால் காஸ் நமக்கு எப்போது தேவையோ அப்போது அருகில் இருந்து வேலை செய்தால் நன்றாக சிக்கனமாகவே செலவாகும்.

**- ஜானகி குளத்து**

● குடும்பத்தினர் அனைவரும் ஒன்றாக காபி/டீ, டிபன் சாப்பிடும் நேரத்தை அமைத்துக் கொண்டால், உணவுப் பொருளை அடிக்கடி (அ) தனித்தனியே சுடவைப்பதைத் தவிர்க்கலாம். மீண்டும் சுடவைப்பதால் சத்தும் குறைகிறது.

● பூரி/அப்பளம் வடாம் பொரிக்கும் போது கடைசியில் அடுப்பை அணைத்து விட்டு கடாயில் இருக்கும் சூட்டிலேயே மேலும் ஒன்றிரண்டைப் பொரித்து எடுக்கலாம்

● தோசைக்கல்லில் கடைசி தோசையை வார்க்கும் போது அடுப்பை அணைத்தால் கல் சூட்டிலேயே அடிப்புறம் வெந்து விடும். **- ஜெயா.**

● அனைத்து வகையான குழம்புகளையும் குக்கரில் வைத்தல், இதனால் காய்கறிகள் சத்து குறையாது குழம்பும் ருசியாக இருக்கும்.

**- அ. வாசுகி சிவக்குமார்.**

**(சிக்கனம் இன்னும் வளரும்)**




உடற்பயிற்சி என்றவுடனே, 'அட போப்பா எங்கப்பா அதுக்கெல்லாம் நேரம் இருக்கு' என்கிற சலிப்பும் 'நம்மால பெரிய பெரிய எக்ஸர்ஸைஸ்லாம் பண்ண முடியாது' என்கிற சாக்குப்போக்கும் உடனடி பதிலாக வந்து விடுகிறதா? அப்படியானால் நீங்கள் உடற்பயிற்சியினால் கிடைக்கும் மூன்று முக்கியப் பலன்களை இழக்கிறீர்கள்.

1. வலிமை
2. உடலுரம்
3. வளையும் தன்மை.

ஆம். வலிமையிருந்தால் சிரமப்படாமல் பாரங்களைத் தூக்க, தள்ள, இழுக்க முடியும். உடலுரம் இருந்தால் தினப்படி வேலைகள் எதையும் சலிப்படையாமல் சமாளிக்க முடியும்.

# உடற்பயிற்சி தரும் ஓய்வு!

மூன்றாவதாக உடலை அதிகம் வருத்திக் கொள்ளாத வகையில் அன்றாட வேலைகளில் எளிதாக வளைக்க, நீட்ட, திருப்ப முடியும்.

இவற்றிற்கெல்லாம் நீங்கள் பெரிய பெரிய பயிற்சிகளை மேற்கொள்ள வேண்டுமென்கிற அவசியமில்லை. எது உங்களுக்கு விருப்பமானது அதைச் செய்யலாம். வாரத்திற்கு மூன்று நாட்கள் அதிலும் பதினைந்து நிமிடங்களே போதும் எளிய உடற்பயிற்சிக்கு!

பல எளிதான உடற்பயிற்சிகள் இருக்கின்றன. இதில் உங்களுக்குப் பிடித்த ஒன்றைத் தேர்வு செய்யுங்கள். அது நடத்தலாகவும் அல்லது ஓட்டப் பயிற்சியாகவும் கூட இருக்கலாம். எதையும் படிப்படியாகச் செய்ய ஆரம்பியுங்கள். விரைவில் அதைச் செய்வதில் உண்டாகும் மகிழ்ச்சியை, ஆனந்தத்தை அனுபவிப்பீர்கள்.



## உடற்பயிற்சியினால் ஓய்வு

ஓய்வெடுப்பதற்குச் சிறந்த வழி உண்டென்றால் அது உடற்பயிற்சிதான்!

ஒரு நாளின் அருமையான பணிக்குப் பின் உங்கள் களைப்பைப் போக்க அது உதவுகிறது. நீங்கள் நன்றாக உறங்கவும் உதவுகிறது.

## உடற்பயிற்சிக்கு வயது தடையில்லை

வயதாகிவிட்டால் உடற்பயிற்சிக்கு அவசியமில்லை என்று நினைக்க வேண்டாம். உடற்பயிற்சியை நீங்கள் தொடங்குவதற்கு இன்னும் காலம் கடந்து விடவில்லைதான். நடத்தல், ஜாகிங் போன்ற எளிதான பயிற்சிகள் முதிய வயதிலும் உங்கள் உடல்நலத்திற்கு உதவும். தனியாகச் செய்ய முடியவில்லையென்றால் குடும்பத்தினரோடு செய்யலாம்.

### குடும்பம் ஒன்றுபடுதல் :

குடும்பத்தினருடன் சேர்ந்து உடற்பயிற்சி செய்வது தொடர்பை மேம்படுத்துவதோடு, குடும்ப உறவுகளில் ஏற்படும் உளைச்சலைக் குறைக்க உதவுகிறது. நண்பர்களோடு இணைந்து செய்வது நட்பு வட்டத்தை விரிவாக்குகிறது.

### எளிதான உடற்பயிற்சியினால் உண்டாகும் பலன்கள் :

பொதுவாக நீட்டல், நீந்துதல், ஓடுதல், குதித்தல் இவற்றால் என்னென்ன பலன்கள் உண்டாகிறது?

- இருதயமும் நுரையீரல்களும் வலுவடைந்து அவை மேலும் சிறப்பாக இயங்குகிறது. அது உங்களுக்கு மாரடைப்பு, வாதம் ஆகியவை நிகழ்வதற்கான அபாயத்தைக் குறைக்கிறது.
- மாரடைப்பிலிருந்து காக்கும் எச்.டி.எல். கொலஸ்டிராலை இரத்தத்தில் அதிகரிக்கச் செய்கிறது.
- இரத்தக் கொதிப்பு, இனிப்பு நீர் ஆகியவை ஏற்படுவதற்கான அபாயத்தைக் குறைக்கிறது.
- உடலில் இரத்த ஓட்டத்தை மேம்படுத்துகிறது.
- முறையான உடற்பயிற்சி கொழுப்பைக் கரைத்து உடலைக் கட்டாகவும், சீராகவும் வைத்திருக்க உதவுகிறது.
- தசைகள் வலுவடையும், மூட்டுகள் மேலும் இளக்கமடையும். பிற்காலத்தில் ஏற்படக்கூடிய முதுகுவலியையும், இதர வலிகளையும் தவிர்க்கலாம்.
- மனத்தை விழிப்பாக வைத்திருக்க உதவுகிறது. மன உளைச்சலையும் தணிக்கிறது.
- நன்றாக உறக்கம் வரும்; உற்சாகம் பிறக்கும்.
- எலும்புகளை வலுவாக வைத்திருக்கும் பெண்களுக்கு மாதவிலக்குப் பின் எலும்புத் தேய்வு, எலும்பு முறிவு ஆகியவை நிகழ்வதைத் தடுக்கிறது.
- முறையான உடற்பயிற்சித் திட்டம் பசியைக் கட்டுப்படுத்துதல், புகைத்தலையும், மதுவையும் கைவிடுதல் போன்ற ஆரோக்கியமான பழக்கங்களுக்குத் துணைபுரிகிறது.

### வெட்கத்தை விடுங்கள் :

உடற்பயிற்சி செய்வதற்கு புடைவை சரிவராது. மற்ற உடைகளை நான் அணிய மாட்டேன். வெட்கமாக இருக்கிறது என்றால் மேற்சொன்ன பலன்கள் அனைத்தையும் இழக்கிறீர்கள். அவ்வளவு தான்!

நன்றி : **உடற்பயிற்சி கையேடு சிங்கப்பூர் அரசு வெளியீடு**

அனுப்புதல் **டாக்டர் எஸ். ஜெகதம் சோமசுந்தரம்**

தொகுப்பு : **சாந்தி ரங்கராஜன்**



குழந்தை பிறந்த மூன்றரை மாதங்கள் கழித்து, குழந்தை பெற்றவர்கள் கொள்ளு ரசம், கொள்ளு சாம்பார் வைத்துச் சாப்பிட்டால், கருப்பையில் தங்கியிருக்கும் அழுக்கு நீங்கும். பிரசவத்திற்குப் பிறகு ஏற்படும் உடல் ஊதலும் குறைந்து 'ஸ்லிம்மாக' இருக்கலாம்.

**- ஏ. ஹம்ஸத்**

ஓம் நமசிவாய

"ஜோதிட ரத்னா"

# டாக்டர் இலா.அம். கருணாகரன்



எதிர்கால பலன்கள்





# ஸ்ரீ சுகர் அகத்தியர்

## நாடி ஜோதிட நிலையம்

பழங்காலத்தில் வாழ்ந்த சப்தரிஷிகள், பதினெட்டு சித்தர்கள் வான் இயல், மருத்துவம், ஜோதிடம் ஆகியவற்றில் உள்ள இரகசியங்களை வாழையடி வாழையாக வரும் மனித சமூகம் தெரிந்து கொள்வதற்காக வேண்டி, ஓலைச் சுவடிகளில் எழுதி வைத்துள்ளனர். அவ்வாறு எழுதப்பெற்றஓலைச் சுவடிகள் மூலம் கை பெருவிரல் ரேகையைக் கொண்டும், ஜாதகத்தைக் கொண்டும், பிறப்பு முதல் ஆயுள் வரையிலான கல்வி, தொழில், வியாபாரம், உத்தியோகம், கலைப்பணி, பொதுப்பணி, திருமணம், திருமணத்தைப் பற்றிய விவரங்கள், குழந்தைகள், சொத்துக்கள் அடையும் காலங்களையும், கடன், வழக்கு, வியாதி, நட்டம், விரோதி, கண்டம் ஆகிய தீமைகளையும் அவற்றின் நிவர்த்திகளையும் போகர், சிவவாக்கியர், வசிஷ்டர் போன்றமகரிஷிகளால் எழுதப்பெற்றஓலைச் சுவடிகள் மூலம் படித்து எழுதியும் தருகிறோம்.

பழைய எண். 13/ புது எண் : 31,
மன்னார் (ரெட்டி) தெரு,
(கிருஷ்ணவேணி தியேட்டர் அருகில்) தி.நகர்,
சென்னை-600 017, தென்னிந்தியா,
போன்: 24360244, 55398367.

மும்பை விலாசம் : No: C1, Flat No: 123, 12th Floor,
Shree Shubh Karma Co-operative Housing Society Ltd.,
SSS Nagar, Koliwada, Sion East, Mumbai-400 037.
Ph. : 022-24013484 / 39544019


"ஜோதிட ரத்னா"
டாக்டர் இலா.அம். கருணாகரன்

மண்ணில் நல்ல வண்ணம் வாழ எங்களை நாடி வாருங்கள்; நன்மைகள் பெறுவீர்.




போட்டிகளும், பொறாமைகளும் அதிகம் நிறைந்த இன்றைய காலகட்டத்தில் கிடைத்த வேலையை தக்கவைத்துக் கொள்வதே பெரும்பாடாக இருக்கிறது. இதில் அழகாக உடையணியாமல், எண்ணெய் வழியும் முகத்தோடு அலுவலகம் சென்று மேலதிகாரி முன் நின்றால் ,அவர் முகத்தில் மேலும் எள்ளும், கொள்ளும் வெடிக்கும்!

# எப்படி இருந்த நான்...

# எளிய

அவசர அவசரமாகத் தலையில் எண்ணெயைத் தடவி, காமாசோமாவென்று முடியை வாரி ஒற்றைப் பின்னலோ, ஒரு கொண்டையோ போட்டு, கையில் அகப்பட்ட ஸ்டிக்கர் பொட்டை முகத்தில் அழுத்தி அரக்கப் பரக்கவென்று ஓடுகிறார்கள் பணிபுரியும் பெண்கள். இதனால் என்ன ஆகிறது? "முதலில் வேலையில் தன்னம்பிக்கையை இழக்கிறார்கள். ஆம், ஆள் பாதி, ஆடை பாதி என்பது போல் நாம் பார்க்க 'பளிச்'சென்று இருந்தால்தான் நம் மனதில் ஒரு தன்னம்பிக்கை பிறக்கும். அது நம் வேலைகளை அழகாய்ச் செய்து முடிக்க உதவும். இல்லையென்றால் அவசரக் கோலம், அள்ளித் தெளித்த கோலமாகி விடும்" என்கிறார் அழகுக் கலை நிபுணர் வசுந்தரா.



நாம் பார்க்க 'பளிச்' சென்று இருந்தால்;நான் நம்மைப் பார்ப்பவர்களுக்கும் நம் மீது ஒரு நம்பிக்கை வரும். ஆகவே, வேலைக்குப் போகும் பெண்கள் ஓரளவாவது தங்கள் உடைகளில், முக ஒப்பனைகளில் கவனம் செலுத்த வேண்டும் என்று அழுந்தக் கூறும் வசுந்தரா இங்கு பணியிடப் பெண்களுக்கு 'எளிய முக ஒப்பனை'யைக்





மங்கையர் சக்தி மகத்தான சக்தி

மங்கையர் மலர் வெள்ளிவிழா

சுற்றுத் தருகிறார் :

"மேக்-அப் என்பது நம் அழகைக் கூட்டி தன்னம்பிக்கையைத் தரக்கூடியது.

பணிக்குச் செல்லும் பெண்கள் வேகமாக மேக்-அப் செய்து கொள்ளும் விதம், அழகு சாதனங்களைத் தேர்வு செய்யும் முறை ஆகியவைகளைப் பார்ப்போமா?

முதலில் முகத்தில் குளிர்ந்த நீர் கொண்டு ஸ்பிரே செய்ய வேண்டும். (இது கோல்ட் ஆக்ஸிலேஷன் எனப்படும்) அல்லது ஐஸ் கட்டிகள் கொண்டு முகத்திற்கு ஒத்தடம் தரலாம். இப்படிச் செய்வதால் சருமத்திலிருந்து வெளியேறும் வியர்வையைக் கட்டுப்படுத்தலாம். சருமத்தைத் துடைக்காமல் காய விட வேண்டும்.

மேக்-அப்பில் முதலில் போட வேண்

# மேக்-அப்!

டியது, ஃபவுண்டேஷன். இதில் பல வகைகளும் நிறங்களும் உண்டு. எண்ணெய்ப் பசை சருமம் உள்ளவர்கள் ஆயில்-ஃப்ரீ ஃபவுண்டேஷன் என்று கேட்டு வாங்கலாம். இளைஞிகள் விரும்பி அணிவது ஸஃப்ளே இது போட்டதே தெரியாது. ஃபவுண்டேஷனை மிருதுவான ஸ்பாஞ்சினால் தடவுவது நல்லது. கைகளினால் தடவினால் சூட்டிற்கு உருகி விடும், திட்டுத் திட்டாக ஒட்டும்.

ஒருமுறை பயன்படுத்திய ஸ்பாஞ்சை ஹைட்ரஜன் ஃபெராக்ஸைடு சொல்யூஷனில் போட்டுச் சுத்தம் செய்யலாம். வெந்நீரில் கொதிக்க விட்டால் ஸ்பாஞ்ச் கடினமாகிவிடும்.

ஃபவுண்டேஷனைத் தேர்வு செய்வது எப்படி? நம்ம சரும நிறத்திற்கு ஏற்ற நிறத்தில் ஃபவுண்டேஷனைத் தேர்வு செய்வது அவசியம். நல்ல நிறமுடைய பெண்கள் 'ஐவரி' கலர் பயன்படுத்தலாம். சுமாரான நிறமுடையவர்கள் 'பேஜ்' கலரையும், கொஞ்சம் கறுத்த நிறமுடையவர்கள் 'ப்ரான்ஸ்', 'கோல்ட்' நிறமுடைய ஃபவுண்டேஷனைத் தேர்வு செய்ய வேண்டும். இதை வாங்கும் போது முகத்தின் அருகில், அல்லது கையின் மணிக்கட்டின் அருகில் வைத்துப் பார்த்து சரியான நிறத்தை வாங்கலாம்.

ஃபவுண்டேஷனை முகத்தில் தடவிய பின்பு ஓரிரு நிமிடங்கள் அப்படியே விட, அது நன்கு 'செட்டாகி' விடும். அதிகப்படியான ஃபவுண்டேஷனை டிஷ்யூ பேப்பரினால் மென்மையாக ஒற்றி எடுக்கலாம்.

முகப் பவுடர்களில் காம்பேக்ட் வகையே பணிகளுக்குச் செல்லும் பெண்களுக்கு உகந்தது. காம்பேக்ட்டை ஒற்றி ஒற்றியே தடவ வேண்டும். இதைத் தடவிய பிறகு முகத்தில் உள்ள

இப்பத ஆபிட்டேன்!








எண்ணெய்ப் பசை குறைந்து, முகம் பளீரென மின்னும். இதிலும் கூட அவரவர் சரும நிறத்திற்கு ஏற்ற காம்பேக்ட்டை கேட்டு வாங்க வேண்டும்.

புருவங்களை மாதம் ஒரு முறையாவது த்ரெட்டிங் முறையில் ட்ரீம் செய்து கொள்வது அவசியம். அப்பொழுதுதான் கண்களுக்கான மேக்-அப் பளிச்சிடும். ஐஷேடோ போட்டுக் கொள்வதால் கண்களைப் பெரிதாக, அழகாகத் தோற்றமளிக்கச் செய்ய முடியும். 'லைட்-பிங்க்' 'பீச் கலர்', 'கோரல்', 'பேஜ்' போன்ற நிறங்களில் ஐ-ஷேடோ பவுடர் போட்டுக் கொள்ளலாம்.

'ஐ-லைனரா?' 'அது எனக்கு வரவே வராது. என் கைகள் நடுங்கும்' என்று பல பேர் அதைப் போட்டுக் கொள்வதில்லை. இவர்களுக்காகவே இப்பொழுது 'லைனர் பேன்', 'ஃபெல்ட் டிப் ஐ லைனர்' என்ற எளிதான முறைகள் வந்துள்ளன. முகத்தைச் சற்று உயர்த்தி, பார்வையைக் கீழ்ப்புறமாக தாழ்த்தி, கண்களை இலேசாகத் திறந்து, கண்களின் ஓரத்தில் இந்த லைனர் பேன்னை வைத்து, தலையை மெதுவாக ஒரு பக்கத்திலிருந்து மறுபக்கம் திருப்ப - லைன் அழகாக வரும். ஐ லைனர்களில் தற்போது 'சார்கோல்' 'க்ரே', 'ப்ளூ' எனப் பல நிறங்கள் அறிமுக மாகியுள்ளன. சிறிய கண்கள் உடையவர்கள் லைனரை கண்களின் மேல் பகுதியில் மட்டும் போடலாம். கண்களின் மேலும் கீழும் வரையும் போது கண்கள் சிறிதாகத் தெரியலாம்.

கண்களை விரிவடையச் செய்து காட்டும் தன்மை மஸ்காராவுக்கு உண்டு. காலை வேளைகளுக்கு பிரவுன் மற்றும் கறுப்பு நிற 'லேஷ் பில்டு' மஸ்காரா பயன்படுத்த வேண்டும்.

லிப்ஸ்டிக் போடு முன்பு, லிப் லைனர் பென்சிலால் உதடுகளின் அவுட் லைன் வரைந்து விட்டு பின்பு 'லிப்ஸ்டிக்' போட வேண்டும். 'பிங்க்' 'ரெட்' 'பிரவுன்' 'நேச்சுரல்' ஆகிய நிறங்களில் லிப் லைனர் பென்சில்கள் உண்டு.

லிப் லைனர் போடும் போது உள்ளே போடும் லிப்ஸ்டிக்கை விட ஒரு ஷேட் டார்க்காக போட வேண்டும். லிப்ஸ்டிக்கை அதற்கான பிரஷ் கொண்டு போடும் போதுதான் உதட்டிற்கு சரியான ஷேப் கிடைக்கும். 'மெரூன்' 'பிங்க்' 'பிரவுன்' ஆகிய நிறங்களை தேர்வு செய்து வாங்கலாம். 'ந்யூட்' லிப்ஸ்டிக்கில் இதில் கலர் குறைவாகவும், பளபளப்பு அதிகமாகவும் இருக்கும்.

முகத்திற்கு தகுந்த சிம்பிள் ஹேர்-ஸ்டைல் செய்து கொண்டு போகலாம். பணிக்குச் செல்லும் பெண்கள் சில வேளைகளில் வெயில் நேரத்தில் வெளியே செல்ல வேண்டிய கட்டாயம் ஏற்பட்டால், ஸன் ஸ்கிரீன் லோஷனைத் தடவிக் கொண்டு செல்வது அவசியம். இல்லையென்றால் நிறம் குறைந்து போகும். இப்படி நிறம் குறைய என்ன காரணம் தெரியுமா? சூரிய ஒளித்தாக்குதலால் சருமம் பாதிக்கப்படுவதைத் தவிர்க்க, சருமத்தின் அடி ஆழத்தில் உள்ள நிறமிகள் எனப்படும் மெலனின்கள் சருமத்தின் அடியில் வெகு அருகாமையில் வந்து விடுகிறது. இது பிரவுன் நிறமுடையதனால் நாம் கறுத்துப் போய் விடுகிறோம்."

- வசந்தரா

(அழகுக் கலை நிபுணர்)

# கேன்ஸர் நோயா?



Dr. K. Sri Sridar

## கவலைப்பட வேண்டியதில்லை.

### குருபாலா கிளினிக்கின் Herbal Oncology™ சிகிச்சை

**மீண்டும் மகிழ்ச்சியை உங்கள் இல்லத்திற்கு கொண்டு வருகிறது.**

**Bone Cancer** எனக்கு மார்பக புற்றுநோய் கால் எலும்புகளில் பரவி முறிவு ஏற்பட்டது. கேன்சர் காரணமாக அது மீண்டும் சேராது என டாக்டர்கள் கூறினார்கள். உங்கள் மூன்று மாத சிகிச்சைக்குப் பிறகு X-Ray எடுத்ததில் கால் எலும்பு சேர்ந்து விட்டது என்று கூறி டாக்டர்கள் ஆச்சர்யப்பட்டனர். நானும் வலியின்றி நன்றாக இருக்கிறேன்.

குளோரி ஜார்ஜ், கண்ணதாசன் நகர், சென்னை. 31.05.06

---

**Liver Secondaries** என் தந்தையாருக்கு வயிறு மற்றும் லிவர் கேன்சருக்காக டாக்டர்கள் கைவிட்ட நிலையில் உங்களை சந்தித்தோம். நான்கு மாத சிகிச்சைக்குப் பிறகு ஸ்கேன் எடுத்ததில் 7.5 Sq. Cm. அளவு இருந்த கட்டி 1.3 Cm ஆக குறைந்து விட்டது. வலி மற்றும் எந்த தொந்தரவும் இன்றி அவர் நன்றாக உள்ளார். இதை எங்கள் டாக்டர் MIRACLE என்கிறார். நாங்கள் உங்கள் மருந்து தவிர வேறு எதுவும் கொடுக்கவில்லை.

S. சுரேஷ், வடபழனி, சென்னை. 25.05.05

---

**Liver Cancer** எனக்கு லிவர் கேன்சர், 31–8–2004 அன்று உங்களை சந்தித்தேன். அப்போது 165 Sq.Cm. அளவுக்கு லிவரில் பெரிய புற்று நோய் கட்டி இருந்தது. உங்கள் மருந்து எடுத்தபிறகு 02–05–05 அன்று ஸ்கேன் செய்து பார்த்ததில் லிவரில் கட்டியே இல்லை Normal Study என்று வந்துவிட்டது. டாக்டர்கள் இதை Miraculous Cure என்கிறார்கள்.

Liver shows uniform echopattern with no evidence of focal or diffuse pathology. Intra and extra hepatic biliary passage are not dilated.




IMPRESSION:
NORMAL STUDY

S.R. லக்ஷ்மி,
வடபழனி, சென்னை.

---

**Mrs. Janaki, Age 67 - Lung Secondaries cured exactly in one month**



X-RAY dt.05.04.05

**Bilateral lung secondaries** with minimal residual pleural fluid right.



X-RAY dt.05.05.05

**Lungs are Clear.** Specifically there is no evidence of secondaries; heart size and shape are normal.

---

**Sacral Chordoma** நான் Sacral Chordoma – எனும் கேன்சரால் அவதிப்பட்டு சென்னையிலுள்ள பிரபல மருத்துவமனையில் சிகிச்சைக்குச் சென்றேன். கடந்த வருடம் நவம்பர் மாதம் எனக்கு ஆபரேஷன் செய்வதாக சொல்லி டாக்டர்களால் அலைக்கழிக்கப்பட்டு வந்தேன். டிசம்பர் 18ம் தேதி முதல் உங்கள் மருந்தை எடுத்துக் கொண்டு வருகிறேன். வலி என்பதே தற்போது இல்லை. மோஷனும் நார்மலாகி விட்டது. (மோஷன் போகவில்லை என்று தான் ஆபரேஷன் என்றார்கள்) உங்கள் அறிவுரைப்படி நான் ஊருக்குத் திரும்பி பழையபடி என் வேலையை பார்க்கத் துவங்கி விட்டேன்.

A. வரதராஜன், திருச்சி 12.03.2005

---

## கை விடப்பட்ட கேன்ஸரா ? கவலை வேண்டாம்

எல்லாவித புற்று நோய்க்கும் சிகிச்சை உண்டு. நோயாளி நேரில் வர வேண்டியது இல்லை. முழுமையாக எல்லா ரிப்போர்ட்டுகளையும் அனுப்பி வைக்கவும். Herbal Oncology™ சிகிச்சை என்பது டாக்டர் கே. ஸ்ரீ ஸ்ரீதர் வடிவமைத்த அற்புத முறையாகும். பத்தியம் இல்லை. மற்ற மருந்துகளோடும் சேர்த்து சாப்பிடலாம். வாழும் போது நோய் தொந்தரவு குறைந்து நிம்மதியாக சந்தோஷமாக வாழலாம். அவர்களின் வாழ்நாள் 40% அதிகரிக்க முயற்சிக்கலாம். இதற்கு சிறப்பு மூலிகை சிகிச்சை பயனுள்ளதாக அமைகிறது. டாக்டர்களால் கைவிடப்பட்ட நோயாளிக்கும் உடனே நன்மை அளிக்கிறது.

Royale Apartment, 6, Mannar Reddy Street, (Opp. Street to T.Nagar Bus Terminus) T.Nagar, (Next to Krishnaveni Theatre) Chennai - 600 017. **CLINIC : Ph : 044 - 24339596**

**Res : 044 - 55872782, Cell : 98401 48808**

**TIMINGS :** 10.00 am to 5.30 pm

On **Sundays** : 10.00 am to 12.00 Noon

# Gurubalaa Clinic




**Speciality Clinic for Herbal Oncology™ and Asthma**

அனைத்து நோய்களுக்கும் சிகிச்சை அளிக்கப்படும்.

**Our Speciality is :** Herbal Oncology™, Surgical Oncology, Medical Oncology & Radio Therapy Advise. All under one roof.

**நேரில் வரமுடியாதவர்கள் தங்கள் நோயின் விவரத்தை எழுதி அனுப்பினால் கூரியர் மூலம் மருந்துகள் அனுப்பி வைக்கப்படும்.**



மூலிகை மற்றும் இயற்கை மருத்துவத்தில் மிகவும் புகழ்பெற்ற சர்வதேச நிறுவனம் **MAYAR INDIA**. **I.S.O 9001-2000, R&D centre qualified scientists** விருதுபெற்ற இந்நிறுவனம்1936 – லிருந்து விஞ்ஞானிகளின் ஆய்வுக்குப் பின் தரச்சான்றிதழ் பெற்ற **SIVANANDA** தயாரிப்புகளை வழங்கிவருகிறது.

பல நூற்றாண்டுகளாய் நம் நாட்டில் ஆயுர்வேதம், புகழ்பெற்ற வாழ்க்கை விஞ்ஞானமாய் விளங்கி வருகிறது. சிறந்த மூலிகைகளிலிருந்து, தாமிக்க, தூய்மையான, ஒருங்கிணைந்த மற்றும் 100 சதவிகிதம் இயற்கையான பொருள்களை வழங்குகிறது. மேயர், உங்கள் உடல், மனம், ஆத்மா அனைத்தும் புத்துணர்ச்சியடையும், **MAYAR** தயாரிப்புகளால். ஆரோக்கியம்தான் சிறந்த செல்வம். எனவே, எங்களின் தயாரிப்புகளை உபயோகப்படுத்தி, உங்கள் திறனை அதிகரியுங்கள், மற்றவற்றை மறந்திடுங்கள். **MAYAR INDIA** தயாரிப்புகள் உங்களுக்குத் தரும் நலன்களைப் பட்டியலிட்டால் எண்ணிலடங்காது.




**CHENNAI: ALL APOLLO:** 52061025-26-27 Sivananda : 28445894, Mahaveer Agency : 23644647-1648-23642740, Ajay Agencies : 9444283734 Vetri Agencies : 9444418675 Vasantha Enterprises: 24794101-02-03-04, Srinath : 25352799-9087, Vijaya : 9382152515, **COIMBATORE:** Viswanathan: 2238273, Lakshmi : 2436683, **SALEM:** Ramana: 2336365, Viswanathan : 2332775 **ERODE** : Raghavendra : 2215593, **TIRUKKOYILUR** : Vijay Vignesh : 253212 **MADURAI** - Sivananda Nilayam : 2624265, Krishna - 2630935 Vignesh - 2629557/5370702 **THANJAVUR** : Dhivya : 259478 **CUDDLORE** : Alamelu : 9865424639, **SRIKALI** Venkata Ramana : 4272194 **DINDIGUL** : Vinayaga : 2431909 **TRICHY** : Ambigai - 2721548 Rajagopal : 2764202 **TIRUNELVELI** : Bagavathy 2333920 **VILLUPURAM** : V.S.D. : 224660 **NEYVELI** : Navin : 575077 **KARAIKUDI** - Krishna Medical : 236886, Alamelu : 238969 **THENI** : Venkat : 262897, **PUDUKKOTTAI** - MLM : 223624 **PONDICHERRY** - Amodhaya - 9345425750 **Bangalore** : 23134597 **Port Blair** : 30142 Free Home Delivery 044-23644647-1648-23642740

*Stockist enquiry contact :* 9443091741, 9385382395

# உடல் எடை குறைக்க
# சுகர் - மூலிகை சிகிச்சை

**உடல் எடை குறைக்க:** வீட்டில் இருந்தால் ஒரு மாதத்தில் 15 கிலோ வரை / இங்கு தங்கினால் 12-நாளில் 10 கிலோ வரை குறைகிறது. உடலில் உள்ள அழுக்குகள், துர்நீர் வெளியேறுவதால் உடல் எடை குறைகிறது. அப்போது அல்சர், பிரசர், முழங்கால் வலி, தலைவலி, மாதவிடாய் பிரச்சனைகள் போன்ற மற்ற நோய்களும் தொந்தரவுகளும் இயற்கை முறையில் பாதுகாப்பாக பெருமளவு குணமாகின்றன. பலருக்கு ஒரே வாரத்தில் எடை குறைவது நன்கு தெரியும் இரண்டாம் மாதத்திலிருந்து மேலும் மேலும் எடை குறைவதோடு உடல் அளவும் (SIZE) வேகமாக குறைந்து உடல் நன்கு இறுகும், பலமும் அழகும் அதிகரிக்கும்.

உடலிலுள்ள கொழுப்பு, வெள்ளைச் சதை போன்றவை நீங்குவதால் பெண்களுக்கு கருத்தரிக்கும் வாய்ப்பு மிகவும் பிரகாசமடையும். ஆண்களுக்கு நேரம், பலம் திறன், உறுதி ஆகியவை நன்கு மேம்பட்டு முன்பு எப்போதும் இல்லாத அளவிற்கு தாம்பத்திய உறவு சிறப்படையும்.

உடலின் இயற்கையான இயக்கத்தின் மூலம் அழுக்குகள் வெளியேற்றப்படுவதால் எவ்வித பின்/பக்க விளைவுகள் ஏற்படுவதில்லை. ஒரு மாத மருந்து ரூ.1100/- முதல் ஐந்து விலைகளில் கிடைக்கும். போனில் முகவரி தெரிவித்து V.P.P.மூலமாகவும், நேரிலும் மருந்துகளைப் பெறலாம்.

**சுகர்:** உடல்நிலையைப் பொறுத்து நிறையப் பேருக்கு ஒரு மாதத்திற்குள் நார்மலாகிவிடும் வாய்ப்புள்ளது. பின்பு எமது மூலிகை மருந்துடன் எளிய உணவுமுறையில் வாழ்நாள் முழுவதும் பக்க / பின் விளைவுகளின்றி சுகரை நன்கு கட்டுப்படுத்தலாம். பூரண ஆரோக்கியத்தைத் திரும்பப்பெறலாம்.

எமது மூலிகை மருத்துவத்தில் எந்த தொந்தரவுக்காக சிகிச்சை பெற்றாலும் மொத்த உடல் ஆரோக்கியமே மேம்படும். பசி, தூக்கம் ஒழுங்காகும். அல்சர், கேஸ்ட்ரபுள் போன்றவை நீங்கும். முடி உதிர்வது, முகப்பருக்கள் குணமாகும். இரத்தம் சுத்தமாகும். நோய் எதிர்ப்பு சக்தி அதிகரிக்கும். மேலும் முழங்கால் நீர்க்கட்டு, உடல் வலிகள், வயிற்றுக் கோளாறுகள் ஆண்மைக் குறைவு கேன்சர் உட்பட, உணவு சாப்பிட்டு நடமாடும் நிலையில் உள்ளவர்களின் எல்லா நோய்களுக்கும் Dr.M.முத்துக்குமார் B.Sc., DNYS, DEMS, இயற்கை மருத்துவ இல்லம் (பதிவு). 40-அனுமன் கோவில் வீதி, கோபிசெட்டிபாளையம் - 638 452, ஈரோடு (Dt) போன்: (04285) 228957 செல் : 98427-11449, செல் - 93 6020 9393 . www.natureclinic.net *e-mail* natureclinic@gmail.com

# நியூஸ் சாலட்



• அனில் அம்பானி



• கோகிலாபென் அம்பானி



• முகேஷ் அம்பானி



• ருத் மனோரமா

### அதிசயம்!

சுவிட்சர்லாந்தின் லாசனே நகரில் தடகளப் போட்டிகள் நடந்து வருகின்றன. இதில் ஆண்களுக்கான 110 மீ. தடை ஓட்டப் பிரிவில் ஒரு அதிசய சம்பவம் நடந்தது. சீனாவின் ஜியாங் லியு, அமெரிக்காவின் டெரன்ஸ் டிரம்மல் இருவரும் ஒரே நேரத்தில் போட்டி தூரத்தை (13.05) வினாடிகளில் கடந்து முதலிடம் பெற்றனர். விளையாட்டில் இது போன்ற சம்பவங்கள் நடப்பது மிக அரிதான ஒன்று!



### ஆமைக்கு வயது 255

மேற்குவங்க மாநிலம் கோல்கட்டாவில் அலிப்பூர் உயிரியல் பூங்காவில் 255 வயதான இந்த ஆமை வாழ்ந்து வருகிறது. கடந்த 1875ம் ஆண்டு வெள்ளையர்கள் காலத்தில் இந்தப் பூங்கா அமைக்கப்பட்ட போது செசல்ஸ் தீவில் இருந்து இந்த ராட்சத ஆமை கொண்டு வரப்பட்டு இன்று வரை பொது மக்களின் பார்வைக்கு விடப்பட்டுள்ளது!





### மழலைகள் 'மியூசிக் தெரபி'

தாயின் வயிற்றிலிருந்து வெளியே வந்த பின் சுற்றுச் சூழலை அனுசரித்து அழாமல் சமர்த்தாக நடந்து கொள்வதற்கு இசை சிகிச்சை குழந்தைகளுக்கு பேருதவி புரிவதாகக் கண்டறியப்பட்டுள்ளது. இதற்காக ஸ்லோவேகியா நாட்டில் கோசைஸ் நகர மருத்துவமனையில் பிறந்த குழந்தைகளுக்கு "மியூசிக் தெரபி" அளிக்கப்படுகிறது. பாரம்பரிய இசையை ஹெட்போனில் ரசிக்கின்றனர் இந்த மழலைகள்.

• தியாகத் தீவு



• அதிசயம்



• சேது சமுத்திரத் திட்டம்



• காஸ்மிக் எலெக்ட்ரிக் ஸ்கூட்டர்

## கால் விரல் மடக்கி 74 படி கடந்த மாணவர்

கோவை சரவணம்பட்டியில் உள்ள எஸ்.என்.எஸ். கலை மற்றும் அறிவியல் கல்லூரியில் மூன்றாம் ஆண்டு பி.சி.ஏ. படிக்கும் மாணவர் பிரகாஷ். இவர் காலில் உள்ள விரல்களை மடக்கி ஏறி கல்லூரியில் உள்ள 74 படிக்கட்டுகளை 25 வினாடிகளில் ஏறிக் கடந்து அசத்தினார்.



• விரல் மடக்கி ஏறுகிறார்...

## காஸ்மிக் எலெக்ட்ரிக் ஸ்கூட்டர்கள்

குறைந்த செலவில் நிறைந்த பயனை அளிப்பதற்காகவே பெங்களூரைச் சேர்ந்த இகோ வாகனங்கள் தயாரிப்பு நிறுவனம் 'காஸ்மிக்-1' 'காஸ்மிக்-2' என்ற இரு சக்கர வாகனங்களை தயாரித்துள்ளன. இவை இரண்டுமே பாட்டரியில் இயங்குபவை. இந்த வாகனத்தின் விலை 30 ஆயிரம் ரூபாய்தான். இதில் இருவர் பயணம் செய்யலாம். பேட்டரியால் இயங்கும் இந்த வாகனம் ஒருமுறை சார்ஜ் செய்தால் அதிகபட்சமாக 50 கி.மீ. வரை செல்லும் திறன் பெற்றது. சார்ஜ் செய்ய அதிகம் செலவிடத் தேவையில்லை. வெறும் மூன்று ரூபாய் போதுமானது.

## ஸ்டார் வார்?

வால் நட்சத்திரத்தின் உள் அமைப்பை ஆராயும் பொருட்டு நாசா விஞ்ஞானிகள் டெம்பிள் என்ற வால் நட்சத்திரத்தைத் தேர்வு செய்தனர். 28 சதுர கிலோ மீட்டர் அளவுள்ள இதன் மீது தாக்குதல் நடத்தி அதன் உள் அமைப்பை சோதனை செய்வதற்காக 'டீப்' இம்பாக்ட் என்ற விண்கலம் கடந்த ஜனவரி மாதம் ஏவப்பட்டது. ஆறு மாத பயணத்திற்குப் பின் டெம்பிள் 1ஐ நெருங்கியது. விண்கலத்திலிருந்து குண்டுகளு டன் கூடிய இன்பாக்டர் சீறிப் பாய்ந்து வால் நட்சத்திரத்தின் மீது 4.6.05 அன்று காலை மோதியது. இந்த வெற்றிகரமான காட்சியைக் கண்ட விஞ்ஞானிகள் மகிழ்ச்சியில் திளைத்தனர். வால் நட்சத்திரத்தின் அருகில் இதுவரை எந்த விண்கலமும் நெருங்கியதில்லை.

- விஜயா சீனிவாசன்

## விடுப்பு எடுக்காத சகோதரிகள்!

நீடாமங்கலம் பள்ளியில் பயிலும் சகோதரிகள் எஸ். ராஜலக்ஷ்மி, எஸ். ராதா இருவரும் 10 ஆண்டுகளாக விடுப்பு எடுக்காமல் பள்ளிக்கு வருகை தந்துள்ளனர். இதற்காக ஆண்டுதோறும் பள்ளி நிர்வாகம் இருவருக்கும் பரிசுகள் வழங்கி ஊக்குவித்து வருகிறது.

- சியாமளா ராஜகோபால்.



• விடுப்பு எடுக்காத சகோதரிகள்

## நோபல் பரிசு தேர்வு

உலகம் முழுவதும் 1000 பெண்கள் தேர்ந்தெடுத்து நோபல் பரிசு கமிட்டிக்கு சிபாரிசு செய்யப்பட்டுள்




• புதுமைத் தாய்

ளார்கள். இதில் இந்தியாவிலிருந்து 96 பெண்கள் அடக்கம். கர்நாடகாவிலிருந்து தேவகி ஜெயினும், ருத் மனோரமாவும் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார்கள். இருவருமே சமூக சேவகிகள். பெண்களுக்கு 50 சதவிகித ஒதுக்கீடு வேண்டும் என்று குரல் கொடுத்தவர் மனோரமா. மேலும் நோபல் பரிசு பெற்ற பர்மாவைச் சார்ந்த ஆங்சூயி வீட்டுச் சிறைப்படுத்தப்பட்ட போது விடுதலை செய்ய வேண்டும் என்று வாதிட்டவர்.

- இந்திரா கோபாலன்

மன்னார் வளைகுடாவையும் பாக் ஜலசந்தியையும் இணைப்பதற்காக கடலுக்குள் கால்வாய் தோண்டும் ரூ. 2400 கோடி மதிப்புள்ள "சேது சமுத்திர திட்டம்" தொடக்க விழா மதுரையில் நடந்தது. திட்டத்தைத் தொடக்கி வைக்க பிரதமர் மன்மோஹன் சிங், காங்கிரஸ் தலைவர் சோனியா காந்தி வருகை தந்திருந்தனர். பிரதமர் திட்டத்தை தொடங்கி வைத்தார். மத்திய அமைச்சர் டி.ஆர். பாலு மற்றும் தி.மு.க. தலைவர் கருணாநிதி நிகழ்ச்சியில் பங்குகொண்டனர்.

"கரோலின் ஸ்மித்" என்ற அமெரிக்கப் பெண்மணி காஸினோ கம்பெனி அடையாளக்குறியான "கோல்டன் பாலஸ்" என்பதை மக்களிடையே விளம்பரப்படுத்த தன் நெற்றியில் பச்சைக் குத்திக் கொண்டு வளையவருகிறார். இவ் விளம்பர முயற்சிக்கு கம்பெனி பத்தாயிரம் டாலர்கள் தந்திருக்கிறார்கள். எல்லோரும் பரிகசித்தாலும் இந்தப் பணம் தன் 11 வயது பிள்ளையின் படிப்பிற்கு தேவைப்பட்டதால் விளம்பரப் பணியை ஏற்றுக் கொண்டதாகக் கூறினார் இந்தப் புதுமையான தாய்.

ரிலையன்ஸ் குழும நிறுவனங்களின் உரிமைப் பிரச்னை அம்பானி சகோதரர்களின் தாய் கோகிலாபென் அம்பானியால் தீர்க்கப்பட்டது. ரிலையன்ஸ் இண்டஸ்ட்ரீஸ் ரிலையன்ஸ் பெட்ரோ கெமிகல்ஸ் முகேஷ் அம்பானிக்கும் ரிலையன்ஸ் இன்போகாம், ரிலையன்ஸ் எனர்ஜி மற்றும் ரிலையன்ஸ் கேபிடல் ஆகிய நிறுவனங்கள் அனில் அம்பானிக்கும் நிரந்தரமாகப் பிரித்துக் கொடுக்கப்பட்டுள்ளன. இந்தியப் பொருளாதாரத்தில் 3 சதவிகித பங்கு ரிலையன்ஸ் கம்பெனிகள் மூலம் வருவதால் மத்திய அரசே இந்தச் சமரசத்தில் மகிழ்ச்சி தெரிவித்திருக்கிறது. இந்தக் கம்பெனியில் பங்குதாரராக இருக்கும் பல்லாயிரக்கணக்கான மக்களும் மகிழ்ச்சியடைந்துள்ளனர்.

- சியாமளா சுவாமிநாதன்.

பிரிட்டன் தலைநகர் லண்டனில், ரயில் நிலையங்களிலும் மற்றும் இரண்டடுக்கு மாடி பஸ் ஒன்றிலும் தொடர் வெடிகுண்டு வெடிப்பு நிகழ்த்தியுள்ளனர் தற்கொலைப் படை தீவிரவாதிகள். இதனால் ஐம்பதுக்கும் மேற்பட்ட உயிர்ச்சேதமும் ஏராளமானோர்க்கு உடல்சேதமும் ஏற்பட்டு லண்டன் நகரமே ஸ்தம்பித்துப் போயுள்ளது. இதுவரை எந்தத் தீவிரவாத இயக்கமும் இந்தச் சதிசெயலுக்கு உரிமை ஏற்கவில்லை.

சேரனின் 'ஆட்டோகிராப்' படத்திற்கு மூன்று தேசிய விருதுகள் கிடைத்துள்ளன. இப் படத்தில் 'ஒவ்வொரு பூக்களுமே' பாடலை இயற்றிய பா. விஜய்க்கு சிறந்த பாடலாசிரியர் விருதும், இப் பாடலைப் பாடிய எஸ். சித்ராவுக்கு சிறந்த பாடகி விருதும் மற்றும் இப் படத்திற்கு 'சிறந்த பொழுதுபோக்குப் படம்' என்கிற விருதும் கிடைத்துள்ளது.

- அஞ்சலா

அயோத்தியில் உள்ள தற்காலிக ராமர் கோவிலைத் தகர்க்க ஆறு தீவிரவாதிகள் முயற்சி மேற்கொண்டனர். ஜீப்பின் மூலம் தடுப்பு வேலியை உடைத்து உள்ளே புகுந்த ஆறு பேரையும் மத்திய ரிசர்வ் படை போலீஸார் மிகவும் விழிப்பாகச் செயல்பட்டு சுட்டுக் கொன்றனர். வெடிகுண்டுகளை வீசி, துப்பாக்கிகளால் சுட்டபடியே கோவிலை நோக்கி ஓடிய அந்த ஆறு பேரையும் இரண்டு மணி நேரப் பெரும் போராட்டத்துக்குப் பின்னர் பாதுகாப்புப் படையினர் சுட்டு வீழ்த்தினர். அவர்களில் இருவர் மனித வெடிகுண்டு என்பது குறிப்பிடத்தக்கது. இந்தச் செயலுக்கு எந்த அமைப்பும் இதுவரை பொறுப்பேற்கவில்லை.

- கே. வள்ளி

# நான் ஏன் ஜூஹி சாவ்லா போல் இல்லை?

**சு**மார் பதினைந்து வருடங்களுக்கு முன் நடந்த சம்பவம் இது! அழகு நிலையங்கள் பரவலாக அறிமுகமாகிற நேரம். எனக்கும் ஒருமுறையாவது அழகு நிலையத்தில் சென்று ஏதாவது செய்து கொள்ள வேண்டும் என்கிற ஆர்வம் உந்தவே, என் அக்காவின் துணையோடு புதிதாகத் திறந்திருந்த அழகு நிலையத்தினுள் முதன் முதலாக காலடி எடுத்து வைத்தேன்! ஆஹா! என்னவென்று வர்ணிப்பேன்! அங்கு மாட்டப்பட்டிருந்த நிலைக் கண்ணாடிகளும், சுவர் ஓவியங்களும், அளவெடுத்த ஆடையில் அழகிய பணிப்பெண்களும், அழகு சாதனப் பொருட்களும்... அனைத்துமே என்னை மெய்மறக்கச் செய்ய... ஏதோ சொர்க்கத்தில் பறப்பது போன்ற உணர்வில் நான் மிதந்தேன்!

எனது இரண்டடி நீண்ட கூந்தலை வருடியவாறே நான் அங்கு மாட்டப்பட்டிருந்த ஜூஹி சாவ்லாவின் படத்தைப் பார்க்க, "யெஸ் உங்களுக்கு என்ன வேண்டும்?" என்று முதலாளி




கேட்க, நான் ஜூஹியின் படத்தைக் காட்டி இந்த கட்டிங் பண்ண வேண்டும் என்று விண்ணப்பித்தேன்!

அடுத்த சில நொடிகளில் பணிப்பெண் (தோற்றத்தில் ஆங்கிலேய இந்தியர் போல் இருந்தார்!) என்னை மிகச் சிறிய மோடாவில் அமர வைத்து விட்டு, "ஸ்டெப் கட் தானே! என்று உறுதிசெய்து கொண்டு என் கழுத்தருகில் கத்திரியை வைத்தார். மேலே ஏதோ பலமாக வேலை நடக்க பரிதாபமாய் தலைகவிழ்ந்தவாறே கற்பனையில் ஜூஹியை நினைத்தவாறே நான் தரையைப் பார்க்க... அடுத்த சில மணி நேரத்தில் முன்புறம் கட்டிங் செய்யும் முன் ஒருமுறை கண்ணாடியைப் பார்க்குமாறு கேட்டுக்

## கூழுக்கும் ஆசை! மீசைக்குமா?

- ஜி.பி. சதுர்புஜன்

வேலை பார்க்கும் பெண்தான் வேண்டும் என்று சதீஷ் ஒற்றைக்காலில் நின்றான். வேலை பார்க்கும் பெண் என்றால் டபுள் இன்கம்; எந்தச் செலவுக்கும் யோசிக்கத் தேவையில்லை. எந்தப் பிக்கல் பிடுங்கலும் இல்லாமல் வசதியாக வாழலாமே என்று அவன் எண்ணம்.

அப்பாடா என்றிருந்தது எனக்கு. சதீஷ் ஆசைப்பட்டது போலவே கடைசியாக வந்து அமைந்தாள் சுமன்.

நல்ல வேலை. கை நிறையச் சம்பளம் அவளுக்கு. சதீஷின் சந்தோஷத்துக்குக் கேட்கவா வேண்டும்?

தேனிலவெல்லாம் ஒருவழியாக முடிந்து, வீடு செட் செய்து, இன்று காலை தான் அரக்கப் பரக்க ஆபீஸ் கிளம்பிக் கொண்டிருக்கிறார்கள் இருவரும்.

என்ன ஆயிற்றோ தெரியவில்லை. அவசரத்தில் இவன் ஏதோ கேட்க, அவள் ஏதோ சொல்ல, இருவருக்கும் பெரிய வாக்குவாதம் ஆரம்பித்து விட்டது. பிரளயமாய் வெடித்தது.

அடுக்களையில் இருந்த நான் சதீஷ் கத்திய கத்தலில் அதிர்ந்தே போனேன்.

"வேலை பாக்குற பொண்ணுங்கற திமிருதானேடீ ஒனக்கு...?"



பெட்டிக் கதை

கொண்டதில் எழுந்து நின்று நான் பார்க்க... ஐயஹோ! என் தலைமுடி... தண்ணீரில் நனைந்த கோழிக் குஞ்சாய் அங்கொன்றும் இங்கொன்றுமாய் இருப்பதைக் கண்டு... நான் அலறிய அலறலில்... அந்தக் கட்டிடமே அதிர்ந்தது! கட் செய்தவரும் பீதி அடைந்தார்!

முன்புறம் செய்தால் சரியாகிவிடும் என்று எவ்வளவோ வற்புறுத்தியும்... நான் அழுதுகொண்டே அந்த இடத்தை விட்டு ஓடியே வந்து விட்டேன்! இரட்டைச் சடையில், பாவாடை, தாவணி பள்ளிச் சீருடையில் ஏதோ சுமாராகவாவது இருந்த நான் ரஜினி ஸ்டைலில் பாவாடை தாவணியில் வேண்டா வெறுப்பாய் பள்ளிச் சென்ற நாட்கள் உள்ளதே... கடவுளே... நான் பட்ட அவமானங்கள்... கணக்கில் அடங்கா!

முடி வெட்டி முடிந்ததும் நான் கேட்ட கேள்வி, "நான் ஏன் ஜூஹி சாவ்லா போல் இல்லை?" என்பதுதான்! என் அசட்டுத்தனத்தையும், அதீத கற்பனையும் இப்பொழுது நினைத்தாலும் சிரிப்புத்தான் வருகிறது.

எஸ்.ஐ.எஸ்.ஐ. மூலமாக அழகுக் கலை பயின்று அழகுக் கலை பற்றிய எனது ஆர்வத்தை வளர்த்துக் கொண்டாலும், நான் முதன் முதலாக அழகு நிலையம் சென்றது எனக்கு ஒரு பாடமாக அமைந்து விட்டது! அழகு நிலையம் செல்லும் பெண்களுக்கு ஒரு வேண்டுகோள்! நமது முகத்திற்கு ஏற்றதை தகுந்த அழகு நிலையத்தில், முறைப்படி பயிற்சி பெற்ற அழகுக் கலை நிபுணர்களிடம் சிறந்த முறையில் ஆலோசனை கேட்டு, பின்பு தைரியமாகச் செய்து கொள்ளவும்.

அதற்கப்புறம் எனது முடி வளர்ந்து விட்டது! ஸ்டெப் கட்டிங், யூ கட்டிங் என பல பரிசோதனைகள் செய்தாயிற்று! இருந்தாலும்... ஆரோக்கியமான கூந்தலை வளர்ப்பது கடினம்! என்பதை நினைவில் கொள்ளுங்கள்! ஆல் தி பெஸ்ட்!

- ரம்யா ஷான்






# வியர்வை நாற்றத்திற்கு குட்பை!

**வத்சலா, பூனே.**

என் கணவர் வாயுத் தொல்லையால் மிகவும் கஷ்டப்படுகிறார். இதற்கான எளிய கைவைத்திய முறைகளைக் கூறவும்.

காலையில் எழுந்ததும் நிறையத் தண்ணீர் குடிக்க வேண்டும். வயிற்றைக் காயப் போடக் கூடாது. வாயுத் தொல்லைக்குப் பெருங்காயத்தை (கட்டிப் பெருங்காயம்) வறுத்துப் பொடிசெய்து அரை ஸ்பூன் பொடியை வெந்நீருடன் அருந்தினால் ஏப்பமாக வாயு வெளிவந்து விடும். சுக்கை விடச் சிறந்த மருந்து இல்லை. வெந்நீருடன், அரை ஸ்பூன் சுக்குப் பொடியை அருந்தினால் பலன் காணலாம். சமையலில் சுக்கு, சீரகம் இவற்றைச் சேர்ப்பது நல்லது.



மங்கையர் சக்தி மகத்தான சக்தி

மங்கையர் மலர் வெள்ளிவிழா

**ந. ராஜலட்சுமி, திருநெல்வேலி.**

எனது சித்தி மகள் + 2 முடித்து கல்லூரி செல்ல இருக்கிறாள். அவள் இதுவரை உணவில் காய்கறியோ, மோரோ சேர்த்துக் கொள்வதே இல்லை. வெறும் ரசம் சாதம் மட்டுமே சாப்பிடுகிறாள். எவ்வளவு சொன்னாலும் கேட்பதில்லை. வற்புறுத்தவும் பயமாக உள்ளது. என்ன செய்ய? (டாக்டரிடம் காட்டியாகி விட்டது).

என்னது? பயமாக இருக்கிறதா? அடக் கடவுளே! எங்கள் காலத்தில் காயெல்லாம் சாப்பிடாவிட்டால் "தலையில்

## வாழைக்காய் தேன்குழல்

**தேவையான பொருள்கள் :**

வாழைக்காய் - 2, அரிசி மாவு - 100 கிராம், வறுத்த உ. பருப்பு - 2 ஸ்பூன், கான்ஃப்ளவர் - 2 ஸ்பூன், வெண்ணெய் - சிறிது, உப்பு - தேவைக்கேற்ப, சீரகம், மிளகு - சிறிது, எண்ணெய் - பொரிப்பதற்கு.

**செய்முறை :**

வாழைக்காயை நன்கு கழுவி வேகவைத்து பிசைந்து அரிசி மாவு, உப்பு, கான்ஃப்ளவர், வெண்ணெய், சீரகம், மிளகுப் பொடி, உளுத்தம் பருப்புப் பொடி எல்லாவற்றையும் அதோடு சேர்த்துப் பிசைந்து தேன்குழல் சொப்பில் போட்டு அடுப்பில் எண்ணெயை வாணலியில் ஊற்றி வைத்து எண்ணெய் காய்ந்ததும் பிழியவும். பொன்னிறமாக வந்தவுடன் எடுக்கவும். இதுவும் கரமுர என்று சுவைக்கச் சுவையாக இருக்கும்.

- ஏ. லக்ஷ்மி கிருஷ்ணன்.



வைத்துக் கட்டுவேன்'' என்று சொன்னதற்கு நாங்கள் பயந்தோம். ஒன்று மட்டும் பயப்படாமல் சொல்லி வையுங்கள். உடல் என்னும் சுவர் இருந்தால்தான் நல் வாழ்க்கை எனும் சித்திரம் எழுத முடியும். புரதம், வைட்டமின்கள், கொழுப்புச் சத்து, மாவுச்சத்து இவ்வளவும் உடலில் சேராவிட்டால், பிற்காலத்தில் குறைபாடு நோய்கள் வரும். இன்னும் மணமாகி, தாயாகி, பாட்டியாக வேண்டுமே! எனவே உங்கள் சகோதரிக்குப் பிடித்த உணவு வகைகளை (ரசம் தவிர) என்னவென்று தெரிந்து கொண்டு சாப்பிடச் செய்யுங்கள்.

**சுந்தராம்பாள், ஆற்காடு.**

உடலில் வியர்வையால் கற்றாழை நாற்றம் அடிக்கிறது. என்ன செய்வது?

'நாற்றம் வீசும் ஓட்டைக்குடில் ஒன்பது வாசல்' என்றுதான் உடலைச் சொல்லியிருக்கிறார்கள். ஆனால், இந்த நாற்றத்திற்கு மாற்றம் இருக்கிறது. மாதம் ஒரு முறை குடல் சுத்தம் செய்ய வேண்டும். இரவில், சுக்குப் பொடி அரை ஸ்பூனுடன் சிறிது நல்லெண்ணெய் குழைத்துச் சாப்பிடவும். சற்று நேரம் கழித்துக் கொஞ்சம் பால் அருந்த வேண்டும். இதனால் முடை நாற்றம் வெகுவாகக் குறையும். சீயக்காய், பயற்றுமாவு இவைகளால் உடல் தேய்த்துக் குளித்துவர குணம் தெரியும். மற்றவர்கள் முகம் சுளிக்காமல் இருக்க நீங்கள் மென்மையான மணம் கொண்ட யூடிகொலோன் பயன்படுத்தலாம். காலை மாலை குளிப்பது நல்லது.

**ஆர். கவிதா, சீர்காழி.**

எனது உறவினர் மகளுக்கு தலைமுடி மிகவும் செம்பட்டையாக இருக்கிறது. நுனியில் பிளவும் அதிகமாக இருக்கிறது. கூந்தல் கருமையாக வளரவும், பிளவுகள் நீங்கவும் நல்ல வழி கூறுங்களேன்...

காலத்தின் கோலத்தைப் பார்த்தீர்களா? கருமையான முடி இருக்கும் இளையோர்கள் அதை ப்ளீச் செய்து செம்பட்டை நிறம் பூசுகிறார்கள். நீங்கள் கேட்பது மனதுக்கு இதமாக இருக்கிறது. தேங்காய் எண்ணெய் தடவும் பழக்கமிருந்தால் அந்த எண்ணெயில், பத்துப் பதினைந்து செம்பருத்திப் பூக்களைக் காயவைத்து அதோடு, ஆலமரத்தின் இளம்பிஞ்சு வேர்களையும் போட்டு ஊறவைத்துத் தடவி வர முடி கருமையாகும். நுனியில் பிளவு

களிருந்தால் அதிலும் எண்ணெய் தடவவும். உலர்ந்து போவதால், முடி பிளக்க வாய்ப்புண்டு.

**தங்கம், அன்பு வட்டம் எண் 432**

அடிக்கடி தொண்டைவலி ஏற்படுகிறது. முடி அதிகம் கொட்டுகிறது. உடல்சூடு தணிய கொளுத்தும் கோடையில் எனக்கு உபாயம் கூறுங்களேன்...

தொண்டை வலி, முடி கொட்டுதல் எல்லாமே உடல் சூட்டினால்தான். தினமும் இரவில் படுக்கப் போகும் முன் உச்சந்தலையில் ஒருவிரல் விளக்கெண்ணையைத் தேய்த்து, உள்ளங்காலிலும் தேய்த்து வரவும். உடல் சூடு தணியும். முதல் நாள் இரவில் ஊறவைத்த வெந்தயத்தை மறுநாள் காலையில் சாப்பிடுவது நல்லது. தொண்டைவலிக்கு நல்ல நிவாரணி, கொதிகஞ்சி. சாதம் கொதிக்கும் போது மேலாக வரும் கெட்டிக்கஞ்சியில், பனங்கல்கண்டுடன், சிறிது நெய் சேர்த்து மூன்று நாள் சாப்பிட்டுப் பாருங்கள் ஐஸ் தண்ணீர் வேண்டாமே!

**நிஷா, செகந்தராபாத்.**

நான் எம்.எஸ்ஸி., (கம்ப்யூட்டர் சயின்ஸ்) முதல் வருடம் பயிலும் மாணவி. நான் நன்றாகப் படிக்கும் நடுத்தரக் குடும்பத்தைச் சேர்ந்தவள். என்னுடைய பிரச்னை என் முகத்தில் இருக்கும் ரோமங்கள். வீட்டில் செய்யக்கூடிய குறிப்புகள் நிறைய செய்தும் பலனில்லை. என்னால் யாருடனும் சகஜமாகப் பழக முடியவில்லை. நான் நிறமாக உள்ளதால், பளிச்சென்று தெரிகிறதே என்று வருத்தப்படுகிறேன். வீட்டிலேயே செய்யக்கூடிய குறிப்பு எதுவாவது சொல்லவும். கடைசியாக உங்களை மட்டுமே நம்பி எழுதியுள்ளேன். தயவு செய்து எனக்கு பதில், பிரச்னைக்குத் தீர்வு சொல்லவும்.

## வாசகியரின் பங்குக்கு....
## இளைப்புக்குக் கஷாயம்

அடுக்குத் தும்மலால் அவதிப்படுபவர்களுக்கும், சளி பிடித்துக் கொண்டு மூச்சுவிட சிரமப்படும் ஆஸ்துமா நோயாளிகளுக்கும் இந்தக் கஷாயம் மிகச் சிறந்த மருந்தாகும்.

தூதுவளை இலை, துளசி இலை, வேப்பிலைக் கொழுந்து கொஞ்சம் எடுத்துக் கொண்டு கழுவி அரை லிட்டர் தண்ணீரில் போட வேண்டும். சித்தரத்தை துண்டு பொடி பண்ணிப் போடவும். திப்பிலி கொஞ்சம், கருஞ்சீரகம் கொஞ்சம், பூண்டு 2 பல், ஓமம் கொஞ்சம் எல்லாவற்றையும் போட்டு மிதமான தீயில் வேகவிட வேண்டும். 100 மில்லி அளவு வந்தவுடன் வடிகட்டி இளஞ்சூடாய் குடிக்கவும். கறுப்பாக இருக்கும். கொஞ்சம் பனங்கற்கண்டும் சேர்த்துக் குடித்தால் சிறிது நேரத்திலேயே இறைப்பு நின்று விடும். மூன்று முறை குடித்தால் சளி போய்விடும்.

- வை. வஸந்தாதேவி, தேனி.

கவலையை விடுங்கள். தினமும் இரவில், கால் ஸ்பூன் சுக்குப் பொடி, அரை ஸ்பூன் படிகாரப் பொடி, முக்கால் அல்லது ஒரு ஸ்பூன் கஸ்தூரி மஞ்சள் பொடி இவற்றை எலுமிச்சம் பழச்சாற்றில் குழைத்துப் பூசி விடுங்கள். பத்து நிமிடம் கழித்துப் பொடி உப்பால், சுழற்றித் தேய்த்து நீரில் கழுவி விடுங்கள். சற்று எரியும். இதை மாதம் இரண்டு அலலது மூன்று முறை செய்து வந்தால் குணம் தெரியும்.

மற்றுமொரு வகை : முதிர் வெல்லப் பாகு வைத்து அதில் எலுமிச்சை சாறு சேர்த்து அந்தப் பசையை முடி மீது தடவி வைத்து ஒரு மெல்லிய துணியை அதன் மீது ஒட்டி வைக்கவும். சற்று உலர்ந்த பின் முடி வளர்ந்திருக்கும் வாட்டத்திலேயே துணியை வேகமாக இழுத்தால் முடிகள் அகற்றப்பட்டு விடும். மிகவும் அதிகமாக இருந்தால் நல்ல அழகுக் கலை நிபுணரிடம் போவதில் தவறில்லை.

**எஸ். ஷோபனா, தண்டையார்பேட்டை.**

எனக்குத் தலையில் முன் பகுதியில் முடி கொட்டி (அதிக முடியில்லாமல்) பார்க்க அசிங்கமாக உள்ளது. இதற்கு என்ன செய்யலாம்?

பலருக்கும் இக்காலத்தில் இந்தப் பிரச்னை இருக்கிறது. இழுத்துவாரிக் குதிரைவால் கொண்டை போடுவதும், கண்ட குங்குமத்தை வகிட்டில் பூசுவதும், அதிகமாக ஷாம்பூ உபயோகிப்பதும் இதற்கான காரணங்கள். ஒரே மாதிரி வகிடு எடுக்காமல் சற்று மாற்றி எடுத்து முடி கொட்டிய பகுதியை மறைக்கலாம்.

சின்ன வெங்காயத்தை நசுக்கி எடுத்த சாறு தடவினால் முடி வளரும் என்று சொல்லுவார்கள். ஆமணக்குக் கொட்டை (விளக்கெண்ணெய் விதை)யை நசுக்கித் தேய்க்கலாம். யானைத் தந்தம் கிடைத்தால் அதைச் சீவி, சட்டியில் இட்டு வறுத்து அதனுடன் தேங்காய் எண்ணெய் விட்டுக் குழைத்துப் பூசினால் குணம் தெரியும்.

**சரோஜா ராஜகோபாலன், சென்னை - 14.**

கோடைக்காலத்தில் வெப்பம் தாங்காமல் சிவப்பு, சிவப்பாக சொறி, எரிச்சல், அரிப்பு, அதனால் சதையெல்லாம் இழுக்கிறது. முக்கியமாக அக்குள், வயிற்று பாகம், முதுகு, மார் பக்கம் வருகிறது. தோல் நிபுணரைச் சந்தித்து ஆயின்மெண்ட், கிரீம் எல்லாம் போட்டும் பலனில்லை. தாங்கள்தான் வைத்தியம் சொல்லணும்.

இறுக்கமில்லாத மெல்லிய பருத்தி ஆடைகளையே அணியவும். வேப்பிலை, மஞ்சள், சந்தனம் ஆகியவற்றை அரைத்து உடலில் பூசிக் குளிக்கவும். மென்மையான துண்டு பயன்படுத்தவும். கல்லில் பன்னீர் விட்டு அரைத்த சந்தனம்தான் நல்லது. வெயில் காலத்தில் இதற்கு, மாம் பிஞ்சுகளை அரைத்துத் தடவுவார்கள். சின்னக் குழந்தைகளுக்கு நுங்கைப் பிசைந்து தடவப் பார்த்திருக்கிறேன்.



இருபது பலாச்சுளைகளைக் கொட்டை நீக்கி, சிறு துண்டுகளாக நறுக்கிக் கொள்ளவும். சிறிதளவு எண்ணெயில் நான்கு மிளகாய் வற்றல், இரண்டு ஸ்பூன் உளுந்து, சிறு துண்டு பெருங்காயத்தை வாசனை வர வறுத்துக் கொள்ளவும். பின் பலாச்சுளைத் துண்டுகளுடன் ருசிக்கேற்ப உப்பு, புளி வைத்து, வறுத்ததையும் சேர்த்து, நைஸாக அரைத்தெடுக்கவும். சாதம், இட்லி, தோசை அனைத்திற்கும் 'மேட் ஃபார் ஈச் அதர்' இந்த பலாப்பழ சட்னி! - ஏ. ஹம்ஸத்






* செல்வி

திண்டுக்கல்லிலிருந்து பத்து கி.மீ. தூரத்தில் ராஜக்காப்பட்டி அருகே தீத்தம்பட்டி கிராமம். சுமார் முன்னூறு வீடுகளை உள்ளடக்கிய விவசாயக் கிராமம். வானம் பார்த்த பூமி. "மத்த கூலி வேலையெல்லாங் கூட வருசத்துலே கொஞ்ச நாளைக்கித்தான் வேலை வெட்டியக் கொடுக்கும். நம்மூர்லெ இந்தப் பழனிமுத்து தம்பி இந்தக் கம்பெனியெ ஆரம்பிச்சதுக்கு அப்புறமா, ஊர்ப் பெண்டுகளுக்கு வருசம் பூரா தொடர்ந்து வேலை கெடைச்சு வருது!" என்று முன்னுரை வாசிக்கிறார் கிராமத்து மூதாட்டி ஒருவர்.

பருத்தி ஒடுகன் சாக்குகளில் நிரப்பப் பட்டு, மினி டோர் லாரியில் கொண்டு வந்து இறக்கப்படுகின்றன. தண்ணீரில் அலசிக் காயவைப்பதற்கென தென்னம் பிஞ்சுகள், மூட்டைகளில் இருந்து அவிழ்த்துக் கொட்டப்படுகின்றன. சாட்டை

காடுகளில், தோப்புகளில், வரப்புகளில், பாதையோரங்களில் கிடந்து, மண்ணோடு மண்ணாக மக்கித்தானே போகும் தாவரக் கழிவுகள்? அவைகளை எல்லாம் பொறுக்கியெடுத்து ஓரிடத்தில் கொண்டு வந்து சேர்க்கிறார்கள். தண்ணீர் விட்டுக் கழுவித் தூய்மைப்படுத்தி, அதனைப் பல்வேறு வடிவங்களில் சிறு சிறு துண்டுகளாக ஆக்குகிறார்கள். வண்ணங்களைத் தந்து அவைகளைச் சிறு சிறு உருவங்களாக மாற்றி, அழகு மினிரும் கலைப் பொருள்களாக உருவாக்குகிறார்கள். தாவரக் கழிவுகளிலிருந்து தயாரிக்கப்படும் கலைப் பொருள்கள் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றன. இப்படி ஒரு கிராமம்! வாருங்கள் சென்று பார்க்கலாம்...

# குப்பையில்



✱ பழனிமுத்து

வார்க் கொன்னை மரக் காய்களை பெரிய மூட்டைகளில் கொண்டு வந்த மூதாட்டி சொன்ன அந்த பழனிமுத்து மின்னனு எடை மிஷின் வாயிலாக அதன் எடையளவுகளைக் குறித்துக் கொண்டிருக்கிறார். குப்பையில் கலை வண்ணம் தரும் இத் தொழிலைப் பற்றி உற்சாகமாக விளக்குகிறார்.. "ஒன்பது வருஷமா இந்த வேலையைப் பார்த்துக் கிட்டு வர்றோம். தாவரக் கழிவுகளை பல ஊர்கள்லேர்ந்தும் வரவழைக்கிறோம். ஆர்டர் வந்து சேர்றதை வெச்சு அதுகளைத் தயாரிச்சு சென்னையிலும், தூத்துக்குடியிலும் இருக்கற கம்பெனி களுக்கு அனுப்பிச்சு வைப்போம். அதுகளை மேலும் அவுங்க மெருகு தந்து பலவித வடிவங்களில் அழகு மிளிரும் கலைப் பொருள்களா செஞ்சு, அவுங்க சார்பிலெ அமெரிக்கா, இங்கிலாந்து போன்ற வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி பண்றாங்க!" என்கிறார் பழனிமுத்து.

"தாவரக் கழிவுகளில் வழவழப்புக் குறைவாக உள்ளவைகள் கலர் ஏறத் தாமதமாகும். வழவழப்பானவைகள் சீக்கிரமே கலர் ஏறிவிடும். கலரிங் ஓர்க்கில் கொஞ்சம் பிசகிப் போனாலும் அந்தப் பொருள்கள் அப்படியே வீணாகிப் போய் விடும். வேகவைத்துக் கலர் ஏற்றுவதி லிருந்து, அவைகளைக் காயவைத்து தக்க நேரத்தில் குவித்து அள்ளி நிழலில் கொண்டு வந்து சேர்ப்பது வரை பதம் பார்த்து கவனமாகச் செய்ய வேண்டும்" என்கிறார் பழனிமுத்துவுக்கு தொழிலிலும் தோள் கொடுக்கும் அவரது மனைவி ப. செல்வி.

தென்னம் பிஞ்சு, பருத்தி ஓடு, தூங்குமூஞ்சி வாகை இலைகள், மக்காச் சோளச் சக்கை மற்றும் தோகை, வெள் ளைச் சோள சக்கை, சாட்டைவார்க் கொன்னை மரக் காய்கள், நாணல் குச்சி

✱ கலைவண்ணம் சேர்க்கும் பெண்மணிகள்



# கலைவண்ணம்!




மங்கையர் மலர் வெள்ளிவிழா

கள், கோரைப் பூக்கள், துடைப்பக் குச்சிகள், தென்னம்பாளை, பனைமரத்து மஞ்சி, கூபாபுல் மரத்தின் காய்கள் போன்ற தாவரக் கழிவுகள் இங்கு பயன் படுத்தப்படுகின்றன. தென்னை மட்டை களின் பின்புறம் உள்ள பூப் போன்ற பகுதியைச் சேகரித்து கலர் டையிங் தரப் படுகிறது. இவை வெயிலில் காயவைத்து சேகரிக்கப்படுகின்றன. தென்னை ஓலை துடைப்பானில் கலர் செய்து அதனை முன்புறம் வளைத்து சுருள் போன்ற தோற் றத்தை ஏற்படுத்துகின்றனர்.

மக்காச்சோள தோகையில் டையிங் மூலம் கலர் கொடுத்து, அதனைச் சிறிதாக பந்து போல வடிவமைக்கப்பட்ட தெர்மா கூல் அட்டையைச் சுற்றி ஒட்டுகின்றனர். தும்பைச் செடியின் குச்சிக்கு ஒரு வண்ணம் தந்து, அதன் நடுவாக தலைமீது மக்காச்சோளத் தோகை உருண்டையைப் பொருத்தி விடுகின்றனர். ஆப்பிள் வடிவம் கொண்ட அழகுப் பொருட் களாக அவை வெளிநாடுகளுக்கு சென்னை மற்றும் தூத்துக்குடி ஆகிய நகரங்களில் இருக்கும் கம்பெனிகள் மூலமாக ஏற்றுமதியாகின்றன.

இவைகளுக்கெல்லாம் மூலப் பொருட் களான தாவரக் கழிவுகள் நத்தம், வத்தலக் குண்டு, பெரியகுளம், போடி, அய்யம் பாளையம், நிலக்கோட்டை, திருவாரூர், அறந்தாங்கி போன்ற ஊர்களிலிருந்து நித்தம்பட்டிக்கு வந்து சேர்கின்றன.

இந்தச் சிறு கிராமத்தில் சுமார் முப்பது பெண்களுக்கு நேரடியாகவும், வீட்டுப் பெண்களில் பலருக்கு மறைமுகமாகவும் வேலை வாய்ப்பளித்து வருகின்றன இந்தத் தாவரக் கழிவுகள். "எங்க ஊரு பெண்களுக்கு இது வேலை வாய்ப்புக்காக மட்டுமில்லை. மொத்தத்துலே எல்லாத்துக் கும் நல்லா பொழுதுபோக்காகவும் அமை யுதுங்க" என்று சிரித்த முகத்துடன் சொல் கின்றனர்.

கட்டுரை, படங்கள் :

**இந்திரா அரசு**

## என் அம்மா கைமணத்தில் டேஸ்டி பிஸ்கெட்!

**தேவையான பொருள்கள் :**

நெய் - 1 கப், சர்க்கரை - 1 கப், காய்ச்சிய பால் - 1 கப், தரமான கோதுமை மாவு - 5 கப், பேகிங் பவுடர் - 1 ஸ்பூன்.

**செய்முறை :**

முதல் நாள் இரவு சர்க்கரையைப் பாலில் கரைத்து கோதுமை மாவு, நெய், பேகிங் பவுடர் சேர்த்து பிசைந்து வைக்கவும். மறுநாள் பிசைந்த மாவை மெலிதாகவும் இல்லாமல், தடிமனாகவும் இல்லாமல் அப்பளமாக இட்டு, வட்ட மூடியால் அழுத்தி பிஸ்கெட் வில்லைகளை ஒரு தட்டில் எடுத்து வைக்கவும். தோசைக்கல்லை அடுப்பில் போட்டு சிம்மில் வைத்து பிஸ்கட் மாவு வில்லைகளைப் போட்டு மூடியால் மேலே மூடவும். ஐந்து நிமிடம் கழித்து பிஸ்கட்டை திருப்பிப் போடவும். இப்பொழுது மூடக் கூடாது. பொன்னிறமான, மணமான, மொறுமொறுப்பான இந்த பிஸ்கெட்டை பெரியவர் முதல் சிறியவர் வரை அனை வரும் ருசிக்கலாம்.



- சியாமளா ராஜகோபால்.

# சம்மதம்

ராகவனின் அறையில் அலாரம் அலறியது. கடுப்பில் எழுந்த ராகவன் ஓங்கி அதன் தலையைத் தட்டினான். அழும் குழந்தை சாக்லேட் பார்த்ததும் அழுகையை நிறுத்துவதைப் போல ராகவனின் கைபட்டதும் கடிகாரம் தன் அலறலை நிறுத்திக் கொண்டது.

ஜன்னல் திரையை விலக்கிப் பார்த்த போது கனமான சால்வையைப் போர்த்திக் கொண்டு அம்மா வாசலில் கோலம் போட்டுக் கொண்டிருந்தாள்.

அம்மாவைப் பார்க்கும் போது சற்று பொறாமை உணர்வு மேலிட்டது ராகவனுக்கு. அறுபது வயதைக் கடந்த நிலையிலும் எவ்வளவு சுறுசுறுப்பு, உடலிலும், மனத்திலும்!

பின்பக்கம் சென்று பல் துலக்கி விட்டு வந்தான். அம்மாவின் சுவையான காப்பி ஹாலையே மணக்கச் செய்தது. ஒருநாளும் காப்பியின் சுவை மாறியதில்லை. ரசித்துக் குடித்து விட்டு அன்றைய தினசரியைத் தேடினான். வழக்கமாக இருக்கும் இடத்தில் நாளிதழ் இல்லை. வெளியில் எட்டிப் பார்த்த போது அப்பா வராந்தாவில் உட்கார்ந்து பேப்பர் படித்துக் கொண்டிருந்தார். "ஆபீஸ் சென்றவுடன் பேப்பர் படிக்கலாமில்லையா?" என்று ராகவன் முணுமுணுத்துக் கொண்டே குளியலறைப் பக்கம் சென்றான்.

சமையல் அறையிலிருந்து சேமியா கிச்சடியின் வாசனை



ஹாலை நிறைத்தது. ராகவனுக்கு சாப்பாடு பரிமாறும் போது மெதுவாகப் பேச்சை ஆரம்பித்தாள் மரகதம்.

"எனக்கு வயது ஏறிக்கிட்டே போகுதப்பா. முன்ன மாதிரி ஓடி ஆடி வேலை செய்ய முடியலை. உனக்கு சீக்கிரமே ஒரு கல்யாணத்தைப் பண்ணிட்டேன்னா நிம்மதியா ஓய்வு எடுப்பேன். தரகர் பொண்ணுக ஃபோட்டோ எடுத்துக்கிட்டு இன்னிக்கு சாயங்காலம் வீட்டுக்கு வரேன்னு சொல்லியிருக்கிறார்."

"கல்லூரியில் இருந்து இன்னிக்கு சீக்கிரம் வந்திரு. ஃபோட்டோவில் பெண் பிடித்திருந்தால் நேரில் பார்க்க ஏற்பாடு செய்யலாம்" ராகவனை இடையே பேச விடாமல் தன் ஆதங்கத்தை வெளிப்படுத்தினாள் மரகதம்.

"சரிம்மா சீக்கிரம் வரேன்" அவசரமாக கை கழுவினான்.

ராகவன் வழக்கமாகச் செல்லும் 8.30 மணி மேகலா பேருந்து தூரத்தில் வருவது தெரிந்து, ஓடிப் போய் ஏறினான். பேருந்தைப் பிடித்த சந்தோஷம் அவன் முகத்தில் நிரம்பியிருந்தது. ஜன்னல் ஓர இருக்கையில் அமர்ந்தான். பேருந்து மெல்ல நகர அவன் எண்ணங்களும் நகர்ந்தது. அம்மா திருமணப் பேச்சை ஆரம்பித்தது நல்ல விஷயம்தான் என்று தோன்றியது ராகவனுக்கு. தன் ஆசையை வெளிப்படுத்த சரியான சந்தர்ப்பம் அமைந்துள்ளது. அம்மாவிடம் பட்டென்று விஷயத்தைப் போட்டு உடைத்து விடுவது என முடிவு செய்தான்.

கல்லூரிப் பருவத்தில் உதித்த ஆசை இன்று ஒரு லட்சியமாக அவன் மனதை ஆக்கிரமித்துள்ளது. கல்லூரியில் விரிவுரையாளராக நல்ல வேலை, கை நிறையச் சம்பளம் என்று வாழ்க்கையில் முன்னேறிக் கொண்டிருந்தாலும் தனது லட்சியத்தை மட்டும் அவன் இன்று வரை மறக்கவில்லை.

அம்மா தன் கொள்கைக்கு கட்டாயமாக மறுப்புத் தெரிவிப்பாள் என்பதை உணர்ந்த ராகவன், 'நடப்பது நடக்கட்டும். மாலையில் எப்படியும் தன் லட்சியத்தை சொல்லி விடுவது' என முடிவு செய்தான்.



இரவு ராகவன் சொன்ன வார்த்தையை கேட்டு அதிர்ச்சி அடைந்தாள் மரகதம்.

"ராகவா நீ நல்லா யோசனை பண்ணித்தான் இந்த முடிவுக்கு வந்திருக்கியா?"

"ஆமாம்மா, நல்லா யோசிச்சு ஆலோசனை பண்ணித்தான் இந்த முடிவுக்கு வந்திருக்கேன்."

"நாங்க விரும்ப மாட்டோம். எதிர்ப்போம்னு தெரிஞ்சுமா ராகவா?"

"ஆமாம்மா" தெளிவாகக் கூறினான் ராகவன். அவன் குரலில் இருந்த உறுதி மரகதத்திற்குப் பய உணர்வைத் தந்தது. பெற்றோர்களின் விருப்பத்தைப் புறக்கணித்து விட்டு தான் எடுத்த முடி

**சிறுகதை** **ஜெ. ரஞ்சனி**

# நிகரற்ற சிக்கனத்தில்...

**Gem**

**NIRMAALAYAM**

## "தூய வாழ்வின் இனிய சங்கமம்"



**ஜெம் நிர்மாலயம்.** வாழ்வின் அதிமுக்கிய வசதிகளுடன், நிறைவு தரும் பசுமைச் சூழலில், உங்கள் குடும்பத்தின் விருப்பத்திற்கும், ரசனைக்கும் ஏற்ப வடிவமைந்த ஓர் பிரம்மாண்டமான குடியிருப்பு. நீங்கள் விரும்பும் நிம்மதி, அமைதி, இருப்பிடத் தூய்மை, பாதுகாப்பு உள்ளிட்ட அனைத்தும் சங்கமிக்கும் இந்த இணையற்ற விலாசம், கோவை மாநகரின் மையத்தில், காந்திபுரத்தின் மிக அருகே கணபதியில் 12 ஏக்கர் நிலப்பரப்பில் உங்களுக்கெனவே சிறப்புடன் உருவாகி வருகின்றது.

### சிறப்பு அம்சங்கள்

• இரண்டு / மூன்று / நான்கு படுக்கையறைகள் கொண்ட 145 வீடுகள் (1190 முதல் 2965 சதுர அடி வரை) • வாஸ்து சாஸ்திர அடிப்படையில் உருவானவை • அத்திக்கடவு குடிநீர் • சுத்திகரிக்கப்பட்ட ஆழ்குழாய் கிணற்று நீர் • ஒவ்வொரு வீட்டிற்கும் சூரிய வெப்பத்தால் இயங்கும் வாட்டர் ஹீட்டர் • மதில் சுவர் • கழிவு நீர் வெளியேற வசதி • மழை நீர் சேமிப்பு வசதி • தெரு விளக்குடன் தார் சாலைகள் • இரு மருங்கிலும் மரங்கள் அமையப்பெற்ற நடைபாதைகள் • கிளப் ஹவுஸ் • ஹெல்த் கிளப் • கூடைப்பந்து, வாலிபால் விளையாட மைதானங்கள் • குழந்தைகள் பூங்கா • மின்னொளி வசதி மற்றும் செயற்கை புல்தரை கொண்ட டென்னிஸ் கோர்ட் • இண்டர்காம் வசதியுடன் 24 மணி நேர பாதுகாப்பு • வணிக வளாகம் • பல சிறப்பு மருத்துவ கிளினிக் • தானியங்கி லிப்ட் • தயார் நிலையில் ஜெனரேட்டர் • தீ விபத்து, கலவரத்தால் விளையும் சேதாரம், நிலநடுக்கம் போன்றவற்றிற்கு 10 வருட காப்புரிமை இலவசம்.

எமது இதர திட்டம்

**சௌந்தர்யம்**

சிறுவாணி ரோடு, கோவை

(For people above 50 years of age)

Phase 1 - அனைத்தும் விற்பனையாகிவிட்டது

Phase 2 - அறிவிப்பு விரைவில்

Consulting Architect for all projects :
**Ms. Mini M. Fowler**

Our Chennai Representative :
**Ms. Gita Ramesh,**
**Ph : 044 - 24463063**

**முன்னாள் ராணுவ வீரரின் சேவை நிறுவனம்**

## பால் தோசை

**தேவை :** பச்சரிசி மாவு - 1 தம்ளர், பால் - 4 தம்ளர், சர்க்கரை - 200 கிராம், ஏலக்காய்த் தூள் - 1 ஸ்பூன், உப்பு - தேவையான அளவு.

**செய்முறை :**

நீரைக் கொதிக்க வைத்து இறக்கி, அதில் மாவையும் உப்பையும் போட்டு தோசை மாவு பதத்திற்குக் கரைத்துக் கொள்ளவும். தோசைக் கல்லைக் காயவைத்து, மாவை ஊற்றிப் பரப்பி, சுற்றிலும் நெய்யை ஸ்பூனில் எடுத்து ஊற்றவும்.

தோசை மெலிதாக இருக்கக் கூடாது. சற்று கனமாக வார்க்கவும். அதன் மேல் ஒரு பெரிய மூடியினால் மூடி விடவும். சற்று நேரத்தில் 'சர்'ரென்று சத்தம் கேட்டதும் மூடியை எடுத்து விடவும். இதைத் திருப்பிப் போட வேண்டிய அவசியமில்லை. பாலை, பாதியளவு சுண்டுமாறு காய்ச்சி, சர்க்கரை போட்டுக் கரைத்து ஏலக்காய்ப் பொடி தூவவும். பரிமாறுவதற்குச் சற்று முன் ஒவ்வொரு தோசையாக பாலில் தோய்த்துத் தோய்த்து எடுத்துப் பரிமாறவும். சுவையான சத்தான தோசை ரெடி.

**- ஆர். ராஜலட்சுமி.**

வையே அவன் செயல்படுத்தி விடக் கூடுமோ என்ற அச்சம்.

அப்படி ஒரு நிகழ்வை எண்ணிப் பார்க்கவே நடுங்கினாள் மரகதம். தன் மனவேதனையை கண்ணீரில் வெளிப் படுத்தினாள். ராகவன் தவித்தான்.

தாயின் துன்பம் அவன் மனதை வருத்தியது. இப்படிப்பட்ட காரியத்திற்கு எந்தப் பெற்றோர்தான் ஒப்புதல் தெரிவிப் பார்கள்?

"எங்களுக்கு ஒரே பிள்ளை நீ. உன்னோட கல்யாணத்தை எப்படியெல்லாம் நடத்தணும்னு நாங்க தீர்மானம் செய் திருப்போம். அது உனக்குப் புரியலையா?"

"புரியுதுமா."

"புரிஞ்சு வச்சிக்கிட்டே இப்படி ஒரு முடிவை எடுக்கலாமா? நீ இதுக்கொரு சம்மதம் கேட்டு எங்ககிட்ட வந்து நிக்கறியே?"

"இல்லம்மா... என்னால் எல்லோரையும் போல ஒரு சாதாரண வாழ்க்கையை வாழ விருப்பமில்லை."

இயல்பாகச் சொன்னான் ராகவன்.

"நீ பண்ணப் போற காரியத்தால நம்ம சொந்தங்கள் ஆதரவை இழக்க நேரிடும். உறவுகள் இல்லாத ஒரு வாழ்க்கை நிம்மதியைத் தருமா?" என்று கவலையோடு கூறினாள் மரகதம்.

"உங்கள் இருவர் சம்மதம்தான் எனக்கு முக்கியம். பணத்திற்காக உறவை நாடி வருகின்ற மனித உறவுகளைப் பற்றி எனக்கு அக்கறையில்லை" ராகவன் குரலில் சிறிதளவு கோபம் காணப்பட்டது.

"கடைசியாகக் கேட்கிறேன். உன்னோட முடிவை மாத்திக்கிற எண்ணமே இல்லையா?"

"இல்லம்மா. என்னுடைய விருப்பத்திற்கு நீங்களும், அப்பாவும் ஆதரவு தருவீங்கன்னு நம்பறேன்மா. ஆனால் ஒருநாளும் உங்களோட சம்மதமில்லாம என் கல்யாணம் நடைபெறாது. இப்படிப் பட்ட ஓர் உயர்வான எண்ணங்களை உடையவனாக உங்கள் மகனாக இருக் கணும்மா. இல்லை சராசரி மனிதனாய் வாழ்ந்து மடியணுமா? நீங்களே முடிவு செய்து கொள்ளுங்கள்."

சட்டென்று மரகதம் அன்போடு ராகவனை உச்சிமுகர்ந்தாள், கதவின் மறைவில் நின்று உரையாடலைக் கேட்டுக் கொண்டிருந்த அவன் தந்தையும் உள்ளே நுழைந்து மகனைத் தழுவி அணைத்துக் கொண்டார்.

அன்று இரவு ஒரு வெள்ளைத் தாளில் 'கல்லூரி விரிவுரையாளர், வயது 28, உயரம் 5.5' அடியுள்ள இளைஞனுக்கு பார்வையற்ற பெண் தேவை. எம்மதமும் சம்மதம். விருப்பம் உள்ளவர்கள் விண்ணப்பிக்கவும். தபால் பெட்டி எண்:..........' என்று எழுதத் தொடங்கினான் ராகவன்.

இரண்டுக்கும்தான் என்கிறார்கள் இளையதலைமுறைப் பெண்கள்...

ஜீன்ஸ், குர்தா, டாப்ஸ் என்று வளையவரும் கல்லூரி மாணவிகள் பலரிடமும் கேட்டோம்...

"ஜீன்ஸ்"ல எத்தனையோ சௌகரியம் மேடம்... விதவிதமான கலர்ஸ் தேவையில்ல. ஏதோ இரண்டு வாங்கிப் போட்டா மேல டாப்ஸ் மாத்திரம் நிறைய வெரைட்டி போடறோம்... ஸோ, எகனாமிகலா இருக்கு" என்கிறார்கள் சிலர்...

"எங்க வெளியில கிளம்பினாலும் எளிதாய்க் கிளம்ப முடிகிறது. ஒரு ஜீன்ஸ், டாப்ஸ் போட்டு, தலையை ஒரு ரப்பர் பாண்ட் போட்டு




# இறுக்கிப் பிடிக்கும் ஜீன்ஸ், டாப் தேவையா?

முடிச்சா... ஓகே" என்று நேர சௌகரியக் கணக்குப் போடுகிறார்கள் சில மாணவிகள்.

புடவை பின்னுக்குத் தள்ளப்பட்டு சுரிதார் வந்தது போல... இன்று ஜீன்ஸ் தான் இளம்பெண்களின் சாய்ஸ்..

புடவையில் மயங்கிய நடுத்தர வயதுப் பெண்கள், தயங்கித் தயங்கி இன்று சுரிதாரின் பாதையில் வந்து விட்டார்கள்...

வேலைக்குப் போகும் பெண்களுக்கு சுரிதாரே வசதியான உடை என்றால், "ஹோம் மேக்கர்" பெண்களுக்குப் புடவைக்கு மாற்றாய் சுரிதார்...

என்றாலும் எது அழகு? எது வசதி? இதில் நம் பாரம்பரியம் முக்கியமா?

இளம் எழுத்தாளரும், சிறந்த பேச்சாளருமான மஞ்சுளா தியாகராஜன் என்ன சொல்கிறார்?

"இப்பல்லாம் சுடிதார்தாங்க சரியான சாய்ஸ்... பஸ்ஸெல்லாம் எங்க ஸ்டாப்ல நிக்குது? தள்ளிப்


* டாக்டர். ராதா


* மஞ்சுளா


* காந்தா சந்திரமௌலி

போயித்தான் நிறுத்தப்படுகிறது... வேலைக்குப் போற பொண்ணோ, காலேஜ் பொண்ணோ, ஓடிப் போயில்ல ஏற வேண்டியிருக்கு?"

"அப்ப புடைவைக்கு டாட்டாவா மஞ்சுளா?"

"இல்லையில்லை..." அவசரமாய் மறுக்கிறார்.

"நம்ம பாரம்பரியத்தை, ஒரு 'ரிச்லுக்' காட்ட புடைவையை மிஞ்சி ஒரு உடை உண்டா? கல்யாணம் போன்ற மங்கள நிகழ்ச்சிகளுக்கு புடைவைதான் கண்டிப்பா அணியணும்.

இன்னும் 'மேல்சாவனிசம்' மாறாமல், முதுகுக்குப் பின் கிண்டல் செய்யும் ஆண்கள் நிறைந்த நம் சமூகத்தில் மேற்கத்திய உடைகள் தேவையே இல்லை" என்பது மஞ்சுளா தியாகராஜனின் கருத்து.

திருமதி காந்தலக்ஷ்மி சந்திரமௌலி அவர்களும் எழுத்தாளர்தான். அவரைப் பொறுத்தவரை, பாவாடை தாவணியோ, புடைவையோ, சுரிதார் செட்டோ, 'அளவை'ப் பொறுத்தவரை எல்லாம் ஐந்தரை மீட்டர் துணிதானே என்கிறார்...

ஆனால், "நம்ம ஊரு க்ளைமேட்டுக்கு புடைவைதாங்க ஏற்ற உடை..." என்கிறார்.

"எப்படி...?"

"குளிர் அதிகமாக இருக்கும் வட இந்தியாவில் அவர்களுக்குக் கால்களை மூடினாற்போல உடை அவசியம். அதில் வந்ததுதான் சல்வார், பைஜாமா எல்லாம்... ஆனா நமக்கெல்லாம் வருஷம் முழுக்க வெயில்தான்... ஆகவே புடைவை அணிந்தால், காற்று ஊடுருவிச் செல்ல வசதியாக இருக்கும்... அதனால்தான் நம் முன்னோர்கள் புடைவையை அணிந்தார்கள்..." என்பது காந்தலக்ஷ்மியின் வாதம்...

ஸ்ரீரங்கா மருத்துவமனையின் மகப்பேறு மருத்துவர் திருமதி ராதா மாதவன் இறுக்கிப் பிடிக்கும் ஜீன்ஸ், டாப்பைப் பற்றி என்ன சொல்கிறார் கேட்போமா?

"இன்றைய இளம்பெண்கள், இறுக்கமான ஜீன்ஸ், பாண்ட் அணியும் போது நம்முடைய க்ளைமேட்டுக்கு ஒத்து வருவதில்லை... ஏனென்றால் நம் ஊரில் ஈரப்பதம் அதிகம். வியர்வையும் அதிகம்... இறுக்கமான உடைகளில் வியர்வை சரி

## சாந்தி! சாந்தி! சாந்தி!

**சா**ந்தி என்றால் அமைதி. மூன்றுவிதமான துன்பங்களிலிருந்து நாம் அமைதி அடைவதற்காக மூன்று முறை கூறுகிறோம்.

1. நம் செயல்களால் நமக்கே வரும் துன்பம், உடல்நோய், மனக்கவலை போன்றவை.

2. பிற உயிர்களால் ஏற்படும் துன்பம்.

3. இயற்கை சக்திகளால் ஏற்படும் புயல், பூகம்பம், மழை, இடி, தீ இவைகளால் ஏற்படும் துன்பம்.

மூவகையான இடர்ப்பாடுகள் நீங்கி எங்கும் இன்பமே பெருக வேண்டுவோம்.

- பாலகிருஷ்ணதிரிவேதி

யாக உறிஞ்சப்படுவதில்லை. எனவே தோல் வியாதி கண்டிப்பாக வருகிறது. இதனால் இளம்பெண்களிடம் உளவியல் பாதிப்புகளும் (தாழ்மை உணர்வு போன்ற) ஏற்படுகின்றன... மேலும் டாக்டர் ராதா மாதவன் தொடர்கிறார்...

"இந்த மாதிரி (ஜீன்ஸ் போன்ற) உடைகளால், பின்புறம் உட்காரும் இடங்களில், தோல் மடிப்புகளில் கட்டி வர வாய்ப்புண்டு... காற்றோட்டமின்றி அவற்றில் சீழ் உருவாகி விடும்... அது மட்டுமா?

"பெண்களின் ஜனன உறுப்புகளில் தொற்றுநோய் ஏற்பட்டு, அது உள்ளே வெஜினா, கர்ப்பப்பை வரை பரவும் அபாயமும் உண்டு. என்னிடம் அப்படியும் பல கேஸ்கள் வந்திருக்கின்றன... இதனால் பெல்விக் இன்ஃபெக்ஷன் ஏற்பட்டு, உள்ளே ஃபாலோபியன் குழாய் அடைபட்டு குழந்தை பெறும் வாய்ப்பை இழக்கவும் நேரிடும்..."

"இதெல்லாம் பயமுறுத்துவதற்காகச் சொல்லவில்லை. ஒரு எச்சரிக்கைக்காகச் சொல்கிறேன். நம் ஊர் வெப்ப நிலைக்கு இறுக்கமான உடைகளோ, குதிகால் உயர்ந்த செருப்புகளோ அணிந்து நடப்பது தேவையில்லாதது. முதுகுத்தண்டில் பாதிப்பு ஏற்படும்..."

ஒரு மருத்துவராக உடல்நலம் பாதிப்பு பற்றி சொன்னவர், சமூக அக்கறை உள்ள பெண்மணியாக,

"மற்றவரது உணர்வுகளைத் தூண்டும் விதம் நாகரிகமற்று உடையணிவது தேவையில்லாதது... உடல்நலத்தைப் பாதிப்பதுடன், சமூகப் பாதிப்புகளையும் ஏற்படுத்தும். எப்படியிருந்தாலும் உடல் ரீதியாகவோ, உள்ளம்ரீதியாகவோ பாதிக்கப்படப் போகிறது பெண்தானே?" என்கிறார்.

"மேல்நாட்டினர் நம் கலாசாரத்தைப் பின்பற்ற முயற்சி செய்து வரும் நாட்களில், நாம் அவர்களைப் பின்பற்ற வேண்டுமா?" என்பது டாக்டர் ராதா மாதவனின் கேள்வி...

**- பத்மினி பட்டாபிராமன்**

## யாமறிந்த மொழிகளிலே...

**- ஜி.பி. சதுர்புஜன்**

S1-4 சீட்டில் உட்கார்ந்தான் தமிழ்ப் பிரியன். பக்கத்தில் அவன் இளம் மனைவி செல்வி.

'கியா ஹம்கோ நீச்சே கா பெர்த் தேய்கே?' (எனக்கு உங்கள் லோயர் பெர்த் கொடுக்கிறீர்களா?) என்று அருகிலிருந்த வயதான வடக்கத்திப் பெண்மணி கெஞ்சும் குரலில் கேட்ட போது வேண்டும் என்றே அவளுக்குப் புரியாது என்று தெரிந்திருந்தும் தமிழிலேயே பதில் சொன்னான். "முடியாது... நீ தமிழிலே பேசற வரைக்கும் முடியாது! நான் சுத்தத் தமிழனாக்கும்!"

வேறு வழியில்லாமல் அந்த மூதாட்டி மேல் பெர்த்தில் ஏற முடியாமல் தரையிலேயே துணியை விரித்துப் படுத்துக் கொண்டாள்.

பாதி ராத்திரியில் திடீரென்று செல்வி விக்கு விக்கென்று விக்கினாள். தண்ணீர் கொண்டு வர மறந்து விட்டது தமிழ்ப் பிரியனுக்கு அப்போதுதான் ஞாபகம் வந்தது.

என்ன செய்வது என்று தெரியாமல் தவித்தான்.

'பானி சாஹியே க்யா? மேரே பாஸ் ஹை; லோ!' என்று அன்புடன் தண்ணீர் பாட்டிலை நீட்டினாள் அந்த வடக்கத்திய மூதாட்டி.

தன்னையறியாமல் தமிழ்ப்பிரியன் 'தன்யவாத்' என்று சொல்லித் தலை குனிந்தான்.



இந்த மாத விழா மங்கையாக தேர்வு செய்யப்பட்டிருப்பவர் சரோஜா ரங்கராஜன். எஸ்ஸார், சித்ரா, ரோஜா என்கிற பெயரிலும் சொந்தப் பெயரிலும் 1983-லிருந்தே கட்டுரைகள், சிறுகதை, ஏராள துணுக்குகள் எழுதியுள்ளார். அவற்றிலிருந்து சுருக்கப் பட்டியல் :

1983 - டிசம்பர் - திருமணம் எனக்கு திருப்புமுனை (பாட்டையெல்லாம் மூட்டைக் கட்டி வை)

1983 - டிசம்பர் - உங்கள் கணவர் ரிடையர் ஆகிறாரா?

1983 - டிசம்பர் - 'ப்ளீஸ்' பாராட்டத் தெரிந்து கொள்ளுங்கள்

1983 - டிசம்பர் - ஆரோக்கியத்திற்கு கீரை சாப்பிடுங்கள்

1983 - டிசம்பர் - விடுமுறை வந்தாச்சு

1987 - மே - 'மா' ரகசியங்கள்

1987 - செப். - சிக்கனம் அதே சமயம் கைநிறைய

1988 - மார்ச் - முடி காப்போம்

1988 - மார்ச் - மாமியார் பதவியா? ஜாக்கிரதை

1988 - டிசம்பர் - வெயிலுக்கேற்ற கீரை

1988 - டிசம்பர் - வருவது மழைக் காலமா?

1989 - ஜூன் - ஆண்களும் நளபாகம் செய்யுங்கள்

1989 - மோர்க் குழம்பு செய்யுங்கள்

1989 - தீபாவளி பட்சணங்கள்

1989 - பச்சடியோ பச்சடி

1991 - மே - விளக்கேற்றி வைப்போம்

1991 - அக்டோபர் - தீபாவளி திரிசமன்கள்

1992 - ஒரு பி.எச்.டி. உருவாகிறாள் - சிறுகதை

1992 - மனைவியை நம்புங்கள்

2001 - நவம்பர் - ஈயச்சொம்பு ரசம்

- சரோஜா ரங்கராஜன்



# விழா மங்கை



மங்கையர் சக்தி மகத்தான சக்தி

மங்கையர் மலர் வெள்ளிவிழா

# கணினி அறி நீ!

வணக்கம். நான்தான் கிளியக்கா. எல்லோரும் நலமா வளமா இருக்கீங்களா?

சரிங்க, நான் உங்களை ஒண்ணு கேட்கறேன். நடிகர் மோகன் ஒரு பேக்கிரி கடைக்குப் போய் தனக்கு கேக் வேணும்கிறதை எப்படிக் கேட்பார்? யோசிச்சுகிட்டே இருங்க. அதுக்கு முன்னாடி நாம எல்லோரும் பல்லாவரம் 'வேல்ஸ்' காலேஜுக்குப் போய் கணினி கண்மணிகள் கலாய்க்கும் ஜோக்ஸ்களை காது குளிரக் கேட்போம்!

# 7/ஜி சா:ப்ட்வேர்

அடடா, இங்க ஸ்கூலும், காலேஜும் ஒண்ணா இருக்குங்க. எல்.கே.ஜி.யில சேர்த்து விட்டா டிகிரியெல்லாம் முடிச்சு பட்டத்தோடதான் வரணும் போலிருக்கு. ஐ ஐ... அங்க பாருங்க, ஐ தண்ணீ... தண்ணீ... நீச்சல் குளம்... நீச்சல் குளம்!

ஆஹா இது காலேஜா இல்லை தீம் பார்க்கா? அங்க பாருங்க. க்ளாஸுக்கு 'கட்' அடிச்சுட்டு பொண்ணுங்க நீச்சல் குளத்துல 'தொபுகடீர்'னு குதிச்சு விளையாடிட்டு இருக்காங்க.

(என்றபடி கிளியக்கா அவர்களை நெருங்க ஒருகணம் ஆறு பேரும் ஷாக்காகிறார்கள்)

"ஏய் நாங்க எல்லாம் கேர்ள்ஸ். இங்க நீ வரக்கூடாது. தூரப்போ கிளி."

"என்னய்யா இப்படிச் சொல்லிப்புட்டீக. நானும் அக்மார்க் தமிழ் பொண்ணுதான். நமக்கு தரங்கம்பாடி பக்கம். நீங்க?"

(எல்லோரும் சிரிக்கிறார்கள்).

"இக்கட கூசண்டி.. நாங்க ஆந்திராகாரு."

"அப்படியொரு புதுகாரா! கேள்விப்பட்டதேயில்லையே."

(எல்லோரும் தண்ணியை கிளி மீது அள்ளி வீச, குளிரில் சிலிர்த்துக் கொள்கிறது கிளி).

ஓகே ஓகே. நீங்க தண்ணிக்குள்ளேயிருந்து ஒவ்வொரு ஜோக்கா அள்ளி வீசுங்க நானும் கூடப்பாரை நீச்சல் போட்டுட்டே கேட்கறேன்.



**கணினி அறி நீ!**

**Real Player**: படங்கள், பாடல்களை கணினியில் காண்பிக்க உதவும் மென்பொருள்.

**GB**: Giga Bytes, Hard Diskன் கொள்ளளவு.

**Icon**: அடையாளம் காட்டும் சின்னம்

**Smiley**: வார்த்தைகளுக்குப் பதிலாக படங்களின் மூலம் உணர்த்துவது.

**Database**: கணினியில் தகவல்களை சேகரிக்கும் அமைப்பு.

**Network Neighbourhood**: அருகிலுள்ள கணினிகளைக் குறிப்பிடுவது.

- பெருமாள்
கணினித் துறைத் தலைவர்,
வேல்ஸ் கல்லூரி.

# காலணி!

(ஜோக் மழை ஆரம்பமாகிறது)

**ஸ்வாதி** : ஒருத்தன் காப்பி கடையில காப்பி குடிக்கப் போனானாம். காப்பி விலை ஐஞ்சு ரூபாய்னு தெரிஞ்ச பிறகு ரொம்பக்



• பெருமாள்

கோபப்பட்டு ''என்னங்க பக்கத்துக் கடையில ஒரு காப்பி 50 காசு அதே நூறு காபிக்கு ஆர்டர் பண்ணா 30 காசுன்னு போர்டு போட்டிருக்கு'' என்றானாம்.

**கிளி :** ஒரு காப்பி விலை 50 காசா? எங்க தரங்கம்பாடியில கூட இவ்ளோ சீப்பா கிடையாதே...

**ஸ்வாதி :** அதானேன்னு எல்லோரும் ஆச்சர்யப்பட்டு பக்கத்துக் கடைக்குப் போனப்பதான் தெரிஞ்சது, அது ஜெராக்ஸ் காப்பி கடைன்னு!

(தண்ணீரை ஒருவர் மீது ஒருவர் அடித்தபடி கடி ஜோக்கை ரசிக்கிறார்கள்).

**பிந்து :** அன்னியன் ஸ்டைல்ல எனக்கொரு ஈமெயில் வந்துச்சு.

ஒரு மாணவன் அஞ்சு சப்ஜெக்ட்ல ஃபெயிலானா தப்பா? - தப்பில்லைங்க. அஞ்சு செமஸ்டர்ல அஞ்சு சப்ஜெக்ட்லயும் ஒருத்தன் ஃபெயிலானா தப்பா? - பெரிய தப்பில்லைங்க. படிக்கிற அஞ்சு வருஷமும் அஞ்சு செமஸ்டர்லயும் அஞ்சு சப்ஜெக்ட்லயும் தவறாம பெயிலாயிட்டே இருந்தா தப்பா? ஆமாங்க, பெரிய தப்புங்க.

(கிளி தலையைப் பிய்த்துக் கொள்ளாத குறை...)

**மௌனிகா :** (சிரித்தபடி) ஹே... அனுபவம் என்ன அழகா பேசுது பாரு.

**அம்பிகா :** இப்போ இந்தியாதான் உலகத்துலேயே சாஃப்ட்வேர் ஏற்றுமதியில முன்னணியில இருக்கு. போன வருஷம் ஒரு லட்சம் கோடிக்கு ஏற்றுமதி பண்ணியிருக்கு. இதை முன்னிட்டு தமிழ் சினிமாவும் இனி கம்ப்யூட்டர்தனமாதான் படங்களுக்கு பெயர் வைக்கப் போறாங்களாம்.

**மகேஸ்வரி :** கண்டிப்பா. 7 ஜி சாஃப்ட்வேர் காலனி, விண்டோஸ் S/o பில் கேட்ஸ், 'ரியல் ப்ளேயர்' கேட்குமே, எனக்கு 20 GB உனக்கு 18 GB, 'வைரஸ்', கண்டேன் 'சிடி'யின் செல்வன்... அப்படின்னு இனி கலக்கப் போறாங்களாம்.

**கிளி :** ம்... இதுக்கு யாரும் தார் பூசாம இருந்தா சரி. ஆமா உங்க ப்ரெண்ட்ஸுக்கெல்லாம் என்ன மாதிரியான 'user name' அதாங்க பட்டப் பெயர் வைப்பீங்க?

**தீப்தி :** ரொம்ப பந்தாவா எவளாவது திரிஞ்சா பெரிய 'ஐகான்'னு நினைப்புன்னு பேசிக்குவோம். கோள் மூட்டறவளுக்கு 'வைரஸ்'. அறிவுள்ளவளுக்கு 'மெமரி', கை வலிக்காம எழுதறவங்களுக்கு 'சிடி', எதுக்கெடுத்தாலும் சிரிக்கறவளுக்கு 'ஸ்மைலி'.

**ஸ்வாதி :** ஆமா கிளி, உங்க இனத்தோட 'டேட்டா பேஸை' எல்லாம் செக் பண்ணிட்டோம். உங்க அக்கம் பக்கத்து 'நெட்வொர்க் நெய்பர்ஹுட்' தோப்புகளிலும் விசாரிச்சுட்டோம். கிளிகளுக்கு ஜோக் அடிக்கவே தெரியாதாமே?

**கிளி :** (கோபமடைந்து) இப்புடு சூடு. நான் கேட்ட கேள்விக்கான பதிலை இப்ப செப்பண்டி.. நடிகர் மோகன், பேக்கரி கடையில போய் கேக்கை இப்படித்தான் கேட்பார்.

'மலையோரம் வீசும் காற்று
மனதோடு பாடும் பாட்டு
'கேக்'கு தா
'கேக்'கு தா'

**- ச.ந. கண்ணன்**
படங்கள் : **ஸ்ரீஹரி**



☎ 'ஈச்வரி ஜெகதீச்வரி' படித்து பரவசத்தை அனுபவிக்க, கருணைக் கடலின் அருளில் கரைய, ஓர் அற்புதத்தை உணர, ஆனந்தத்தில் இழைய, மிகச் சிறந்த பகுதி. கண்கள் கண்ணீர் சொரிய அருளை நினைத்த போது மனதின் சுமையெல்லாம் குறைந்தது.
குமரி, வளர்மதி மனோதாஸ்.

☎ சமீபத்தில் திருமணமான நான், எனது கணவரிடம் அது வேண்டும், இது வேண்டும் எனக் கேட்டதில்லை. அவராகவே சில மாதங்களுக்கு முன்பு மங்கையர் மலர் புத்தகத்தை வாங்கி வந்தார். தொடர்ந்து இதுபோலவே சில மாதங்கள். ஜூலை மாதம் வாங்கி வர மறந்து விட்டார். நான் கேட்டவுடன், உடனே 30 கி.மீ. பயணம் செய்து தருமபுரியில் இருந்து வாங்கி வந்து கொடுத்தார். சமையல் குறிப்புகள் என்னுடைய புதுமண வாழ்விற்கு பேருதவியாக உள்ளது.
கூத்தப்பாடி,
மா. கல்பனா
பழனி.

# பெண் சக்தி நினைத்தால்...




☎ 'மங்கையர் மலர்' ஒரு பிரதி ஒரு லட்ச ரூபாய் மதிப்பு பெறும். வெறும் ஒரு ரூபாய் தானே உயர்த்தியுள்ளீர்கள், மங்கையர் மலர் பத்திரிகையை அச்சாகிய காகிதமாக நாங்கள் நினைக்கவில்லைங்க, ஒவ்வொரு மலரும் எங்கள் இதயம். இதயத்திற்கு ஏதுங்க விலை?!
பெங்களூர் - 94, ராதா நரசிம்மன்.

☎ எங்க தாத்தா என் சின்ன வயதில் தீபாவளிக்கு கோணிப் பை டிரஸ்தான் உனக்கு என்று கிண்டல் செய்வார். கோணிப்பை வரவேற்பு அறைக்கு வந்து விட்டது. அதுவும் அழகாக + சிக்கனமாக + உபயோகமாக.
திருச்சி, எஸ். மீனா.

☎ நல்லாசிரியர்க்கான இலக்கணங்களை நயம் படத் தொகுத்து வழங்கியுள்ளார், பணிநிறைவெய்திய தலைமையாசிரியை வசுமதி கிருஷ்ணஸ்வாமி; நெஞ்சார்ந்த பாராட்டுக்கள் பற்பல.
இனாம்மணியாச்சி,
பி. வெங்கடலக்ஷ்மி,
ஆசிரியர்.

சொல்ல திரும்புகிறோம்

☎ கடந்த சில வாரங்களாகவே சிறு தொழில் துவங்க வேண்டும் என்கிற எண்ணம் என் மனதை அரித்துக் கொண்டிருந்தது. எந்தெந்த விஷயங்களில் முக்கியக் கவனம் செலுத்த வேண்டும் எனக் குழப்பமாகவே இருந்தது. எனது குழப்பத்தை நிவர்த்தி செய்யும் விதமாக




எங்கள் சாரபாக திருமதி கே. நாமகிரி அவர்களிடம் கேள்விகள் (சந்தேகங்களையும்) கேட்டு, "பணம் பண்ணலாம் வாங்க" என்று எங்களுக்கு தன்னம்பிக்கை டானிக் வழங்கியிருந்த மங்கையர் மலருக்குப் பாராட்டுகள்.
திருவாரூர், பாலா ரெங்கநாதன்.

☎ ஏடிஎம் எனப்படும் ஆட்டோமெடிக் டெல்லர் மெஷின் பற்றிய ஒரு பக்கத்தை மட்டும் பார்த்த எனக்கு மறு பக்கத்தையும் (விதிமுறைகளைச் சரிவர அறியாமையினால் ஏற்படும் பணநஷ்டம்) சுட்டிக் காட்டி விளக்கியது அருமை.
கோயமுத்தூர், கோமதி அனந்தமணி.

☎ 'நியூஸ் சாலட்' பகுதியில் மினரல் நீரால் ஆபத்து என வந்திருக்கிறதே! தொடர்ந்து மினரல் வாட்டர் பாட்டிலை உபயோகிப்பதுதானே உடலுக்குத் தீங்கானது?!
ஸ்ரீரங்கம், எஸ். கௌரிலக்ஷ்மி.

☎ இனிமேல் எவரும் சிப்பை 'சீப்'பாக எண்ணாமல் 'சிஃப்'ஆக எண்ண வேண்டும் என்ற அதன் முக்கியத்துவத்தை அரிய பல தகவல்களுடன் அழகுற விளக்கி விட்டார் கட்டுரையாளர் தேவி

## எச்சரிக்கை

பற்பசை ட்யூபில் கொஞ்சமே பசை எஞ்சியிருக்கும் போது அதை மேஜை மீது வைத்து, குழவியை அதன் மீது உருட்டினால் அப்பசை வெளிவந்து விடும் என்று ஒரு சகோதரி எழுதியிருந்தார். அப்படியெல்லாம் எடுத்தால் ட்யூபின் ஈயம் அதோடு கலந்து, பற்களுக்கும் ஈறுகளுக்கும் கெடுதல் விளைவிக்கும் என்று டாக்டர்கள் எச்சரிக்கிறாகள்.

- பெங்களூர், எஸ். சரோஜினி.

கிருஷ்ணன். சீப்பு வாங்காத நாளில்லை அதுபோல் அதைத் தொலைக்காத நாளுமில்லை என்றிருக்கும் எனது மகனிடம் கொடுத்து படிக்கச் செய்தேன்.

கும்பகோணம், துளசி கணபதி

☎ 'நான் பேச நினைப்பதெல்லாம்' சரோஜாதேவியின் நேர்காணல் அட்டகாசமான, ஆரவாரமற்ற கருத்துப் பரிமாறல்கள். 'பாலும் பழமும்' போல் நினைவில் இனித்தது.

சென்னை - 33, மயிலை. கோபி.

☎ உங்கள் தலையங்கத்தில் காசாலே சாகிறோம் என்ற யதார்த்த நிலையைச் சொல்லி அடுத்து 'காப்பாற்றப் போவது யார்' என ஆதங்கத்துடன் கேட்டுள்ளீர்

நியூஸ் சாலட்டில் வெளியான ஹரியானாவிலுள்ள பார்வையற்றோருக்கான பேசும் நூலகம் போல், மதுரையிலும் "விழியகம் - ரோட்டரி ஹெலன்கெல்லர் டாக்கிங் லைப்ரரி" என்ற பெயரில் நூலகம் உள்ளது. இதில், நான் தினமும் சென்று பார்வையற்ற மாணவர்களுக்கு பள்ளி, கல்லூரி, மற்றும் பொதுத் தேர்வு பாடங்களைப் படிக்கும குரல் வாலண்டியராக சேவை செய்கிறேன். இதன் தொலைபேசி எண் : 2641446.

- மதுரை, ப்ரீதா ரெங்கசாமி

கள். இது நம்முடைய ஒவ்வொருவரின் மனசாட்சியைப் பொறுத்துத்தான் இருக்கிறது. வீட்டுப் பழக்கம்தான் நாட்டில் தோன்றும் என்பார்கள். அதே போல் ஒவ்வொரு வீட்டின் மாபெரும் சக்தியே பெண்டிர்தான்.

இந்தப் பெண்சக்தி நினைத்தால் அவரவர்கள் குடும்ப அளவில் தங்களது கணவன்மார்கள், மக்களையும் ஒரு சிறந்த முறையில் செயல்பட்டு அவர்களை நல்வழி, நேர்முறைகளில் நடக்கச் செய்து ஓர் உன்னதமான சமுதாயத்தை உருவாக்க முடியும்.

கோயமுத்தூர்.
மீனாட்சி சுந்தரம் பஞ்சாபகேசன்.

☎ 'தேன் நிலவு' நிறைந்த எதிர்பார்ப்பை விதைக்கின்றது. புவனாவுக்கு வாழ்த்துக்கள். வளமான மொழிநடைக்காக. கணினி கற்போருக்குக் கைகொடுக்கும் 'கணினி அறி நீ' பகுதி சுவையாக தருகின்ற விதம் சூப்பர். "ஈச்வரி ஜெகதீச்வரி" உள்ளம் நிறைந்து மெய்சிலிர்க்க வைக்கின்றாள்.

இலங்கை. மா. மோகனா.

☎ ஜெய்ப்பூரில் துக்கம் விசாரிக்கச் சென்ற சகோதரிக்கு நேர்ந்த அனுபவம் எனக்கு இங்கு சென்னையிலேயே நடந்தது. என் தந்தை இறந்த அன்று எங்கள் அக்கம் பக்கம் இருந்தவர்கள் செய்த உதவிகள் சொல்லி மாளாது. என் சகோதரனின் செல்போனை எடுத்துச் சென்ற ஓர் அண்டை வீட்டார் அதில் இருந்த சுமார் 150 எண்களுக்கும் தகவல் கூறி விட்டார். அன்றைக்கென்று எங்கள் வீட்டு போர்வெல் ரிப்பேர் ஆகி தண்ணீர் இல்லை. பக்கத்து வீட்டில் உள்ளவர் அவர்கள் வீட்டு மொட்டை மாடியிலிருந்து எங்கள் வீட்டுத் தொட்டிக்கு சுமார் 15 நாட்கள் வரை தானாகவே தண்ணீர் சப்ளை செய்தனர்.

மற்றொரு அண்டை வீட்டாரோ எங்கள் வீட்டுக்கு வந்த அத்தனை குழந்தைகளும் பசியாறுவதற்காக பிரெட் டோஸ்ட் செய்து கொடுத்து ஹார்லிக்ஸ் கொடுத்தனர். காப்பியோ ஆறாக ஓடிக் கொண்டிருந்தது.

சென்னை - 4. ஸ்ரீவித்யா ராமன்.

பெட்டகம் 1 அட்டையில் :
தனு, மனு புகைப்படம் : ரூபி
பெட்டகம் 2 அட்டையில் :
எஸ். ஷஹிதாபேகம்
வண்ணப்படம் : ஸ்ரீஹரி

## ன வசதிகள்... அதிக சிக்கனம்...

# நிறைந்தது!



**விசேஷ வசதிகள்:**

நீச்சல் குளம், கிளப் ஹவுஸ், குழந்தைகள் விளையாடும் பகுதி, கிளோஸ்ட் சர்க்யூட் டிவி, இன்டர்காம், காம்பவுண்டு மதில் சுவர், பைப்புகளின் மூலம் கியாஸ் விநியோகம் (Optional), ஜிம்னாசியம், லவுன்ஜ், வெய்ட்டிங்ரூம் ஆகிய வசதிகள்.

**ிகளை அளிக்கிறது:**

க முத்திரை • முன்னணி கட்டடக்கலை வல்லுனர்களான சங்கர் - அசோசியேட்ஸ் டிவி, இன்டர்காம் வசதிகளால் அதிக பாதுகாப்பு பெற்றது.

Anugrah Madison 3062 R

**Visit us at: www.sreevatsaonline.com / www.sreevatsa.com**

கோவை: 8/2, மேட்டுப்பாளையம் சாலை, கோயம்புத்தூர் 641 043, இந்தியா. போன்: 91-422-243 7422 / 244 1481 / 243 2184 / 243 2042 பேக்ஸ்: 91-422-243 0899, *Email: realestate@sreevatsa.com* சென்னை: 7, காமராஜ் பார்க் தெரு, சென்னை 600 013, இந்தியா. போன்: 91-44-2595 3149 / 2596 0270 / 2595 7953 / 2596 1029-31 பேக்ஸ்: 91-44-2595 0055 / 2596 5032 / 2522 4087 *Email: Sreevatsa@vsnl.com*

# உங்கள் ரசனைக்கு



எனக்கு இது முதல் சந்திப்பு! 'முகத்திலேந்தும் சாரலை விட ரசனைமிக்கதாய் இருக்கிறது' - இது என் விமர்சன வரிகளல்ல - கவிதை வரிகள். மீண்டும் சுவைக்கிறேன் - விமர்சனத்திற்கான வரிகள்தான் என்று ரசிக்கிறேன். ஒரு புத்தகத்துக்குள் தமிழ்ப் பூக்கள் மழையாகக் கொட்டிப் பார்த்ததில்லை - மு. மாறனின் இரண்டாவது சந்திப்பில் முழுக்க முழுக்க நனைந்து விட்டவர்கள் தலையைத் துவட்ட மறந்தாலும், ஈர ஆடையை மாற்ற மறுத்தாலும் வியப்பில்லை. அப்பப்பா! உடைந்த கண்ணாடி வளையல்கள் திரும்பத் திரும்ப வண்ணக் கோலம் காட்டும் 'கலைடோஸ்கோப்' - 96 பக்கங்களில்!

'அம்மாவுக்கு' என்றதும் பிடித்த தலைப்பாயிற்றே எனப் படிக்கத் துவங்கினேன், பிடித்த புடைவைத் தலைப்பை வாய்க்குள் திணித்துக் கொண்டேன்; எங்கே வாய் விட்டு விசும்பி அழுது விடுவேனோ என்று!

மாறனது தமிழோட்டமா, கண்ணோட்டமா, எது படிப்பவர்களது மனதில் மெல்ல மெல்லப் பெய்யும் சாரலாக இறங்குகிறது? விமர்சனம் என்ற சிமிழுக்குள் அடங்காது இந்த வெள்ளம். இனி எனக்கும் அடிக்கடி கனவு வரும். வெள்ளத்தால் மூழ்கும் ஊரில் நான் கவிதைக் காகிதங்களோடு மிதப்பதாக!

- ஆர்.

**'இரண்டாவது சந்திப்பு', குமரன் பதிப்பகம், 3, முத்துகிருஷ்ணன் தெரு, தி. நகர், சென்னை - 600 017 விலை ரூ. 40/-**

## அம்மாவுக்கு...

விட்டுவிட்டு வந்த
பிறகும்
விடாமல் துரத்துகிறது
உன் நினைவுகள்

வெட்கமாய் இருக்கிறது
ஒரே வீட்டில்
அந்நியர்களாய் வாழ்ந்தது

உன்னிடம்
சிரிக்கக்கூட
தயங்கிய கொடுமை
எந்த மகனுக்கும்
வரவேண்டாம்

உறக்கத்திற்கான
இரவுகள்
அழுவதற்கென்றானது
உனதகராதியில்
மட்டும்தான்

ஊமைக்காயங்கள்
உண்டென்றாலும்
உயிரோடு எரித்தது
முதியோர் இல்ல
விடைபெறலில்
முதுகில் உணர்ந்த
உன் பார்வைதான்

- மு. மாறன்

# மங்கையர் மலர் கோலாகல வெள்ளி விழா


• குத்துவிளக்கேற்றும் வாசகிகள்

# பெங்களூரா?

பெங்களூர் சாலையில் காலை ஏழரை மணியிலிருந்தே பெண்களின் அழகு அணிவகுப்பு. காஞ்சிபுரம், போச்சம்பள்ளி, கத்வால், மைசூர் சில்க், க்ரேப், ஆரணி, பாந்தினி... என விதவிதமான புடைவைகளில் அசத்தி ஒரு 'கலர் உற்சவத்தை' ஃப்ரீயாகக் கொடுத்தனர். (இது பெங்களூரா பெண்களூரா?) சௌடையா ஹாலில் கோலாகல 'உணவும் ஊட்டமும்' கலக்கல் + அசத்தல் விழா!

விழாவை தலைமை ஏற்று நடத்த வந்தவர், வயது வரம்பின்றி எல்லார் மனதையும் அபேஸ் செய்யும் ஆச்சி மனோரமா!

கோலாகல வெள்ளி விழாவை வழங்கியோர் பாரம்பர்யமிக்க நல்லி. இணைந்து வழங்கியோர் சக்தி மசாலா மற்றும் பாரீஸ் ஷுகர் நிறுவனம்.

உள்ளே நுழையும் போதே வாசகிகளின் கைகளில் ஒரு பை. அதில் போட்டி கூப்பன், பேனா, பாரீஸ் ஷுகரின் சாம்பிள் பாக்கெட்ஸ், ஸ்ரீகிருஷ்ணா ஸ்வீட்ஸின் ஸ்பெஷல் மைசூர்பாக் என சகலமும். விழா சரியாக 9 மணிக்குத் தொடங்கியது.

ஆசிரியை ரேவதி சங்கரன் 'எல்லா உயிர்களிலும்...' என்ற இறைவணக்கத்தை பாடி வரவேற்புரை கொடுத்து அனை

ஸ்லோகன்கள் : மங்கையர் மலர் ஒரு புதுமைப் பெண்!

ஸ்லோகன் 2 : மங்கையர் மனமறிந்த மாணிக்கம்; நங்கையர் நலம் காக்கும் பெட்டகம்; பெண்கள் பாதுகாக்கும் பொக்கிஷம்!


மங்கையர் சக்தி
மகத்தான சக்தி
மங்கையர் மலர் வெள்ளிவிழா



வரையும் உணவு + ஊட்ட விழாவிற்கு வரவேற்றார். ஆரம்பமே ஜோர். "குத்து விளக்கு ஏற்ற இங்கு அரங்கில் அரிசி உண்டா... அதாங்க மங்கையர்க் கரசி, வடிவுக்கரசி..." என்று குரல் கொடுக்க, 'இதோ கலையரசி நான் இருக்கேன்' என்று ஒரு பெண் மேடைக்குத் தாவி னார். "அடுத்தது ரசம்... சாரு என்று கூட சொல் வார்கள் சாருமதி, சாரு



# பெண்களூரா!

* ஆசிரியரும், ஆச்சியும்...

லதா, ச...ர...சு என்று விண்ணப்பம் வைக்க சரசு என்ற இளம்பெண் தவழ்ந்து மேடைக்குச் செல்ல (போலியோவினால் கால் செயலற்ற பெண்) பார்ப்போர் அனைவரின் கண்களிலும் கண்ணீர்...

"செந்தமிழ் தேன்மொழியாள்...
பள்ளத்தூர் தந்த பசும்பொன்
இவளே...
இன்று பத்மஸ்ரீ ஆச்சியானார்..." என்று ஆசிரியை கணீர்க் குரலில் பாடி மனோ ரமா ஆச்சியை மேடைக்கு அழைக்க மனோரமா நெகிழ்ந்து போனார்.

காஞ்சி பட்டு, தலைநிறைய பூ, நெற்றி நிறைய குங்குமம், வாய் நிறைய சிரிப்பு, மனம் நிறைய அன்பு... இந்தக் கலவையில் மனோகரமான மனோரமாதான்.

"இத்தனை ஆடவர்கள் நடத்தும் விதவிதமான பத்திரிகைகளுக்கு மத்தியில் மிக வெற்றிகரமாக மங்கையர் மலர் சக்கைப் போடு போடுவதில் எனக்கு

ஸ்லோகன் 3 : பெற்ற அன்னை; உற்ற தோழி; மனம் போற்றும் உறவு - மங்கையர் மலர்

* காய்கறி அலங்காரப் போட்டி - ஓர் அணிவகுப்பு



மகிழ்ச்சி. இன்னிக்கு பூரா உங்களுடன் தான் இருக்கப் போகிறேன்...'' என்று சொல்ல மகிழ்ச்சியில் சில வாசகிகள் எழுந்திருந்து நடனமாடினார்கள். ரண்டக்க... ரண்டக்க என ஜாலிதான்!

அடுத்து, 'உணவும் உணர்வும்' என்ற அருமையான தலைப்பில், உணவியல் நிபுணர் லட்சுமி அனந்தநாராயணன் மிகச் சிறப்பாக உரையாற்றினார். இவர் ராமையா மெமோரியல் மருத்துவமனையில் முதன்மை உணவியல் நிபுணர் மற்றும் தலைவர். மிக சுவாரஸ்யமாக உரையை நடத்திச் சென்றார்.

இதைத் தொடர்ந்து வாசகிகளின் கேள்வி நேரம். கேள்வி கேட்டவர்களுக்கு ஜி.ஆர்.பி. வழங்கிய பெரிய நெய் பாக்கெட் பரிசு!

அடுத்து இடம் பெற்றது காய்கறி சிற்பங்கள் போட்டி. பெண்கள் அசத்தி விட்டனர். காய்கறியினால் தலையாட்டி பொம்மை, பீரங்கி, செக்கு இயந்திரம்.. என பத்தே நிமிடங்களில் செய்து பிரமிக்க வைத்தனர். செக்கு இயந்திரத்திற்கு முதல் பரிசு. பீரங்கிக்கு இரண்டாம் பரிசு.

இதற்குப் பிறகு வந்தது பாரீஸ் ஷுகர் நிறுவனம் வழங்கிய விளம்பரப் படம். சூப்பர் படம்! உங்கள் வீட்டு சமர்த்து சர்க்கரைக் குட்டி, உண்மையை உடைத்த தருணங்களை எழுதுங்கள் என திடீர் போட்டி அறிவிக்கப்பட வாசகிகள் ஃப்ளாஷ்பேக்கில் மூழ்கினார்கள். அடுத்தது தேநீர் இடைவேளை.

சூடான டீக்கு பிறகு வந்தது சுவாரஸ்யமான வினாடி-வினா நிகழ்ச்சி. மொத்தம் ஐந்து குழுக்கள். தாய்-மகள்

* பரிசு மகிழ்ச்சியில் வாசகிகள்..





* காய்கறி சிற்பங்களை வடிக்கும் வாசகியர்

* திடீர் சமையல் போட்டியில் சாலட் செய்யும் வாசகியர்



* லக்ஷ்மி அனந்தநாராயணன்



பாரீஸ் ஷுகர் திடீர் போட்டியில் 1000/- ரூபாய் பரிசு பெறும் வாசகிகள் பட்டியல் அடுத்த மாதம்....

* சந்திரமௌலி, துளசி தம்பதி

அணி, அலுவலக அணி, தாய் + மகள் + மாமியார் கூட்டணி என மிக வித்தியாசமாக இடம்பெற்றிருந்தன. நிகழ்ச்சியில் கலக்கலாக கேள்விகள் கேட்டு, வாசகிகளை கலாய்த்து காண்போரை மகிழ்வித்தனர் ஆசிரியையும் ஆச்சியும்.

முடிவாக நியூ இந்தியா இன்ஷூரன்ஸ் பெண்கள், பாரத் எலக்ட்ரானிக்ஸ் பெண்களை பின்னுக்குத் தள்ளி பரிசைத் தட்டிச் சென்றனர். வெட்கிரைண்டர்கள், பட்டுப் புடைவைகள், தோசா மேக்கர்... என பரிசுகளைப் பார்த்து பெண்கள் முகத்தில் தீபாவளி!

அடுத்தது, சக்தி மசாலா விளம்பரதாரர் நேரம்... மனோரமா சக்தி மசாலா சாந்தி துரைசாமியுடனான தன் நட்பை வாசகிகளுடன் பகிர்ந்துக் கொண்டார்.

மதிய உணவு நேரம்... ஆயிரக்கணக்கான வாசகிகளுக்கு அசராமல் உணவு படைத்தவர் பெங்களூரின் பிரபல கேட்டரிங் 'மௌலிஸ்'! ஜி.ஆர்.பி.யின் ஐஸ்க்ரீம் மற்றும் மௌலீஸின் ஸ்வீட்களுடன் வெரைட்டி ரைஸ் பிஸிபேளா, சேவை... என அதிரடி லிஸ்ட்.

சாப்பிட்டு விட்டு வாசகிகள் டபுள் உற்சாகத்துடன் திரும்பி வர, 'மோனோ ஆக்டிங்' ஆரம்பித்தது. 'காலை மணி எட்டு' என்ற தலைப்பில் நடித்து பின்னி எடுத்தனர். இத்தனை திறமையா வாவ்! அதுவும் மெட்ராஸ் பாஷையில் பேசி அசத்திய கனகதுர்காவிற்கு தௌஸண்ட்வாலா ரேஞ்சில் கரவொலி!

இதற்குப் பின் ஆரம்பித்தது திடீர் சமையல் போட்டி. லக்கி ட்ரா முறையில் கூட்டத்திலிருந்து சுமார் ஆறு பெண்களுக்கு சான்ஸ்! சாலட் போட்டி. அவர்கள் சாலட் செய்ய ஆசிரியைக் குறத்திப் பாடலை எடுத்து விட வாசகிகள் மந்திரம் போட்டாற் போல் மேடைக்குத் தாவி கும்மியடிக்க ஆரம்பித்து விட்டனர். சாலட் போட்டிக்கு நடுவர்கள் மௌலியும் அவர் மனைவி துளஸியும். ருசி, நேர்த்தி பிரஸன்டேஷன் அடிப்படையில் பரிசுக்குரியவர் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

* மெகா பரிசு பெற்ற சாமுண்டீஸ்வரி



பின்பு ஆச்சியும், ஆசிரியையுமாக 'பாட்டி வைத்தியம்' நிகழ்ச்சியைக் கொடுத்தனர்.

தொடர்ந்து வந்தது மௌலீஸ் கேட்டரிங் சந்திரமௌலியின் உணவின் பரிணாம வளர்ச்சியைப் பற்றிய சிறப்புரை. மிக சுவாரஸ்யமாகப் பேசி உள்ளம் கவர்ந்தார்.

கடைசியாக நவதான்ய காய்கறி நகை அலங்காரப் போட்டி. கொள்ளை அழகு! பச்சை மிளகாய்

ஸ்லோகன் 5: பெத்தியுடன் போட்டி; மருமகளுடன் மல்லுக்கு— மங்கையர் மலரை உரிமை கொண்டாட!



• அம்மா, மகள், மாமியார் கூட்டணி

லோலாக்கு, வாழைப் பட்டை செருப்பு, வெண்டை வில்லைகளால் தலை அலங்காரம், கொண்டைக் கடலை மாலை, மைசூர் பருப்புத் தோடு, காலிஃப்ளவர் பூச்செண்டு என வாசகிகளின் கற்பனை சக்தி + உழைப்பு நன்கு தெரிந்தது. ஆச்சியும் ஆசிரியையும் நிஜமாகவே திண்டாடினர் பரிசுக்குரியவரைத் தேர்ந்தெடுக்க. ஒருமனதாக தேர்ந்தெடுக்கப்பட்ட மங்கைக்கு நல்லி நிறுவனம் வழங்கிய ரூ. 5000/- மதிப்புள்ள பாரம்பர்ய பட்டுப் புடைவை பரிசாகக் கொடுக்கப்பட மற்றவர்களுக்கும் விபிஜேயின் ஒரு வெள்ளி கிருஷ்ண விக்கிரகம் வழங்கப்பட்டது.

இறுதியாக குலுக்கல் முறையில் ஒரு கூப்பன் எண் படிக்கப்பட மெகா பரிசாக பெரிய ஃப்ரிஜ்ஜை தட்டிச் சென்றார் வாசகி திருமதி சாமுண்டீஸ்வரி. அளித்தவர் வசந்த் & கோ வசந்த்குமார். "சில நாட்களாக ஃப்ரிட்ஜ் வாங்கலாமா? வேண்டாமா என்று வீட்டில் ஒரே டிஸ்கஷன். மேலும் 20 வருடமாக மங்கையர் மலர் படித்து வரும் எனக்கு இந்தப் பரிசு கிடைத்தது தாய் வீட்டுச் சீதனம்" என்று நெக்குருகிச் சொல்ல, எவ்வளவு பொருத்தமான நபருக்கு பரிசு சென்றுள்ளது என்று அனைவருக்கும் நெகிழ்ச்சி!

கூட்டம் கலைந்தது. ஒரே நொடியில் சௌடையா வெறிச்சென்றாகி விட்டது. வாசல் கேட்டில் சில பெண்கள் காணோம் காணோம் எனத் தேடிக் கொண்டிருக்க நமக்கு திக்! நன்றாக நடந்த விழாவில் இதென்ன குழப்பம் எதைத் தொலைத்து விட்டார்கள் எனக் கேட்கப் போக, "ஆச்சியும், ஆசிரியையும் எங்க மனசைக் கொள்ளையடிச்சுட்டுப் போயிட்டாங்க. இப்ப காணோம்" என்றனர் படுசீரியஸாக...

குறும்புக்காரப் பெண்களப்பா!

**- லதா சேகர்**

நன்றி

1. நல்லி
2. சக்தி மசாலா
3. பாரீஸ் ஷுகர்
4. விஜய் ஹோம் அப்ளையன்சஸ்
5. சௌபாக்யா வெட்கிரைண்டர்
6. பிவிஜி இண்டஸ்ட்ரீஸ்
7. விபிஜே
8. ஜி.ஆர்.பி. நெய்
9. ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ்










ஸ்லோகன் 6 : தைரியம், படிப்பு, அழகு அனைத்திலும் தன்னிறைவு கொண்டவள்

ஸ்லோகன் 7 : மங்கையர்க்காகவே பிறந்து, மலர்ந்த மலர்
கவலையை மறக்கச் செய்யும் கமகமவெனும் மலர்

SAASTHAA
SHRI CHAKKRA



முதல் பரிசு :

சாஸ்தா வழங்கும் டேபிள் டாப் வெட் கிரைண்டர்,

பரிசு பெறும் அதிர்ஷ்டசாலி : பி. ஜெயந்தி




பொருள் : எள்ளு

## எள்ளு வாழைப்பூ பச்சடி

**தேவையான பொருள்கள் :**

பொடியாக நறுக்கி வேகவைத்த வாழைப் பூ - 2 கப்,
என் வறுத்தது - 50 கிராம்,
சிவப்பு மிளகாய் - 3 (அ) 4,
புளி (பெரிய நெல்லிக்காய் அளவு) - சிறிதளவு,
பெருங்காயம் - 1 சிட்டிகை,
வெல்லம் - சிறிதளவு,
உப்பு - தேவைக்கேற்ப,
தாளிக்க - 2 ஸ்பூன் எண்ணெய்,
கடுகு - ½ ஸ்பூன்,
கறிவேப்பிலை - சிறிதளவு.

**செய்முறை :**

முதலில் ஒரு பாத்திரத்தில் வேகவைத்த வாழைப்பூவை போட வேண்டும். பின்னர் வறுத்த என், எண்ணெயில் பொரித்த பெருங்காயம், சிவப்பு மிளகாய், உப்பு, வெல்லம் ஆகியவற்றை மிக்ஸியில் போட்டு பொடி செய்யவும். இந்தப் பொடியை வாழைப் பூவுடன் சேர்க்கவும். புளியைக்










# இம்மாத இல்லத்தரசி

கரைத்து இதனையும் வாழைப்பூவுடன் சேர்க்கவும். இவை அனைத்தையும் சேர்த்து ஒரு கொதி வந்ததும் இறக்கி விடவும். வாணலியில் கடுகு, கறிவேப்பிலை தாளித்துக் கொட்டவும்.

சூடான சாதத்தில் சிறிது நெய் விட்டு இந்த என் வாழைப்பூ பச்சடியை சேர்த்துச் சாப்பிடவும். மிகவும் ருசியாக இருக்கும்.

- பி. ஜெயந்தி, பாண்டிச்சேரி - 6.

## இரண்டாம் பரிசு ரூ. 300/-

### எழுதிய எள் இலை அடை

***தேவையான பொருள்கள் :***

அரிசி - 1½ கப்,
கறுப்பு எள் - 2 கப்,
கொப்பரைத் தேங்காய்த் துருவல் - ½ கப்,
பொட்டுக்கடலை - ½ கப்,
கசகசா - 1 டீஸ்பூன்,
ஏலக்காய் - 5,
சுக்குப் பொடி - ½ டீஸ்பூன்,
பொடித்த வெல்லம் - 2 கப்

***செய்முறை :***

பச்சரிசியை நன்கு களைந்து, கல்லரித்து, நிழலில் உணர்த்தி மாவு செய்யவும். ஒரு சிட்டிகை உப்பு சேர்த்து, கெட்டியான தோசை மாவு பதத் தில் கரைத்து வைத்துக் கொள்ளவும்.

வெறும் வாணலியில் (அடுப்பை மிதமாக எரிய விட்டு) எள்ளை கொஞ்சம் கொஞ்சமாகப் போட்டு, படபடவென்று வெடிக்கும் வரை வறுக்கவும். வறுத்த பின் வாணலியைக் கீழே இறக்கிச் சூட்டிலேயே கசகசாவை ஒரு பிரட்டுப் பிரட்டிக் கொள்ளவும்.

வறுத்த எள், பொட்டுக்கடலை, கசகசா, முதலியவற்றை மிக்ஸியில் போட்டுப் பொடித்துக் கொள்ளவும். தேங்காய், ஏலப் பொடி, சுக்குப் பொடி முதலியவற்றைச் சேர்த்துக் கொள்ளவும்.

வெல்லத்தைச் சிறிது நீரில் கரைத்து வடிகட்டிய பின் கடைவைக்கவும். வாசனை போன பின் எள் கலந்த பொடியைப் போட்டுச் சுருள கையில் ஒட்டாத வண்ணம் கிளறி வைத்துக் கொள்ளவும்.

இலையை அலம்பித் துண்டாக்கிக் கொள்ளவும். இலை விறைப்பாக இல்லாமல் சற்றே துவண்டு இருக்க வேணும். இதை இரண்டு வகைகளில் செய்யலாம். நல்ல வெந்நீரில் நனைக்கலாம். இல்லாவிட்டால் இலேசான தீயில் ஒரு நிமிஷம் காட்டி எடுக்கலாம்.

இலையில் சற்றே நெய் தடவி அரிசி மாவை தோசை போன்று எழுதவும். அதன் மீது எள்ளுப் பூரணத்தை நிரப்பவும். நெய் தடவிய தோசைக் கரண்டியால் மிக இலேசாகப் பரப்பவும்.

பிறகு சட்டென்று லாகவமாக இலையை இரண்டாக மடித்து பத்து நிமிடம் ஆவியில் வேகவைத்து எடுக்கவும்.

(இலை அடைத் தட்டுக்கள் என எவர்சில்வர் பாத்திரக் கடைகளில் விற்கிறார்கள். இல்லாவிட்டால் உசிலிக்கும் தட்டிலும் வைக்கலாம்.)

இளைத்தவனுக்கு எள் என்பார்கள். நோஞ்சானாக இருக்கும் குழந்தைகளுக்கு உடம்பு தேறும். வெல்லம், எள் எல்லாம் இரும்புச் சத்து நிறைந்தவை. ஆகையால் அனிமிக்காக இருப்பவர்களுக்கும்



நிறையப் பேர் முகத்துக்கு சோப் அதிகமாகப் போட்டு கொஞ்சம் தண்ணீரில் கழுவுகின்றனர். அது தவறு. கொஞ்சம் சோப்பைக் குழைத்து நிறைய நீர் ஊற்றிக் கழுவுவதுதான் நல்லது.

- பிரேமா சாந்தாராம்.



# நானே செய்வேன்!



**புதிய அமிர்த்தா; 3E கிரைண்டிங் டெக்னாலஜியுடன்.**

## ஈஸி, எஃபக்டிவ், எக்னாமிக்கல்.

கற்கள் பொருத்தப்பட்ட இதன் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் டிரம் எடைகுறைவானதால் ஈசியாக கையாளலாம். மிக சக்தி வாய்ந்த இதன் மோட்டார் நீண்ட நாள் உழைப்பதுடன் மாவு அரைப்பதிலும் தன் தனி திறனைக் காட்டும். அனைத்திற்கும் மேலாக இதன் விலையும் நிச்சயம் எக்னாமிக்கல்தான். இனி மாவு அரைப்பது எவராலும் செய்யக்கூடிய ஈஸியான வேலை.




Easy Effective Economical

**AMIRTHAA™**
tabletop wet grinder
◂ Let it assist you ▸

உங்கள் குழந்தையும் நிச்சயம் சொல்லும் : "இனி நானே செய்வேன்".

• 2 litres capacity • High quality ABS plastic body • Space saving design • Low power consumption

**2** YEAR WARRANTY ON GRINDER | **5** YEAR WARRANTY ON MOTOR | **Optional attachments:** Coconut scraper and Atta kneader

Available at all leading out lets

Time's/Am/Tam/05

**For more details**: Chennai, Chengalpet, N.Arcot & S. Arcot-Ph: 044-26481013. Pondicherry-Ph: 0413-2234342. Thanjavur-Ph: 04362-2339561. Trichy Ph: 0431-2700728, 94434 78065. Madurai-Ph: 0452-2350488, 98425 93362. Tirunelveli, Tuticorin & K.K. Dist.-Ph: 04652-2245475. Salem- Ph: 98427 66377. Tirupur, Coimbatore & Nilgiris Ph: 0422-2314975. Bangalore-Ph: 080- 22224723. Hyderabad-Ph: 040-24753198. Vizag-Ph: 08915568826. Vijayawada-Ph:0866-2438403. Kurnool-Ph: 08518-227474, Nellore-Ph: 0861 2319066, Calicut-Ph: 0495-2367333. Delhi-Ph: 011 25722320.

*Mfd. by:* **Minit Engineers (I) P.Ltd.**, Erode-638004, TamilNadu. Ph: 0424-2227050, 2214259 e-mail: minit@amirthaa.com




கொடுக்க நல்ல பண்டம் இது.

(இலையில் அரிசி மாவை இடுவதற்கு 'எழுதுவது' என்று எங்கள் பக்கம் சொல்லுவார்கள்.)

பி.கு : இந்த என் பொடியைப் பூரண மாகக் கிளறாது, வெல்லப் பொடியைச் சேர்த்து அப்படியே ஸ்பூன் போட்டுக் குழந்தைகளுக்குக் கொடுக்கலாம். அல்லது சூடான சாதத்தில் நல்லெண்ணெய் சேர்த்து, சிறிது உப்பு சேர்த்து எள்ளு சாத மாகவும் கொடுக்கலாம்.

**- மோகனா, சென்னை - 26.**

## மூன்றாம் பரிசு ரூ. 200/-

## உப்புச் சாறு

திருநெல்வேலி மாவட்டம் நாங்கு னேரி, திருக்குறுங்குடி போன்ற ஊர்களில் தயாரிக்கப்படும் உப்புச் சாறு மிகவும் பிரபலமானது.

பேர் உப்புச் சாறு என்றிருக்கிறதே தவிர இது ''எள்ளு'' பிரதானமாகக் கொண்டு செய்யும் புளிக் குழம்புதான். இதற்கு சாம்பாருக்குப் போடுவது போல் துவரம் பருப்பு தேவையில்லை. பாசிப் பருப்பும் தேவையில்லை. ச்ரார்த்தம் போன்ற விசேஷங்களில் பண்ணுவதால் முருங்கைக்காய், காரட் போன்ற கறிகாய் களைத் தவிர்த்து மற்ற காய்கறிகளைத் 'தான்'களாகப் போடலாம். இதற்குத் தேவையான பொருள்கள் :

எள்ளு - 100 கிராம்,
உளுத்தம் பருப்பு - 2 மேஜைக்கரண்டி,
வற்றல் மிளகாய் - 10,
(காரம் அவரவர் விருப்பத்திற்கு ஏற்றபடி)
கடுகு - 1 டீஸ்பூன்,
மிளகு - ½ தேக்கரண்டி,
புளி - ஒரு பெரிய எலுமிச்சம் பழ அளவு,
உப்பு - தேவைக்கேற்ப,
நல்லெண்ணெய் - 100 கிராம்.
கறிகாய்கள் - கத்தரிக்காய், வெண் டைக்காய், சேப்பங்கிழங்கு, பாகற்காய் - தேவையான அளவிற்கு.

*செய்முறை :*

காய்கறிகளைக் கழுவி உப்புப் போட்டு வேகவைத்துக் கொண்டு புளியையும் கரைத்து வைத்துக் கொள்ள வேண்டும். எள்ளை முதலில் வாணலியில் எண் ணெய் விடாமல் 'படபட'வென்று வெடிக் கும் வரை வறுத்து எடுத்துக் கொள்ள வேண்டும். மற்ற சாமான்களைக் கொஞ்ச மாக எண்ணெய் விட்டு வறுத்துக் கொள்ள வேண்டும். கறிவேப்பிலையும் ஒரு 10 ஈர்க்குகளை உருவிய அளவு

வெறும் வாணலியில் வறுத்து வைத்துக் கொண்டு எல்லாவற்றையும் மிக்ஸியில் ரொம்ப நைஸாக இல்லாமல் 'கரகர'ப் பாகப் பொடித்துக் கொள்ள வேண்டும்.

அடுப்பில் வாணலியில் 100 கிராம் நல்லெண்ணெயை விட்டுக் காய்ந்தவுடன், கடுகைப் போட்டு வெடித்தவுடன் எள்ளுப் பொடியைப் போட்டு ஒரு கிளறு கிளறிப் புளிக் கரைசலை விட்டுத் தேவையான உப்பைப் போட்டு, காய்கறிகளையும் போட்டு நன்றாகக் கொதித்தபின் இறக்கி விட வேண்டும். கறிவேப்பிலையும் எள்ளும் கலந்து இந்தக் குழம்பு நல்ல மணமாக இருக்கும். உப்பு, காரம் இவையெல்லாம் அவரவர் வீட்டு ருசிக்கு ஏற்றபடி சேர்க்கலாம். மாவு கரைத்து விடத் தேவையில்லை.

- ரமா ரமேஷ், மதுரை.

## ஆறுதல் பரிசு ரூ. 100/-

### எள்ளு சமோசா

**தேவையான பொருள்கள் :**

புழுங்கல் அரிசி - ¼ கிலோ,
பொரி கடலை மாவு - 2 டேபிள் ஸ்பூன்,
கடலைப் பருப்பு - 2 டேபிள் ஸ்பூன்,
உளுத்தம் பருப்பு - 2 டேபிள் ஸ்பூன்,
பாசிப் பருப்பு - 2 டேபிள் ஸ்பூன்,
எள்ளு - 25 கிராம்,
மிளகாய் வற்றல் - 5,
காயப் பொடி - ¼ ஸ்பூன்,
கறிவேப்பிலை - 1 டேபிள் ஸ்பூன்,
டால்டா - 2 ஸ்பூன்,
பொரித்தெடுக்க - ரீஃபைண்டு ஆயில்,
உப்பு - தேவையானது.

**பூரணத்திற்குத் தேவையானவை :**

வெள்ளரிக்காய் - 2,
காரட் - 2,
கிளி மூக்கு மாங்காய் - 1,
தேங்காய்ப் பூ - 2 டேபிள் ஸ்பூன்,
மிளகாய் வற்றல் - 2,
எள்ளு - 2 டேபிள் ஸ்பூன்,
உளுத்தம் பருப்பு - 2 டேபிள் ஸ்பூன்,
பூண்டு - 2 பல்,
காயப்பொடி - ¼ ஸ்பூன்,
உப்பு - ½ ஸ்பூன்.

**செய்முறை :**

உளுத்தம் பருப்பையும், பாசிப் பருப்பையும் வறுத்து மிக்ஸியில் போட்டு மாவாக்கிக் கொள்ளவும். புழுங்கல் அரிசி

### வீட்டிலேயே ஃபேஷியல் பொடி



விசேஷங்கள் மற்றும் பண்டிகைகளுக்கு உபயோகிக்கும் பூக்களைத் தூக்கியெறிந்து விடாமல், காயவைத்து ஃபேஷியல் பொடி தயார் செய்யலாம். ரோஜா, மருக்கொழுந்து, மல்லிகை, செம்பருத்தி முதலிய பூக்களை இதழினை மட்டும் உதிர்த்து காயவைக்கவும். இதனுடன் காயவைத்த எலுமிச்சை மற்றும் ஆரஞ்சுப் பழத் தோல்களை சிறிதாக நறுக்கி சேர்க்கவும். பின் பச்சைப் பயறு, கஸ்தூரி மஞ்சள், வெட்டி வேரும் சேர்த்துப் பொடியாக அரைத்து வைத்துக் கொள்ளவும். 2 ஸ்பூன் ஃபேஷியல் பொடியுடன் பால் சேர்த்து கலந்து, முகத்தில் தடவி, 10 நிமிடம் ஊறியபின், குளிர்ந்த நீரில் முகம் கழுவவும். முகம் பனிச்சென்று மலர் போன்று மென்மையாக இருப்பதைக் கண்கூடாகக் காணலாம்.

- ஏ. ஹம்ஸத்



யையும், கடலைப் பருப்பையும் 2 மணி நேரம் தண்ணீரில் ஊறவைத்து நன்றாகக் கழுவி கிரைண்டரில் போடவும். அதனுடன் வற்றல், உப்பு, காயம் ஆகிய வற்றையும் போட்டு நன்கு நைசாகவும், கட்டியாகவும் அரைக்கவும். அரைத்த மாவை எடுத்து ஒரு வெள்ளைத் துணியில் போட்டு ¼ மணி நேரம் வைக்கவும். அப்போதுதான் மாவிலுள்ள ஈரத்தைத் துணி உறிஞ்சிக் கொள்ளும். இல்லையெனில் பலகாரம் கடுக்கென்று மொறு மொறுப்பில்லாமல் ஆகிவிடும். பின் மாவை ஒரு அகன்ற பாத்திரத்தில் போட்டு அதனுடன் எள்ளு, டால்டா, உளுந்து மாவு, பாசிப் பருப்பு மாவு, பொரி கடலை மாவு, அரிந்த கறிவேப்பிலை ஆகியவற்றைக் கலந்து நன்கு பிசையவும்.

**பூரணம் செய்முறை :**

வற்றல், உ. பருப்பு, எள்ளு ஆகிய வற்றைத் தனித்தனியாக வறுக்கவும். பின் அதை மிக்ஸியில் போட்டு பூண்டு, உப்பு சேர்த்துப் பொடிக்கவும். வெள்ளரி, காரட், மாங்காய் (தோல் நீக்கி) ஆகிய வற்றைத் துருவிக் கொண்டு அதனுடன் தேங்காய்ப் பூவையும், பொடித்த கலவையையும் சேர்த்துக் கிளறவும். உடன் நல்ல எண்ணெய் சிறிது ஊற்றி உப்பு சேர்த்து வைக்கவும்.

பின் மேற்கூறிய சமோசாவிற்குரிய மாவை சிறு உருண்டையாக உருட்டி ஒரு வெள்ளைத் துணியில் வைத்து வட்டமாகத் தட்டி அதன் நடுவில் பூரணத்தில் ஒரு ஸ்பூன் எடுத்து வைத்துப் பாதியாக மடித்து ஒட்டி விடவும். இது மாதிரி பத்து பத்தாக செய்து எண்ணெயில் போட்டுப் பொரித்து எடுக்கவும். கடச்சட சாப்பிட வித்தியாசமான சுவையுடன் நன்றாக இருக்கும்.

**- மீ. சாந்தா, தூத்துக்குடி.**

## ஆறுதல் பரிசு ரூ. 100/-

## கார்ன் கத்தரி எள்ளு ஃப்பிரை

**தேவையான பொருள்கள் :**

நாட்டுக் கத்திரி - ¼ கி (வட்டமாக வெட்டவும்)
பேபிகார்ன் - 1 கட்டு (வட்டமாக வெட்டவும்)
புளிக்கரைசல் - 1 தேக்கரண்டி,
தக்காளி - 2 (பொடியாக அரியவும்)
ப. மிளகாய் - 3 (பொடியாக அரியவும்)
இஞ்சி - சிறு துண்டு
எண்ணெய் - 2 தேக்கரண்டி/பொரிக்க
உப்பு - ருசிக்கேற்ப,
தேங்காய்ப் பால் - ¼ கப்,
வெள்ளை எள் - 2 தேக்கரண்டி,
சீரகம் - 1 தேக்கரண்டி.

**வறுத்துப் பொடிக்க :**

உ. பருப்பு, க. பருப்பு - தலா 1 தேக்கரண்டி, பொட்டுக்கடலை - ½ தேக்கரண்டி, வெள்ளை எள் - 1½ தேக்கரண்டி, மிளகாய் வற்றல் - 6, தேங்காய்த் துருவல் - 4 தேக்கரண்டி.

**மேல்மாவிற்கு :**

கடலை மாவு - ½ கப், அரிசி மாவு - 3 தேக்கரண்டி, அஜினோமோட்டோ - 1 சிட்டிகை, உப்பு - ருசிக்கேற்ப, மிளகாய்த் தூள் - ½ தேக்கரண்டி.

**செய்முறை :**

பேபிகார்னோடு கடலை மாவு, அரிசி மாவு, அஜினோமோட்டோ, மிளகாய்த் தூள், உப்பு, வெள்ளை எள் கலந்து தண்ணீர் தெளித்துப் பிசிறி அரை மணி நேரம் ஊறவிடவும். எண்ணெயில் மொறு மொறுவென்று பொரித்துக் கொள்ளவும். கடாயில் எண்ணெய் விட்டு சீரகம் தாளித்து கத்திரியை சேர்க்கவும். புளிக் கரைசலோடு தண்ணீர் சேர்த்து, கத்திரியை வேகவிடவும். வெந்ததும் பச்சை மிளகாய், இஞ்சி, தக்காளி சேர்த்து நன்கு வதக்கவும். கலவை கொஞ்சம் கொதித்ததும், வறுத்து அரைத்த பொடியைச் சேர்த்துக் கிளறவும். பொரித்து வைத்துள்ள பேபிகார்னைச் சேர்த்துக் கிளறவும். எல்லாம் ஒன்றாக நன்கு கலந்ததும் தேங்காய்ப் பால் விட்டு இறக்கவும். கொத்துமல்லி தூவி சூடாகப் பரிமாறவும். புதுமையான சுவையோடு மணமாக இருக்கும். பூரி, சப்பாத்தி, கீ ரைஸ், ப்ரைட் ரைஸ் போன்றவற்றிற்கு சிறந்த காம்பினேஷன்.

பி.கு : கொத்துமல்லிக்கு பதில் வெங்காயத்தாள் தூவினாலும் ருசியாக இருக்கும்.

**- ஏ. சாரதா, சென்னை - 7.**





# கடமைக்குப் பின்தான் ஞானம்!



**ஒலிப்பது ஒரு குரலல்ல பல குரல்கள்!**

எவன் கடமையிலிருந்து வழுவுகிறானோ அவனுக்கு என்றும் ஞானம் கிட்டாது என்கிறது கீதை!

ஒரு வாசகியின் குமுறல், பல உள்ளங்களில் புதைந்து கிடந்தவற்றை எரிமலையாக வெடிக்க வைத்ததைக் கண்டு உண்மையிலேயே கலங்கி விட்டோம். எந்த இயக்கம் என்பதைக் குறிப்பிட்டு யாரையும் புண்படுத்த விரும்பவில்லை. பல இயக்கங்கள் செயல்பட்டு வருகின்றன.

முதலில் குடும்பம், அதிலுள்ள தாய், தந்தை, மனைவி, சகோதரர் என அன்பு வட்டம் விரிந்தால்தான் கடமைகளும் முறையாக்கப்படும். அதன் பயனாக ஞானம் பெற முடியும். இறைவனது படைப்பின் நியதியும் அது தான். ஒரு வாசகியின் குமுறலின் எதிரொலியாக வந்த கடிதங்களை உங்களுடன் பகிர்ந்து கொள்கிறோம். **(ஆர்.)**

'தமிழக முதல்வருக்கு ஒரு வேண்டுகோள்' படித்தேன். என் மாமா பையனும் அந்த இயக்கத்தில் சேர்ந்து குடும்பத்தை விட்டு விலகி 7/8 மாதங் கள் அவர்களுடனே தங்கி பிறகு அவர்களின் சுயரூபம் தெரிந்தவுடன் மிக வும் சாமர்த்தியமாக அவர்களிடமிருந்து தப்பித்து வீடு வந்து சேர்ந்தான். இதனால் அவனுக்கு ஒரு வருடப் படிப்பு வீணானது.

**- மைசூர் வாசகி.**

முதலில் யோகா என்றுதான் பிரபலமான ஒரு மையத்துக்குச் சென் றேன். அவர்கள் கூறிய ஒவ்வொரு வார்த்தையும் என் மனத்தில் பசுமரத் தாணி போல் பதிந்து விட்டது. (மூளைச்சலவை மாதிரிதான்) ஏற்கெனவே ஆன்மிகத்தில் அதிக ஈடுபாடுடைய நான், அந்த இயக்கத்திலும் மிகுந்த ஈடுபாடு கொண்டேன். அதனால் நான் கேட்ட கேள்விகளும் என்னுடைய அதீத ஆர்வமும், துடிப்பும் அவர்களைக் கவர்ந்தது.

ஆனாலும், என் மனது மட்டும் மிகவும் தெளிவாக இருந்தது. முதலில் என் குடும்பம், பிறகுதான் மற்றவையெல்லாம் என்றும், ஆன்மிகத்திற்கென்று ஒரு வயது, காலகட்டம் உண்டு. அதுவரை நாம் பொறுத்திருந்து, முதலில் வீட்டுக்குத் தேவையான கடமைகளைச் செய்து, பிறகு ஆன்மிக சேவை செய்யலாம் என்று எனக்குள்ளேயே நான் தெளிவாக இருந்த காரணத்தால், நான் அவர்களை நோக்கி இழுக்கப்படுவதை அறிந்து, அதிலிருந்த என் ஈடுபாட்டைக் குறைத்துக் கொள்ள ஆரம்பித்தேன். இப்போது, அதிலிருந்த நல்ல கருத்துக்களை மட்டும் மனத்தில் நிறுத்தி வாழ்வில் முன்னேறிக் கொண்டு இருக்கிறேன். **- மங்கையர் மலர் வாசகி.**

'தமிழக முதல்வருக்கு ஒரு வேண்டுகோள்' கட்டுரையை மாமரக் காற்று வாங்கியபடி படித்துக் கொண்டிருந்தேன். தினமும் வரும் மிக வயதான

பூக்காரம்மா பூ கொடுத்துக் கொண்டே, ''இன்னா விஷயம்? ஜெயலலிதாம்மா ஃபோட்டோ வந்திருக்கு?'' என்றதும் ஆன்மிக இயக்கத்தால் ஒரு பெண்ணுக்கு ஏற்பட்ட வேதனை பற்றியும் இதுபோன்ற ஆன்மிக இயக்கங்களைக் கட்டுப்படுத்த வேண்டும் என எழுதி இருப்பதைப் (படித்து) சொன்னதும், வயதான பூக்காரம்மா மிகவும் உணர்ச்சிவசப்பட்டு,

''ஆன்மிக இயக்கம் இரத்தத்தை உரியும்னா அரசியல் இயக்கம் உயிரையே உறிஞ்சுடும். ஸ்கூல்ல படித்து கொண்டிருந்த என் மகனை போராட்டம் நடத்த இழுத்து நல்லா படிக்கிற பயல போஸ்டர் ஒட்ட வச்சு மூளைச்சலவை செஞ்சாங்க. கொஞ்சம் கொஞ்சமாய் எம் மகனுக்கு சாராயப் பழக்கத்தை ஏற்படுத்தி அடிதடி ரகளைன்னு அவனை உசுப்பி விட்டு, போராட்டம், தியாகம், அது இதுன்னு எங்க குடும்பத்திலிருந்தே "என் மகனை பிரிச்சு" கடைசியில் அவன அந்த இயக்கத்திற்காக தீ குளிக்கவும் வச்சுட்டாங்கம்மா. அவன் மட்டுமல்ல. அவனாட்டம் உள்ள இளசுகளை அரசியல் இயக்கங்கள் கெடுத்துக் குட்டிச்சுவராக்கி கடைசியில அம்போன்னு விட்டுட்டாங்க.

ஆன்மிக இயக்கத்தை அரசாங்கம் கட்டுப்படுத்தணும்னு வேண்டுகோள் விடுத்தது போல அராஜக அரசியல் இயக்கத்தையும் கட்டுப்படுத்த எழுது தாயி முதல்ல. "அரசியல் அராஜக வவுத்து எரிச்சல எளுதும்மா" கண்ணீர் மல்க வேண்டுகோள் விடுத்து விட்டுச் சென்றாள்.

**- என்ஷா, கடலூர்.**

**ம**ங்கையர் மலர் வாசக சகோதரியின் ஆன்மிக அனுபவம், படித்து அதிர்ச்சியும் வருத்தமும் அடைந்தோம். வீட்டில பிரச்னை என்றால் தீர்த்து வைக்க பெரியவர்கள் இல்லாத நிலையே இதுபோன்ற நிகழ்வுக்குக் காரணம்! மங்கையர் மலர் போன்ற இதழ்கள் அவரின் கண்ணீர் மறைய உதவட்டும்!

**- இ. சித்ரா, சென்னை - 89.**

**இ**த்தகைய இயக்கங்கள் வளரக் காரணமே நம்முடைய அறியாமை, வலிமை வாய்ந்த பத்திரிகைகள், தொலைக்காட்சி நிறுவனங்கள் இவைகள்தாம். சகட்டு மேனிக்கு எல்லாவற்றுக்கும் விளம்பரம், முக்கியத்துவம் தரப்படுகின்றன. தராதர

மின்றி உண்மை நிலை தெரியாமல் இவற்றின் மூலம் ஈர்க்கப்படுகின்றனர் மக்கள். கடவுளின் பெயரைச் சொல்லிக் கொண்டு இம்மாதிரி வளரும் அமைப்புகளை நாம்தான் அடக்க வேண்டும். நம் மனத்தை அடக்கி வீட்டிலேயே தியானம் செய்யவோ, பூஜை செய்யவோ பக்குவப்படுத்திக் கொள்ள வேண்டும், பாதிக்கப்பட்டவர்கள் ஒன்று சேர்ந்து அரசின் கவனத்துக்குக் கொண்டு வர வேண்டும்.

- இரா. வேதவல்லி,
திருச்சி.

**“எம்.**பி.ஏ. முடித்து மிக உயர்ந்த நிலையில் பணியாற்றி வந்த எனது கல்லூரித் தோழரும், அவரின் தம்பியும் இது போன்ற ஒரு பக்தி இயக்கத்தில் சிக்கி, நோயாளிகள் போல் நடமாடி வருகின்றனர்.

- ஹிமயா, பொன்மலை.

**த**ற்காலத்தில் பணம் சம்பாதிக்க இதுவும் ஒரு வழி. ஏனெனில் மக்கள் இப்போது அதிக பிரச்னைகளாலும், மன அழுத்தத்தாலும் அவதிப்படுகிறார்கள். வசதி, வாய்ப்பு அதிகத் தேவையெனவும் ஆகி விட்டதால், மனிதர்களுக்கு மனபலம் மிகவும் குறைந்து விட்டதால் யாராவது நம் மனதிற்குகந்த மாதிரி, நம்பும்படி, அழகாகச் சொன்னால், எத்தைத் தின்றால் பித்தம் தெளியும் என இருப்பவர்கள் அதில் சீக்கிரம் மாட்டிக் கொள்கிறார்கள். அந்த வலையிலிருந்து வெளிவர இன்னொரு ஆன்மிக ஆள் தேவைப்படுமா? இது என்ன பைத்தியக்காரத்தனம். சட்டம் போட்டு இவற்றை மாற்ற முடியுமா? நாம்தான் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். மனிதர்களை விட அந்த ஆண்டவனை நம்புங்கள். மனிதர்களிடம் கொண்டு பணத்தைக் கொட்டுவதை விட கோயிலுக்குச் செல்லுங்கள். இரண்டு விளக்கு ஏற்றி விட்டு மெய்யுருக வேண்டிக் கொண்டு வாருங்கள். முடியவில்லையா - வீட்டிலேயே ஸ்வாமிக்கு விளக்கேற்றி விட்டு எளிமையாக, அமைதியாக அதன் முன் ஒரு பத்து நிமிடம் அமருங்கள். மிகவும் ஏழைப்பட்ட தேவைப்பட்டவர்களுக்கு நம்மால் ஆனதைச் செய்தால் அந்த ஆண்டவனே இறங்கி வருவான். மனோதிடமும், நம் மேல் நாம் வைத்திருக்கும் நம்பிக்கையுமே நம்மைக் காப்பாற்றும். வேஷதாரிகள் அல்ல.

- டி.எம். பானுமதி

# 10 பாற்கடலில் உதித்த திருமணியே!

**தொ**ன்றுதொட்டு நமது முன்னோர்கள் அன்றாட வாழ்வில் இயல்பாக லக்ஷ்மியை வழிபட்டு வந்திருக்கின்றனர். காலையில் எழுந்து விளக்கேற்றி விட்டு வீட்டு வேலைகளைச் செய்தபடியே ஒருமித்த மனத்துடன் அன்று பாடிய பாரம்பரியமான பாடல் இன்னும் காதுகளில் ரீங்காரம் செய்து கொண்டுதான் இருக்கிறது.

"சேவித்தெழுந்திருந்தேன் தேவி வடிவம் கண்டேன்
வச்சிரக்கிரீடம் கண்டேன் வைடூர்ய மேனிகண்டேன்
முத்துக்கொண்டைகண்டேன்
முழுப்பச்சை மாலை
கண்டேன்
சவுரிமுடி கண்டேன்
தாழைமடல் சூடக்கண்டேன்
பின்னழகு கண்டேன்
பிறைபோல நெற்றி கண்டேன்
சாந்துடன் நெற்றி
கண்டேன் தாயார் வடிவம்
கண்டேன்
கமலத்திருமுகத்தில்
கஸ்தூரிப் பொட்டுக்
கண்டேன்
மார்பில் பதக்கம் மின்ன
மாலை யசையக் கண்டேன்
தங்க ஒட்டியாணம்
தகதகவென ஜொலிக்கக்
கண்டேன்
காலில் சிலம்பு கண்டேன்
காலாழிப் பீலி கண்டேன்..."



இப்படி மங்கள நாயகியை உச்சி முதல் பாதம் வரையில் துதித்து மகிழ்ந்து,

"மாங்கல்யப் பிச்சை
மடிப்பிச்சை தாருமம்மா
சந்தானப் பிசையுடன்
தனங்களையும் தாருமம்மா
பெட்டி நிறையப்
பூஷணங்கள் தாருமம்மா
பட்டி நிறையப் பால்பசுவைத் தாருமம்மா
கொட்டகை நிறையக் குதிரைகளைத் தாருமம்மா
புகழுடனே வந்து எந்தன் சக்திக்கே நில்லுமம்மா
அகந்தனிலே வந்து எந்தன் அகம் தனிலே வாழுமம்மா!

என நீங்காத செல்வமாகிய திருமகளைத் தத்தம் வீட்டில் நிரந்தரமாக வாழும்படி வேண்டி நீங்காத செல்வம் நிறைந்து வாழ்ந்தனர்.

ரேவதி சங்கரன்



* தன்துரா-அலக்ஷ்மி

உலகமே விரும்பும் செல்வத் திருமகள் எங்கிருந்து வந்தாள்? அழியாத்தன்மை தரும் அமுதம் பெற வேண்டி ஒருமுறை தேவர்களும் அசுரர்களும் மந்தர மலையை மத்தாக்கி வாசுகியை நாணாக்கிப் பாற்கடலைக் கடைந்தனர். அப்போது செல்வம் நல்கும் திருமகள், அழகெலாம் ஒருருவாய் ஆயிரம் இதழ்த் தாமரையில் சிவந்த ஆடை உடுத்து வச்சிரக் கிரீடமும் வைடூர்ய மேனியுமாய் நவரத்ன மணி அணிகள் பூண்டு மங்கலச் செல்வியாய்க் கைகளில் அக்ஷய பாத்திரம் ஏந்திக் காண்போர் வியக்க எழுந்தாள். அவளோடு கூடவே நினைத்ததை அருளும் காமதேனு, கற்பக விருக்ஷம், சிந்தாமணி, ஐராவதம், உச்சைச்ரவஸ் எனும் குதிரை, சார்ங்கம் எனும் வில், கதை, பாஞ்சஜன்யம் எனும் சங்கு, மன்மதன், ரம்பை, வைஜயந்தி மாலை, மற்றும் அமுத கலசம் ஏந்திய தன்வந்த்ரியும் வெளிப்பட, மென்னடை இட்டு வந்த லக்ஷ்மி வைஜயந்தி மாலையைத் திருமாலின் கழுத்திலிட்டு, அவரது திருமார்பில் நீங்காத செல்வியாய் நிறைந்தாள்.

பாற்கடலில் பிறந்த லக்ஷ்மி, நாராயணனின் தேவி. ஆனால் ஈச்வரி ஜகதீச்வரியான அன்னை மஹாசக்தி, மஹாலக்ஷ்மி துர்க்கையாகப் பல ஆயுதங்களைக் கரங்களில் தரித்தவளாய் சிம்மவாஹினியாய்ச் சித்திரிக்கப்படுகிறாள். அவளே கோலமுடன் கோலாப்பூரில் விளங்கும் மஹாசக்தி மஹாலக்ஷ்மி.

மஹாவிஷ்ணு உலகினைச் சிருஷ்டிப்பது எப்படி என எண்ணி மயங்கி நிற்கையில், அவருக்குள்ளே உறங்கிக் கிடந்த மாபெரும் சக்தி, மஹாலக்ஷ்மி, ஒளிப் பிழம்பாய் வெளிவந்து தனது உள்ளங்கையில் இச்சாசக்தி எனும் விதையினை வைத்துக் கொண்டு வீரியமிக்க சக்திகளை இயக்கி மூவுலகங்களையும் படைத்ததோடு அதில் பல்லாயிரக்கணக்கான உயிரினங்களையும் படைத்ததாகப் பாஞ்சராத்ர புராணம் காட்டுகிறது!

கனவுகளை நனவாக்கும் முழுமையான படைப்பாம் பிரகிருதி அவளே!

தனக்குள்ளே அனைத்தையும் கொண்டு தானாய் ஆளுகின்ற இயற்கை அவளே!



* இரு சகோதரிகள்

இனிதான கனவுலகில் உயிர்களை மிதக்கவிடும் தெய்வீக மாயை அவளே!

அளவற்ற சக்தி! அளப்பரிய சக்தி! அகிலத்தைக் காக்கும் அன்னை மஹாசக்தி!!

## அதிசயம்

## 2. லக்ஷ்மியும் அலக்ஷ்மியும்

பாற்கடலில் பிறந்த மங்கள உருவினள் மஹாலக்ஷ்மி. அதற்கு முன்னரே வாசுகி எனும் நாகம் சிந்திய காலகூட விஷத்திலிருந்து உருவானவள் மூத்தவளான அக்காள், ஜேஷ்டா எனப்படும் அலக்ஷ்மி. இதில் அதிசயம் என்னவென்றால், முற்றிலும் மாறுபட்ட குணங்களைக் கொண்ட சகோதரிகள் இருவரும் ஒருவரை ஒருவர் நேசித்தும் பிரியாமலும் இருக்கிறார்கள் என்பது தான். இருவரையும் வணங்க வேண்டும் என்று சில சாத்திரங்கள் கூறுகின்றன. லக்ஷ்மியை வரும்படியும், அலக்ஷ்மியை வராமல் இருக்கவும் வேண்டுவதுதான் முறையாம்.

லக்ஷ்மி விரும்பியபடியே மஹாவிஷ்ணுவை மணந்து வைகுந்தத்தில் மகிழ்ச்சியாக வாழ்வது கண்டு அக்காள், தங்கையிடம் வந்து, "எனக்கு வசிக்க வீடும் இல்லை, மணக்க மணாளனும் இல்லையே!" எனக் கண்ணீர் விட்டு வருந்தினாளாம். கருணைத் திருவான லக்ஷ்மி, தனது சகோதரியிடம், "நானில்லாத இடங்களெல்லாம் உனக்குச் சொந்தமாக்கிக் கொள். 'அழிவு' என்னும் தேவன் உனக்கு மணவாளன் ஆவான். எங்கெல்லாம் அசுத்தம், அழுகின்மை, பேராசை, சோம்பல், பொறாமை, கோபம், நிழல், புழுதி, பொய்மை, காமம், க்ரோதம் காணப்படுகிறதோ அவையெல்லாம் நீ வாழுமிடம் ஆகட்டும்" என்று ஆணையிட்டாளாம். அன்று முதல், அலக்ஷ்மியை வரவேற்க விரும்பாமல் மங்கையர் அனைவரும் தமது இல்லங்களையும் உள்ளங்களையும் சுத்தமாக்கி வைக்கத் துவங்கினராம். அலக்ஷ்மிக்குப் பிடிக்காதவை சுத்தம், ஒளி, வெப்பம், நறுமணம், நல்ல ஓசை, இனிப்பு.

எனவே பெண்கள் எல்லோரும் காலை மாலை இருவேளைகளிலும் வீட்டையும் வாசலையும் சுத்தம் செய்து, விளக்கேற்றி வைத்து, நறுமணம் பரப்பும் தூபங்களை ஏற்றி, மணியோசை எழுப்பி, சங்கநாதம் முழங்கி இனிப்புகளைப் படைத்து லக்ஷ்மியை வணங்குவதில் அதிக ஆர்வம் காட்டினராம்.



• ஸ்ரீசக்ரம்



• ஸ்வஸ்திக்

வட இந்தியாவில் லக்ஷ்மி உருவத்தின் அருகில் அலக்ஷ்மியான ஆந்தையின் உருவத்தையும் காணலாம். ஒருவனுக்குச் செல்வம் வந்து குவியும்போதே அகம்பாவமும் மடத்தனமும் கூடவே வருவதால் அதுவே அவனது அழிவுக்கும் காரணமாகிறது என்ற பேருண்மையை விளக்கவே ஆந்தையின் உருவமாம். லக்ஷ்மிக்கு மரியாதை குறைந்தால் உடனே வறுமையான ஆந்தை அவர்களைப் பிடிக்கும் என்பது தான் உண்மை.

மொத்தத்தில் அக்காளும் தங்கையும் ஒருவர் வளர்ந்தால் மற்றவர் தேய்ந்து ஒருவரோடு ஒருவர் பிரியாமலும் இருப்பதாகக் கூறப்படுகிறது. வளமான நிலமும், வறண்ட நிலமும் இரு சகோதரிகளது தன்மையைக் காட்டுகின்றன.

அலக்ஷ்மி வீட்டுக்குள் வராமல் இருக்க பச்சை மிளகாயும் புளிப்பான எலுமிச்சம் பழத்தையும் கோத்து வீட்டு வாசலில் தொங்க விடுகின்றனர். அப்படிச் செய்வதனால், வாசல் வரை வரும் அலக்ஷ்மி, தனக்குப் பிடித்தமான புளிப்பையும், காரத்தையும் ருசித்து விட்டுச் சென்று விடுவாளாம். கேட்பதற்கு வினோதமாக இருந்தாலும் கருத்து சுவையாகவே இருக்கிறது. விழா நாட்களில் புளிப்பு, காரம் இவற்றைத் தவிர்த்து இனிப்புதானே செய்கிறோம்!

• ஓரிய பட்டசித்திரா



லக்ஷ்மிதேவி செந்தாமரையில் அழகாக வீற்றிருப்பதாகக் கூறும் புராணங்கள், அலக்ஷ்மியை எவ்வாறு காட்டுகிறது? குழி விழுந்த கன்னங்கள், கூரான சிறிய கண்கள், தடித்த உதடுகள், உலர்ந்து சுருங்கிய உடல், எண்ணெயின்றி வறண்டு விரிந்த தலைமுடியுடன் கழுதையின் மீது வலம் வருபவளாக இருக்கிறாளாம். இன்றும் நம் நாட்டில் பெண்கள் தலையை விரித்து இருப்பதும், நிழலைப் பார்ப்பதும் அலக்ஷ்மியை வரவேற்பது ஆகும் என்று நம்புகிறார்கள். (முந்தைய தலைமுறை வரை நம்பி வந்தார்கள் என்பதுதானே பொருந்தும்?)

தாந்த்ரீக வழிபாட்டில் அலக்ஷ்மி "தன்துரா" என்று குறிப்பிடப்படுகிறாள். லக்ஷ்மியின் புத்திரன் மன்மதன். உயிர்களுக்கு ஆசையை ஊட்டி வாழவைப்பவன். அலக்ஷ்மியின் மகன் தரித்திரன், எல்லாவற்றையும் மக்கிப் போகச் செய்பவன். லக்ஷ்மி, அலக்ஷ்மி இருவரையும் மகிழ்வித்த வணிகன் ஒருவனது கதை இன்றளவும் பேசப்படுகிறது. ஒருமுறை அக்காளும் தங்கையுமாகச் சேர்ந்து வந்து வணிகனிடம், "எங்களில் யார் அழகு சொல்" என வினவ இருவருடைய கோபத்திற்கும் ஆளாக விரும்பாத வணிகன் சாமர்த்தியமாக, லக்ஷ்மி வரும்போது அழகு. அலக்ஷ்மி போகும் போது பேரழகு என்றதும் லக்ஷ்மி வீட்டினுள் வந்தாளாம். அலக்ஷ்மி தன்னழகு பின்னழகுதான் என்று போனாளாம். உண்மையிலேயே லக்ஷ்மி வருகை புரிந்து செல்வம் செழிக்கும் இடத்தில் மகிழ்ச்சி, மங்கலம், நிறைவு இவற்றிற்குக் குறைவேது?

## அற்புதம்

இம்மாத இலவச இணைப்பில் திருமகளது வழிபாடு பற்றிப் பல விஷயங்களையும் கொடுத்து அதற்குக் 'கண்ணன் திருவடி'களைப் பக்கத்துக்குப் பக்கம் போட்டுப் புத்தகமும் அச்சாகி வந்து விட்

# உழைப்பே உயர்வு!



என் பெயர் ரேவதி பாஸ்கர். என் கணவர் பிஸினஸ் பண்றார். காலை 6 மணிக்கு போவார். நல்ல ஆர்டர் பிடிப்பார். சரியான நேரத்திற்கு டெலிவரி செய்வார். ஆனால் பேமண்ட் ரொம்ப லேட் ஆகறதால அவர் பிஸினஸ்ல முன்னேறமுடியல. என்னதான் உழைப்பு இருந்தாலும் அவர் உயர்வுக்கு ஏதோ ஒரு தடங்கல் வந்துட்டே இருக்கு. அப்பதான் **மங்கையர் மலர்** பத்திரிகையில **பத்மஸ்ரீ & ஜெம்ஸ்** விளம்பரம் பார்த்து அங்கே போனோம். அங்கு **திரு. ராஜசேகர்** மற்றும் **திருமதி ஷர்மிளா ராஜசேகர்** இருவரும் என் கணவருடைய ஜாதகத்தை நல்லா அலசி பார்த்து ராசிக்கல் போட சொன்னாங்க. என்ன ஆச்சர்யம்! அவருக்கு வரவேண்டிய எல்லா பேமண்ட்ஸும் ஒவ்வொண்ணா வர ஆரம்பிச்சது. இப்போ நல்ல வீடு, கார் அனைத்து வசதியோட நல்லபடியா இருக்கோம். என்னோட கல்யாண நாளுக்கு என் கணவர் Diamond Set எனக்கு கிப்ஃட் பண்றதா சொன்னார். அப்பதான் **பத்மஸ்ரீ & ஜெம்ஸுக்கு** வரும்போது இதைப் பற்றி சொல்ல வாய்ப்பு கிடைத்தது. ஏன்னா ஜெம்ஸ் & டைமண்ட்ஸுக்கு **பத்மஸ்ரீதான்** சரியான இடம்.

**Revathy Bhaskar, Madipakkam, Chennai.**

**Revathy Bhaskar** மாதிரி பலரது நம்பிக்கையும் பிரச்சனையும் தீர்த்து வைக்கும் சிறந்த நிறுவனம்

**Padmashri Gems Jewellers**

சரி இதை யார் பரிந்துரைக்கிறார்கள்

**Mrs.SHARMILA RAJASHEKAR** M.A., P.G.A. Member

**Mr.RAJASHEKAR** B.Com., C.Gem., P.Gem.A., Bangkok

International Astrogemmologist

இந்தியாவின் சிறந்த Astrologer என்று Bangkok Association மூலம் தேர்ந்தெடுக்கப்பட்டவர். பலரது பிரச்சனைகளை தன் Astrogemmology மூலம் நிரந்தர தீர்வு தருகிறார்.

தபாலில் பதில் அறிய ரூ.251 **with Birth Details** அனுப்பவும்

**Free Consultation with this Copy**

**For Appointment Contact : 52122927, 28157560**

***100% Genuine & Energized Astro Gems, Original Rudraksh (All Faces), Valamburi Shank, Saaligram, Sriyantra, Rasamani & Other Devine Articles***



## Padmashri Gems Jewellers

**Astro-Gems, Diamonds, Gold & Silver Jewellery**

53-A, North Usman Road, T.Nagar, Chennai - 17. India.
Ph : 52122927, 28157560

Email : powerofgems@yahoo.com Website : www.padmashrigems.8m.com

ADVT.

## சிலேடை சீலர்

ஸ்ரீ பெரியவாளர் நகரி பக்கம் நாகலாபுரத்தில் முகாம் இட்டு இருந்தபோது அவருக்குக் காய்ச்சல் (ஜுரம்) வந்து விட்டது. ஆகையால் மடத்துக்குத் திரும்பிப் போய் விடலாம் என்று ஸ்ரீ மடத்தில் தீர்மானிக்கப்பட்டது. அது சமயம் எனது பெரியப்பா கடையம் கே.ஜி. நடேச சாஸ்திரிக்கும் தெரியப்படுத்தினார்கள். பெரியப்பாவும் சில மருந்துகளுடன் நாகலாபுரம் சென்றார். அங்கு பெரியவருக்கு கையில் வெண்பட்டு போட்டு நாடி பிடித்துப் பார்த்துவிட்டு, இது "மலேரியா"வாக இருக்கும்போல் தெரிகிறது என்று சொன்னார். அதற்குப் பெரியவர், "மலேரியாவா" என்று கேட்டு விட்டு "மலை ஏரியா" (Mountain Place) ஜுரம் போக வேண்டுமானால் "மலை ஏறியா?" போகணும் என்று அந்த ஜுரத்தின் பெயரைப் பிரித்து சிலேடையாக நகைச்சுவையுடன் கேட்டு, அப்படின்னா 'திருப்பதிக்கு' முகாமை மாற்றுங்கள் என்று சொன்னார். பெரியப்பாவும் கஷாயம் போட்டுக் கொடுத்தார். ஜுரமும் தணிந்து விட்டது. "திருப்பதிக்கு" முகாமை மாற்றினார்கள்.



- கே. எஸ். மீனாக்ஷிசுந்தரம்.

டது. அதன் பிறகு ஈச்வரியான திருமகளைப் பற்றி ஆராயும் போது கிடைத்ததுதான் இந்த அற்புதம்.

"ஸ்ரீ விளங்குவதாகக் கூறப்படும் ஸ்ரீபாதம் - லக்ஷ்மியின் காலடிச் சுவடுகள், கோபாதம்- மாட்டின் குளம்படிகள். கிருஷ்ண ஜயந்தியன்று அரிசி மாவினால் வரையப்படும் கால்கள் லக்ஷ்மியின் பாதமாம். பசுவும் லக்ஷ்மியும் இருக்கும் இடத்தில்தானே கண்ணனும் இருப்பான்?" இந்தக் குறிப்பு என்னைத் தேடி வந்த 'ஸ்ரீ' அல்லவா?

வரலக்ஷ்மி விரதம் பற்றிய புத்தகத்தில் திருமகளே உவந்து தனது ஸ்ரீ பாதங்களைப் போட வைத்திருப்பதை என்னவென்று சொல்லுவது? மகிழ்ச்சி வெள்ளத்தில் திக்குமுக்காடிப் போனேன்! இந்தச் செல்வத்தை உங்களுடன் பகிர்ந்து கொள்ளாமல் இருக்க முடியவில்லை. நம்மை ஒன்று சேர்ப்பதும், நடத்திச் செல்வதும் அவளல்லவா?

வங்காளத்திலும் லக்ஷ்மி பூஜைக்கு ஸ்ரீ பாதங்களை அல்பனா (கோலம்) போடு கிறார்கள்.

நிறைநாழி, பொற்குவியல், நெற் குவியல், வெல்லக்குவியல், அரிசிக் குவியல் இவற்றில் எல்லாம் திருமகளின் செழிப்பும் வளர்ச்சியும் இருக்குமென்பதனால்தான் தென்னகத்தில் "பருப்புத் தேங்காய்" என்று பாகு சேர்த்துக் கூடாகக் குவித்து வைத்த இனிப்பைத் தலைமுறை பெருகும்படித் திருமணம், சீமந்தம் போன்ற நிகழ்ச்சிகளில் லக்ஷ்மியாகவும் நாராயணனாகவும் ஜோடியாகச் செய்து வைக்கிறார்கள். அந்த ஜோடிகளுக்குச் சந்தனம், குங்குமம் இட்டுப் பூச்சுற்றுவதும் ஸ்ரீ வழிபாடே! சந்தைகளிலும் பழம், காய்கறிகள் விளைபொருட்கள் எல்லாவற்றையும் கூறுகட்டிக் குவித்து வைப்பதும், மளிகைக் கடையில் தானியங்களை அம்பாரமாகக் குவித்து, அளக்கும் படிகளில் நிறையக் குவிப்பதும் (தலை தட்டாமல்) வைப்பதும் செல்வமாகிய லக்ஷ்மி சேர வேண்டும் என்றுதானாம். பரப்பிட்

# எஸ்பிஆர் ஹோம்ஸ் வழங்கும்

## கோவையில் பல நவீன வசதிகளுடன்

# தனி வீடுகள்



- 2 மற்றும் 3 படுக்கையறைகள் கொண்ட தனி வீடுகள்
- ரயில் நிலையத்திலிருந்து 6 கி.மீ.
- பள்ளி, கல்லூரி, பல் பொருள் அங்காடிகள், பஸ் நிலையம் அருகில்
- முன்னணி வங்கிகள் மூலம் கடன் வசதி
- 24 மணிநேரம் பாதுகாவலர் வசதி

தயார் நிலையில் வீடுகள்

## Espeeyare Homes



**Site Address:**
Behind Cheran Nagar,
Kavundampalayam, Coimbatore.
Phone : 2232818, 2233846, 5589177

**Office Address:**
Promoted by: Espeeyare Enterprises (I) Pvt. Ltd.
15, Malavia Street, Ramnagar, Coimbatore - 641 009.
Cell : 98422 32818, 92444 07388

# அலோஹாவின் அதிவேக கணிதம்

- பத்து மடங்கு அதிக வேகத்தில் கணக்கிட
- தேர்வு நேரங்களில் நேரத்தை மிச்சப்படுத்த
- கணிதப் பாடத்தில் அதிக மதிப்பெண் பெற்றிட
- முழு கணக்கினை திரும்பவும் கணக்கிடாமல் விடைகளை சரிபார்க்க
- பாடப் புத்தகத்திலுள்ள அனைத்து கணக்குகளின் விடைகளையும் சுலபமான முறையில் சரிபார்க்க
- கழித்தல் கணக்குகளில் கடன் வாங்கும் முறை இல்லாமல் செய்ய
- பெருக்கல் கணக்கில் ஒரே படியில் விடைகளை அறிந்து கொள்ள
- அனைத்து கணக்குகளையும் மனக்கணக்கின் மூலம் கணக்கிட
- தேர்வில் சிறு சிறு தவறுகளை தவிர்க்க

2662642469 + 2999889 = ?
கால்குலேட்டர் உதவி இல்லாமல் இந்த கணக்கை Aloha Speed Maths பயிலும் குழந்தைகளால் சில விநாடிகளில் தீர்வு காணமுடியும்.



2006 - அரசுத் தேர்வு எழுதும் 10வது மற்றும் 12வது வகுப்பு மாணவர்களுக்கான சிறப்பு பாடத்திட்டம் வடிவமைக்கப்பட்டுள்ளது.

ALOHA Speed MATHS

**Tel : 044 - 2461 3262 / 2461 6268**

For details contact : **ALOHA INDIA**
A Division of KK Academy (P) Ltd, An ISO 9001 : 2000 Company
No.32, 1st Main Road, R.A. Puram, Chennai - 600 028. Tamilnadu. India.
E-Mail : info@alohaindia.com Web : www.alohaindia.com

Become our Franchisee & join the successful ALOHA family

# ஸ்ரீயின் சின்னங்கள்

 அறுகோணம்
 ஐங்கோணம்
 சாமரம்
 சிம்மாசனம்
 தாமரை


ஸ்ரீ எனும் எழுத்து

 ஸ்வஸ்திக்
 ஸ்ரீ பாதங்கள்
 சங்கு
 கலசம்
 விளக்கு
 வெற்றிலை பாக்கு

 ஜவந்திப் பூ
 மாவிலை
 கரும்பு
 வாழை மரம்
 தேங்காய்
 வில்வ இலை மற்றும் பழம்



நெற் கதிர்கள் உணவுக் குவியல் ஓலைக் கூடை துடைப்பம் அணிகலன்கள் முத்துக்கள்

 நகைகள் அணிந்த பெண்
 பருத்த மனிதன்
 கண்ணாடி
சமையல் பாத்திரங்கள்
அடுப்பு
 நீர்நிலைகள்

 பசுவின் குளம்படி.
 தேன்கூடு.
 மீன்.
 சிலந்தி.
 பல்லி.
 நாகப் பாம்பு

 யானை.
 பசு.
 குதிரை.
 பூனை.
 மகரம்.
 ஆந்தை

போடுவதில்லையே! நமது பாட்டன் பாட்டிமார் சொன்னவை எத்தனை பொருள் பொதிந்த பேருண்மை என்று இன்றல்லவோ புரிகிறது! அற்புதம்!

ஆராய்ச்சித் தொகுப்பு, மற்றும்
ஓவியங்கள் : **தேவதத் பட்டனாயக்**





# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்



72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்,
(வழி) தாம்பரம், சென்னை – 63. போன் : 22760612.
City Office No.7,முதல் மாடி, வேலு தெரு, மேற்கு மாம்பலம்,
(அயோத்யா மண்டபம் அருகில்) சென்னை – 33.போன் 23714942.
எமது புதிய கிளை நிறுவனம் : எண். 7, 30வது தெரு, தில்லைகங்கா நகர்,
நங்கநல்லூர், சென்னை – 600 061. போன் : 22333214

## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர், வணக்கம்!

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த 17 ஆண்டுகளாக நடைபெற்று வரும் "ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்" தாய், தந்தையற்ற, திக்கற்ற மற்றும் வறுமை கோட்டின் கீழ் வாழும் 200 மாணவ மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன், நல்ல கல்வி, காலை மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன், உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு நல்ல முறையில் வளர்ந்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியைச் செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| • காலை சிற்றுண்டி (200 பேருக்கு) | ரூ. | 1,000/- |
| • மதிய உணவு | ரூ. | 2,000/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ. | 1,000/- |
| • இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித்தொகை | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. | 12,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 2,00,000/- |

நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு

மேலும் தங்களின் பிறந்த நாள், திருமண நாள், குழந்தைகளின் பிறந்த நாள், தொழில்/வியாபாரம் தொடங்கிய நாள், மற்றும் இதர பண்டிகை நாட்களான தீபாவளி, பொங்கல், கிறிஸ்துமஸ், ரம்ஜான் போன்றவைகளில் மாணவர்களுக்கு சிறப்பு விருந்து ஒன்றை அளித்து அவர்களுடன் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ளலாம்.

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை ஸ்ரீ சாரதா சக்தி பீடம் என்ற பெயருக்கு Cheque / DD / MO மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர்
நல்லாசியுடன்

சுவாமி ஸ்ரீ அம்பிகானந்தா

A.ராஜபக்கிரிசாமி MSc., MEd.,

# இந்த மாதம் எப்படி?

## ஆகஸ்ட் 2005

(பார்த்திப வருஷம் ஆடி 16 முதல் ஆவணி 15 வரை)

ஆகஸ்டு முதல் தேதியன்று உள்ள கிரக நிலவரம் :
(வாக்கியப் பஞ்சாங்கப்படி)

| ராகு | செவ்வாய் | சந்திரன் | |
|---|---|---|---|
| | இம்மாத கிரக மாற்றங்கள் | | சூரியன் சனி புதன் |
| | 13.8.2005 - கன்னி - சுக்கிரன் | | |
| | 17.8.2005 - சிம்மம் - சூரியன் | | சுக்ரன் |
| | | | குரு |



### மேஷ ராசி :

அஸ்வினி, பரணி, கிருத்திகை 1 - ஆம் பாதம்.

**பொது :** இராசி அதிபதி. செவ்வாய் ராசியிலேயே வலுவாக உள்ளதால் எதிலும் உங்கள் கைதான் ஓங்கியிருக்கும். பெயர், புகழ், செல்வாக்கு சிறந்து விளங்கும். தொழிலில் மறைமுக எதிர்ப்புகள் சற்றுக் கடுமையாக இருக்கும். நாற்காலியைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்ளுங்கள். எப்போ திண்ணை காலியாகும் என்று நிறையப் பேர் காத்துக் கொண்டிருப்பார்கள். மாதப் பிற்பகுதியில் சூரியன் 5ம் இடத்திற்கு வந்ததும் பதவி உயர்வு கிடைக்கும். பிரச்னைகள் தீர்ந்துவிடும்.

**இல்லத்தரசிகள் :** கணவன் - மனைவி உறவு மகிழ்ச்சிகரமாக இருக்கும். உறவினர் வருகை அதிகரிக்கும். செல் விருந்தோம்பி வருவிருந்து பார்த்திருப்பீர்கள். ஆனால் உறவினர்கள் மத்தியில் நல்ல பெயர் கிடைப்பது அரிது.

**பணிபுரியும் பெண்கள் :** 17ம் தேதிக்குப் பிறகு அலுவலகத்தில் உற்சாகமான சூழ்நிலை உருவாகும். அதுவரை சகிப்புத் தன்மை அதிகம் தேவை.

**சந்திராஷ்டம நாட்கள் :** 13ம் தேதி காலை 10.30 முதல் 15ம் தேதி மதியம் 2.40 வரை.

**பரிகாரம் :** செவ்வாய் கிழமைதோறும் முருகனை வழிபட்டு வரவும். அருணகிரி நாதர் இயற்றியுள்ள வேல் விருத்தம் படித்து வந்தால் நலம் பல தரும்.



### ரிஷப ராசி :

கிருத்திகை 2, 3, 4 ஆம் பாதங்கள், ரோகிணி, மிருகசீரிஷம் 1, 2 ஆம் பாதங்கள்.

**பொது :** திரைகடலோடியும் திரவியம் தேடும் வாய்ப்பு வாசலில் வந்து நிற்கும். இம்மாத இறுதிக்குள் புதிய கார் வாங்குவீர்கள். உத்தியோகமானாலும், சொந்தத் தொழிலானாலும் மனதிற்கு திருப்தி அளிக்கும். பண வரவு ஓஹோவென்று இருக்கும். உடன் பிறந்தவர்களுடன் மனஸ்தாபம் ஏற்படலாம்.

**இல்லத்தரசிகள் :** குடும்பத்தில் மகிழ்ச்சியான சம்பவங்கள் பல நடைபெறும். மாதப் பிற்பகுதியில் புதிய பொருள் சேர்க்கை ஏற்படும்.

ஹரிகேசநல்லூர் வெங்கட்ராமன்

குலதெய்வ வழிபாடு செய்யும் பாக்கியம் கிடைக்கும்.

**பணிபுரியும் பெண்கள் :** உத்தியோகம் எந்தப் பிரச்னையும் இல்லாமல் ஒரே சீராக இருக்கும். சொந்தத் தொழிலில் அதிக லாபம் பெறுவீர்கள்.

**சந்திராஷ்டம நாட்கள் :** 15ம் தேதி மதியம் 2.40 முதல் 17ம் தேதி மாலை 5.49 வரை.

**பரிகாரம் :** 'யா தேவி சர்வ பூதேஷு புத்தி ரூபேண சமஸ்திதா நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோ நமஹ' என்று சொல்லி தினமும் மூன்று முறை காலையில் அம்பிகையைச் சரணடையுங்கள். மனதில் உள்ள பகைமை உணர்வு நீங்கும்.



## மிதுன ராசி :

*மிருகசீரிஷம் 3, 4 ஆம் பாதங்கள், திருவாதிரை, புனர்பூசம் 1,2,3 ஆம் பாதங்கள்.*

**பொது :** தொழிலில் முன்னேற்றம் மிகச் சிறப்பாக விளங்கும். மாதப் பிற்பகுதியில் பொருளாதாரச் சிக்கல்கள் பெருமளவு தீர்ந்துவிடும். வழக்கு வியாஜ்ஜியங்களும் வம்புச் சண்டையும் வலுவில் வரலாம். ஆனால் எதுவும் உங்களைப் பாதிக்காது. இரண்டாமிடத்தில் சனி, சூரியன் சேர்க்கை 16ம் தேதி வரை உள்ளதால் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடிக்கும்.

**இல்லத்தரசிகள் :** இரண்டாமிடத்தில் உள்ள சனி, சூரியனை செவ்வாய் பார்ப்பதால் எரிச்சலூட்டும் சில விஷயங்கள் குடும்பத்தில் நடைபெறலாம். அகழ்வாரைத் தாங்கும் நிலம் போலத் தம்மை இகழ்வாரைப் பொறுத்தல் தலை.

**பணிபுரியும் பெண்கள் :** ஆபீஸில் வேலை பார்க்கும் போது உற்சாகமாக இருப்பீர்கள்.

**சந்திராஷ்டம நாட்கள் :** 17ம் தேதி மாலை 5.49 முதல் 19ம் தேதி இரவு 8.14 வரை.

**பரிகாரம் :** மைசூர் சாமுண்டீஸ்வரியை மனதார வேண்டிக் கொள்ளுங்கள். முடிந்தால் ஒரு முறை நேரில் சென்று தரிசனம் செய்து விட்டு வாருங்கள்.

**நீங்கள் பழைய பாட்டில்களை விற்கும் போது அதன் மேல் ஒட்டியிருக்கும் லேபிள்களை எடுத்து விடுங்கள். இல்லாவிட்டால் அதே பெயரில் திருட்டுத்தனமாகத் தரக்குறைவான பொருள்களை பாட்டிலில் போட்டு விற்று விடுவார்கள்.**

**- குமுதினி வேணுகோபால்**



## கடக ராசி :



*புனர்பூசம் 4 -ஆம் பாதம், பூசம், ஆயில்யம்.*

**பொது :** மிகச் சில கிரகங்களே உங்களுக்குச் சாதகமான நிலையில் உள்ளன. உடல் ஆரோக்கியத்தில் அதிக கவனம் செலுத்தவும். நிதி நெருக்கடி ஏற்படாது. தொழில் முன்னேற்றம் சிறப்பாக இருக்கும். மருத்துவத் துறையில் உள்ளவர்களுக்கு நன்மைகள் அதிகம் நடைபெறும். குறித்த நேரத்தில் உண்ணவும் உறங்கவும் முடியாத அளவிற்கு வேலைப் பளு கடுமையாக இருக்கும்.

**இல்லத்தரசிகள் :** கணவரின் பதவி உயர்வு மனதிற்கு மகிழ்ச்சி அளிக்கும். சாதாரணமான வீட்டு வேலைகளைக் கூடப் பெரிய பாரமாகக் கருதும் அளவிற்கு உடல் பலவீனமாகும்.

**பணிபுரியும் பெண்கள் :** தொழில் ஸ்தானத்தில் அதற்குரிய செவ்வாய் ஆட்சி பலத்துடன் உள்ளதால் கடும் எதிர்ப்புகளுக்கிடையே வெற்றி காண்பீர்கள். பொது வாழ்விலும் அரசியலிலும் ஈடுபட்டுள்ளவர்கள் பிரபலமடைவார்கள்.

**சந்திராஷ்டம நாட்கள் :** 19ம் தேதி இரவு 8.14 முதல் 21ம் தேதி இரவு 10.51 வரை.

**பரிகாரம் :** நடராஜப் பெருமானின்



# ஸ்ரீ டிராவல்ஸ்

194 - A. 2வது மாடி, அண்ணா சாலை, ஆயிரம் விளக்கு, சென்னை - 6.
Ph: 55345081, 55345082, 55345083, 28516799, 55870482
E-Mail sritrave@satyam.net.in Web:www.sreetravels.com

எமது வெற்றிகரமான 17, 18வது திருக்கயிலாய யாத்திரைகள்:
ரயில்மூலம் கோரக்பூர் வழியாக - ரூ.55,000/-
டில்லி - காத்மாண்டு - டில்லி விமானம் மூலம் ரூ.64,000/- புறப்படும் தேதிகள்: ஆகஸ்ட் 12, செப்டெம்பர் 10 பயணநாட்கள் 18.
ஹெலிகாப்டர் மூலம்: லக்னோ வழியாக 9 நாட்கள்: ரூ. 1, 10,000/-

ஸ்ரீ டிராவல்ஸ் அளித்திடும் அருமையான வசந்த கால சுற்றுலாக்கள்
குலு-மணாலி-சுற்றுலா:- ஆப்பிள் பழ மரங்களின் அணிவகுப்பு:
சென்னை-டில்லி-அமிர்தசரஸ்-ஜம்மு வைஷ்ணவி-குலு-மணாலி-சண்டிகார்-ஆக்ரா-மதுரா-சென்னை.
புறப்படும் தேதி:12.9.2005
பயண நாட்கள்: 13 நாட்கள் பயணத்தொகை: ரூ.6,900/-

வயது முதிந்தோர்களுக்கான சுற்றுலா: சென்னை - புவனேஸ்வர் - பூரி - கல்கத்தா - டார்ஜிலிங் - கேங்க்டாக் - காத்மாண்டு - போக்ரா - வாரணாசி - கயா - அலகாபாத் - சென்னை. பயணத் தொகை ரூ:14,900. (கூடுதல் முக்திநாத் பயணம் ரூ.13,500)
புறப்படும் தேதி: 29.8.05 (ரயில் பயணம் 3 A/c மற்றும் விமானப் பயணங்கள் உட்பட)

முக்திநாத் யாத்திரை:- சென்னை - கோரக்பூர் - போக்ரா - முக்திநாத் - காத்மாண்டு - வாரணாசி - கயா - அலகாபாத் - சென்னை. பயணத்தொகை: ரூ.18,900/-
பயண நாட்கள்: 10 நாட்கள் புறப்படும் தேதி: 05.09.05

கோவா - மும்பாய் சுற்றுலா:- சென்னை-ஹைதராபாத்-அவுரங்காபாத்-சனிசிங்கனாப்பூர்-எல்லோரா-ஷீரடி-பஞ்சவடி-திரியம்பகம்-நாசிக்-மும்பை-கோவா-சென்னை.
பயணத்தொகை: ரூ.5,900/- பயண நாட்கள்:11 புறப்படும் தேதி: 28.08.05

பஞ்சதுவாரகை மற்றும் ராஜஸ்தான் சுற்றுலா: சென்னை-அகமதாபாத்- பலிதானா - சோம்நாத் - துவாரகா - பெட்துவாரகா - கங்க்ரோலி - அம்பாஜி - மவுண்ட் அபு - உதயபூர்-ஜோத்பூர் - ஜெய்சால்மர் - பிகானீர் - அஜ்மீர் - புஷ்கர் - ஜெய்ப்பூர் - சென்னை.
பயணத்தொகை : 9,900 பயணநாட்கள் : 13 புறப்படும் தேதி : 18.09.05

குறைந்தபட்சம் 6 பேர் அல்லது அதற்கு மேல் உள்ள குழுவினருக்கு நீங்கள் விரும்பும் தேதியில் காசி-கயா-அலகாபாத்-யாத்திரை.
நபர் ஒருவருக்கு: ரூபாய்4900/- + ரயில் கட்டணம்.

4 பேர் அல்லது அதற்கு மேல் உள்ள குழுவினருக்கு பிரத்தியேக வெளிநாட்டு சுற்றுலாக்கள்:

1. இலங்கை சுற்றுலா - 18,500/- 6 நாட்கள்
2. தாய்லாந்து சுற்றுலா - 19,000/- 5 நாட்கள்

மத்திய தர வகுப்பினருக்கு தவனை முறையில் அடுத்த ஆண்டுக்கான திருக்கயிலாய யாத்திரைகள்.

மே முதல் செப்டெம்பர் மாதம் வரை.
பிரதிமாதம் ரூபாய் - 3000/-
10 மாதம் முடிந்தபின் - ரூபாய் 20,000/- மட்டும் கொடுத்தால் போதும்.

*மேற்கண்ட சுற்றுலாக்கள் மட்டுமின்றி தேன் நிலவுச் சுற்றுலாக்கள் மற்றும் பள்ளி, கல்லூரி மாணவர்களுக்கான பிரத்யோக சுற்றுலாக்களும் ஏற்பாடு செய்து தரப்படும்.*

**கோவையில் எமது கிளை அலுவலகம்: எண்.52, ராஜ வீதி, (CEO அலுவலகம் எதிரில்) கோவை - 641 001.
போன்: 3950482, 5537299**

திருவுருவப் படத்தை எதிரே வைத்துக் கொள்ளுங்கள். தூக்கிய நிலையில் உள்ள அவரது இடது பாதம் அம்பிகையின் அம்சம். அதைப் பார்த்தபடியே 'ஓம் ஸ்ரீமாத்ரே நமஹ' என்று 43 முறை சொல்லவும். இதைத் தினசரி காலையிலோ இரவிலோ செய்யலாம். 43 என்பது ஸ்ரீ சக்ரத்தில் உள்ள முக்கோணங்களின் எண்ணிக்கை.



## சிம்ம ராசி :

*மகம், பூரம், உத்திரம் 1-ஆம் பாதம்.*

**பொது :** மாத முற்பகுதியை பல்லைக் கடித்துக் கொண்டு ஓட்டி விடுங்கள். பிற்பகுதியில் நிச்சயம் நன்மைகள் நிறையவே நடைபெறப் போகின்றன. ராசிக்கு யோகாதிபதி செவ்வாய் 9ல் வலுவாக உள்ளதால் எதையும் தாங்கும் இதயம் உங்களுக்கு உண்டு. உடல்நலன் சிறிது பாதிக்கப்படலாம். அனாவசியச் செலவுகள் ஏற்படும். ஆனால் பணவரவு திருப்திகரமாக இருக்கும். உத்தியோகம் தொழில் பாதிக்காது.

**இல்லத்தரசிகள் :** வீட்டைச் சுற்றி எவ்வளவுதான் பிரச்னைகள் இருந்தாலும் இல்லறம் இனிக்கும். ராசியில் உள்ள சுக்கிரன் ஏழாமிடத்தைப் பார்ப்பதால் கணவரின் அன்பு என்னும் மழையில் பிரச்னை என்னும் தீ அணைந்துவிடும்.

**பணிபுரியும் பெண்கள் :** அலுவலகத்தில் வேலைப் பளு அதிகமாக இருக்கும்.

**சந்திராஷ்டம நாட்கள் :** 21ம் தேதி இரவு 10.51 முதல் 24ம் தேதி அதிகாலை 2.42 வரை.

**பரிகாரம் :** மஹிஷாசுர மர்த்தினி சுலோகம் படித்து வாருங்கள்.

## கன்னி ராசி :



*உத்திரம் 2, 3, 4 - ஆம் பாதங்கள், ஹஸ்தம், சித்திரை 1, 2 ஆம் பாதங்கள்.*

**பொது :** மாத முற்பகுதியில் நன்மைகள் மிகவும் அதிகமாகவும், பிற்பகுதியில் சற்று குறைவாகவும் நடைபெறும். தொழிலில் அபரிமிதமான லாபம் பெறுவீர்கள். அரசாங்கத்தால் ஆதாயம் கிடைக்கும். உத்தியோகத்தில் மிகப் பெரிய பதவி உயர்வுகள் சிலருக்குக் கிடைக்கும். கல்வியாளர்கள்; பத்திரிகையாளர்கள், நிதி நிர்வாகம் செய்பவர்கள், கணினி நிபுணர்கள், ஓவியர்கள், எழுத்தாளர்கள் ஆகியோரின் வாழ்க்கைத்தரம் பன்மடங்கு உயரும்.

**இல்லத்தரசிகள் :** எது எப்படி நடக்க வேண்டும் என்று ஆசைப்படுகிறீர்களோ அது அப்படியே நடக்கும். பிள்ளைகளின் போக்கு சற்று அலாதியாகத்தான் இருக்கும். கண்டும் காணாதது போல் இருந்து விடுங்கள்.

**பணிபுரியும் பெண்கள் :** உங்கள் அலுவலகத்தில் நீங்கள் ஒரு முடிசூடா மன்னி. ஜமாய்ங்க.

**சந்திராஷ்டம நாட்கள் :** 24ம் தேதி அதிகாலை (23ம் தேதி பின்னிரவு) 2.42



**வெற்றிலை வைத்திருக்கும் மண் தொட்டியில் நடுவில் 1½" மூங்கிலை நட்டு, அதன் மேல் கீழேயிருந்து மேலே உச்சி வரை தேங்காய் நாரால் மூடி, சணல் கயிற்றால் கட்டி விட்டால், வெற்றிலைக் கொடி அதைச் சுற்றிக் கொண்டு செழிப்பாக வளரும். அவ்வப்போது குளிர்ந்த தண்ணீரால் இக் கம்பத்தை நனைக்க வேண்டும்.**

**- லக்ஷ்மி சுந்தரம்.**

முதல் 26ம் தேதி காலை 8.38 வரை.

**பரிகாரம் :** குலதெய்வ வழிபாடு செய்து வரவும்.



## துலாம் ராசி :

*சித்திரை 3, 4 - ஆம் பாதங்கள், சுவாதி, விசாகம் 1,2,3 - ஆம் பாதங்கள்.*

**பொது :** உடல் ஆரோக்கியம் சிறந்து விளங்கும். தொழிலில் மகத்தான சாதனை புரிவீர்கள். பணவரவு சரளமாக இருக்கும். மாத முற்பகுதியில் தந்தையின் உடல்நலன் பாதிக்கப்படலாம். பெரும்பாலான கிரகங்கள் சாதகமான நிலையில் உலவுவதால் நன்மையான பலன்களே அதிகமாக நடைபெறும். சொந்த ஊரில் உள்ள கோவிலுக்குத் திருப்பணி செய்யும் பாக்கியம் சிலருக்குக் கிடைக்கும். குடும்பத்தில் அமைதி நிலவும்.

**இல்லத்தரசிகள் :** வீட்டில் உள்ள பழைய பொருள்களை விற்பனை செய்து விட்டு புதிய ஆடம்பரப் பொருள்களை வாங்கி மகிழ்வீர்கள். இல்லம் மட்டுமா? மிளிரும் நீங்களும்தான் இளமையான தோற்றத்துடன் ஜொலிப்பீர்கள்.

**பணிபுரியும் பெண்கள் :** உத்தியோகத்தில் மனநிறைவு ஏற்படும். உங்களின் செயல்பாடுகளுக்கு பாராட்டு கிடைக்கும்.

**சந்திராஷ்டம நாட்கள் :** 1ம் தேதி காலை 7.30 மணி வரையிலும் 26ம் தேதி காலை 8.38 மணி முதல் 28ம் தேதி மாலை 4.45 வரை.

**பரிகாரம் :** வியாழக்கிழமை தோறும் ஷீரடி சாய்பாபா, ராகவேந்திரா போன்ற மகான்களை மனதாரத் துதியுங்கள்.



## விருச்சிக ராசி :

*விசாகம் 4 - ஆம் பாதம், அனுஷம், கேட்டை.*

**பொது :** அஷ்டமத்துச் சனி விலகியதால் பல நன்மைகள் நடை பெறும் என்றாலும் இம்மாதம் 16ம் தேதி வரை ஒன்பதாமிடத்தில் சனி, சூரியன் சேர்க்கை ஏற்பட்டு செவ்வாய் பார்வை பெறுவது ஒரு நல்ல கிரக அமைப்பு அல்ல. மாத பிற்பகுதியில் மிகப் பெரிய நன்மைகள் ஏற்படும். ஆவணி மாதப் பிறப்பு வரை அவசரப்பட்டு அகலக்கால் வைக்க வேண்டாம்.

**இல்லத்தரசிகள் :** மாத முற்பகுதியில் உடல்நலன் பாதிக்கப்படலாம். பணம் கொடுக்கல் வாங்கலில் யாருடனும் கருத்து வேறுபாடு வராமல் பத்திரமாகப் பழகவும். மாதப் பிற்பகுதி மகிழ்ச்சிகரமாக விளங்கும்.

**பணிபுரியும் பெண்கள் :** மாதப் பிற்பகுதியில் தொழில் விறுவிறுப்பாக நடைபெறும். உத்தியோகத்தில் நிம்மதி ஏற்படும். பதவி உயர்வு கிடைக்கும். 16ம் தேதி வரை அலுவலகத்தில் அனைவரிடத்திலும் எச்சரிக்கையுடன் பழகுங்கள்.

**சந்திராஷ்டம நாட்கள் :** 1ம் தேதி காலை 7.30 மணி முதல் 3ம் தேதி இரவு



**சப்பாத்தி ஃபுல்கா போல நன்கு உப்பி வர சப்பாத்தி மாவு பிசைந்து ஒரு மணி நேரம் ஊறவைத்துப் பின் ஃப்ரிட்ஜில் 2 மணி நேரம் வைத்து சப்பாத்தி செய்தால் ஃபுல்கா போல் ஜம்மென்று உப்பி வரும். வேலைக்குச் செல்லும் பெண்கள் இரவே மாவு பிசைந்து ஊறவைத்து ஃப்ரிட்ஜில் வைத்து மறுநாள் காலையில் 10 நிமிடம் முன்னே வெளியில் வைத்து சப்பாத்தி செய்தால் ஜோரான ஃபுல்கா கிடைக்கும்.**

**- வைதேகி ரமணி.**



என் வீட்டு பவளமல்லி புஷ்பம் பெரியதாக இருக்கும். செடி தானாகவே விதை விழுந்து முளைக்கும் என்று நினைத்தேன். ஏராளம் பேர் என்னைச் செடி கேட்டார்கள். ஆனால், ஒன்று கூட முளைக்கவில்லை. ஒருநாள் விழும் விதைகளைப் பிரித்துப் பார்த்ததில் உள்ளுக்குள் தட்டையாக விதை இருந்தது. அதை எடுத்துப் போட்டேன். ஒவ்வொரு விதையும் செடியானது. பிளாஸ்டிக் தண்ணீர்க் குப்பியில் மண்ணை நிரப்பி அதில் செடியை வைத்து என் சிநேகிதிகளுக்கு வழங்கினேன். எல்லோருக்கும் பரம திருப்தி.

- எஸ்ஸார்

8.20 வரையிலும், மீண்டும் 28ம் தேதி மாலை 4.45 முதல் 31ம் தேதி அதிகாலை 3.20 வரை.

**பரிகாரம் :** வருகிற ஆடி அமாவாசையன்று மூதாதையர்களின் ஆத்மா சாந்தியடையும் பொருட்டும் பித்ருக்களின் ஆசி வேண்டியும் காக்கைக்கு அன்னமிடுங்கள். ஏழைகளுக்கு அன்னதானம் இயன்ற அளவு செய்யுங்கள்.



## தனுசு ராசி :

மூலம், பூராடம், உத்திராடம் 1 - ஆம் பாதம்.

**பொது :** வாடிய வில் ராசி அன்பரே, எட்டில் கூடிய சனி, ஞாயிறு கேடிழைக்கும். ஆடி முடிந்ததும் உமை அருளால் நாடி ஓடி வரும் நன்மை பல. சாடித்தேடினும் ஆடியிலே சாதிக்கப் போவதொன்றுமில்லை. ஈடில்லா ஈசன் திருவடியில் மலர் சூடி வழிபடுமின்! சிவ நாமம் பாடி வழிபடுமின்!

**இல்லத்தரசிகள் :** மற்றவர்கள் உங்களை மரியாதை இல்லாமல் பேசுவதற்குள் நீங்களே சைலண்ட் ஆகிவிடுங்கள். மௌனம் சர்வார்த்த சாதகம்.

**பணிபுரியும் பெண்கள் :** அலுவலகத்தில் பக்கத்து டேபிளில் பிரளயமே நடந்தாலும் கண்டுக்காதீங்க. நீங்கள் உண்டு உங்கள் வேலை உண்டு என்று இருந்தால் பிரச்னை எதுவும் வராது. 17ம் தேதிக்கு மேல் பதவி உயர்வு கிடைக்கலாம்.

**சந்திராஷ்டம நாட்கள் :** 3ம் தேதி இரவு 8.18 முதல் 6ம் தேதி காலை 7.58 வரை. மீண்டும் 31ம் தேதி முழுதும்.

**பரிகாரம் :** 'விஸுக்ர ப்ராணஹரண வாராஹி வீர்ய நந்திதாய நமஹ' என்று இரவில் 21 முறை சொல்லி வாராஹியை வழிபடுங்கள்.

## மகர ராசி :



உத்திராடம் 2, 3, 4 - ஆம் பாதங்கள், திருவோணம், அவிட்டம் 1, 2 - ஆம் பாதங்கள்.

**பொது :** ராசிக்கு குரு பார்வை. அது உங்களுக்குக் கிடைத்துள்ள ஒரு கேடயம். மனதிற்குள் ஒரு மௌனப் போர். ஆனால் அது வெளியே தெரியாது. கணவன் - மனைவி உறவு சுமுகமாக இருக்கும். தொழில் முன்னேற்றமும், செழிப்பான பண வரவும் மனதிற்கு ஆறுதல் அளிக்கும்.

**இல்லத்தரசிகள் :** இனிப்பும் கசப்பும் கலந்த அனுபவங்கள் ஏற்படும். கசப்பை மறந்து இனிப்பை நினைத்து மகிழ்ச்சி அடையுங்கள். அதுதாங்க வாழ்க்கை.

**பணிபுரியும் பெண்கள் :** உத்தியோகத்தில் பெரிய பிரச்னைகள் எதுவும் வராது. அலுவலகத்தில் உள்ளவரை கலகலப்பாகக் காண்பீர்கள்.

**சந்திராஷ்டம நாட்கள் :** 6ம் தேதி காலை 7.58 முதல் 8ம் தேதி இரவு 7.04 வரை.

**பரிகாரம் :** ஓம் காமதேவாய வித்மஹே பத்ம ஹஸ்த்தாய தீமஹி தன்னோ அனங்கப்ரசோதயாத் என்னும் மன்மத காயத்ரி மந்திரத்தை இரவில் 9 முறை சொல்லி வாருங்கள். இல்லறம் இனிக்கும்.



## கும்ப ராசி :

*அவிட்டம் 3, 4 - ஆம் பாதங்கள், சதயம், பூரட்டாதி, 1, 2, 3 - ஆம் பாதங்கள்.*

**பொது :** மனதிற்கினிய சம்பவங்கள் பல நடைபெறும். உடல் ஆரோக்கியம் சிறந்து விளங்கும். சுயதொழில் புரிவோர் அதிக நன்மை பெறுவர். புதிய பொருள் சேர்க்கை ஏற்படும். அஷ்டலட்சுமியின் அருள் நோக்குக் கிடைக்கும் மாதமிது. வழக்குகளில் வெற்றி உண்டாகும். அரசாங்க விஷயங்கள் மாதப் பிற்பகுதியில் சாதகமாக நடைபெறும். அரசியல் வாதிகளுக்கு புதிய பொறுப்புகள் கிடைக்கும்.

**இல்லத்தரசிகள் :** குடும்பத்தில் சுபநிகழ்ச்சிகள் நடைபெறும். மாதப் பிற்பகுதியில் உங்கள் கணவர் பதவி உயர்வு பெறுவார்.

**பணிபுரியும் பெண்கள் :** அரசு ஊழியர்களுக்கு மாத இறுதியில் பதவி உயர்வு கிடைக்கும். தனியார் நிறுவனங்களில் பணிபுரிவோர் சம்பள உயர்வு பெறுவர். நிதி நிலவரத்தில் முன்னேற்றம் ஏற்படும்.

**சந்திராஷ்டம நாட்கள் :** 8ம் தேதி இரவு 7.04 முதல் 11ம் தேதி அதிகாலை 3.56 வரை.

**பரிகாரம் :** கந்தர் கலி வெண்பா அல்லது சுப்ரமணிய புஜங்கம் சொல்லி வரவும்.

## மீன ராசி :

*பூரட்டாதி 4 - ஆம் பாதம், உத்திரட்டாதி, ரேவதி.*

**பொது :** சொந்த வீடு வாங்கும் யோகம் உள்ளது. பூமி தொடர்பான தொழில் புரிவோர் மிகப் பெரிய பண வரவு பெறுவர். அயல்நாடு சென்று கல்வி பயிலும் யோகம் மாணவ மாணவியருக்கு ஏற்படும். ஏற்றுமதி இறக்குமதி தொழிலில் உள்ளவர்கள் திடீர் தனப்ராப்தி பெறுவர்.

**இல்லத்தரசிகள் :** குடும்பத்தில் மகிழ்ச்சி அலை வீசும். சுப விரயங்கள் ஏற்படும். ஷாப்பிங் சென்ற வண்ணமாக இருப்பீர்கள்.

**பணிபுரியும் பெண்கள் :** அலுவலகத்தில் நீங்கள் வைத்ததுதான் சட்டம் என்னும் அளவிற்கு செல்வாக்கு ஓங்கும். சுய தொழில் செய்யும் பெண்களுக்கு பண மழை பொழியும்.

**சந்திராஷ்டம நாட்கள் :** 11ம் தேதி அதிகாலை 3.56 முதல் 13ம் தேதி காலை 10.30 மணி வரை.

**பரிகாரம் :** கனகதாரா ஸ்தோத்திரம் படித்து வாருங்கள்.

### சாக்குப் பை மிதியடி!

பெரிய சாக்குப் பைகளின் கைப்பிடிப் பகுதியில் உள்ள கட்டைகள் உடைந்து, உள்ளே ஒட்டப்பட்டிருக்கும் மைகா பேப்பர் கிழிந்து உபயோகப்படாமல் கிடக்கும். இதில் பக்கவாட்டில் வைத்திருக்கும் பட்டியை எடுத்துவிட்டு முன்,பின் இரு பக்கங்களில் ஒட்டியிருக்கும் மைகா பேப்பரையும் நன்றாக சுத்தமாக எடுத்து விட்டு பிரிண்ட் இருக்கும் பக்கத்தை உள் பக்கமாகத் திருப்பி வைத்து, இரு பக்கங்களையும் இணைத்து நமக்குத் தெரிந்த தையல், பூ வேலை செய்து மிதியடிகளாக உபயோகிக்கலாமே!

- சங்கரி வெங்கட்




# உடல் அழகா?

* கலை
* சுகன்யா
* மாதவிலதா

'ரொம்ப அழகுதான, இப்படி ஒரு கேள்வியா?' என்று யாரும் நொடித்துக் கொள்ளவில்லை. பட்டிமன்ற ஸ்டைல் தலைப்பின் ஆழத்தை உணர்ந்து கொண்டு விவாதிக்கத் தயாரானது. திருமதி மாதவிலதா, திருமதி விஜயலட்சுமி ஸ்ரீதரன், திருமதி கஜலட்சுமி செல்வராஜ், திருமதி கலை அருண், திருமதி சுகன்யா சுரேஷ் ஆகியோரைக் கொண்ட அந்த ஐவரணி. 'எப்படி இருப்பவர்கள் உங்கள் பார்வையில் அழகாக இருப்பதாகப்படுவார்கள்?' என்ற சின்னதான தீக்குச்சிக் கேள்வியைத் தூக்கிப் போட்டோம். பட்டாசுச் சரம் படபடவெனப் பற்றிக் கொண்டது.

**கலை :** "ஆள் பாதி ஆடை பாதி"ன்னுவாங்க. அந்த மாதிரி இயற்கை அழகோடு செயற்கை அழகும் சரியான விதத்தில் சேர்ந்தால் அதுதான் உண்மையான அழகு.

**சுகன்யா :** அதெப்படி? மன அழகும் முக்கியம்தானே. சொல்லப் போனால் அகத்தின் அழகு முகத்தில் தெரியும்னுவாங்க. அந்தவிதத்தில் நல்ல மனம் படைத்தவர்களின் முகத்திலும் ஒரு தனி அழகு நிச்சயம் தெரியும்.

**மாதவிலதா :** உடல் ஆரோக்கியமும் முக்கியமாச்சே. அந்தக் காலத்தில் நாங்கள் எந்த அழகு சாதனத்தைக் கண்டோம். அழகு என்ற வார்த்தையை விட 'பொண்ணு லட்சணமா இருப்பா' என்பதுதான் முக்கியமாகப்பட்டது. சிரித்த முகம் அழகுக்கு ஒரு முக்கிய அடையாளம்.

**விஜயலட்சுமி :** எந்தச் சூழலிலும் தன் நிதானத்தை தவற விடாமல் இருக்கும்

# மனம் அழகா?

- ஜி.எஸ்.எஸ்.

* விஜயலட்சுமி

* கஜலட்சுமி

குணம் படைத்த வருக்கு தானாக ஒரு கம்பீரமான அழகு வந்து சேர்ந்துவிடும். தவிர எது போன்ற உடை தனக்குப் பொருத்தமாக இருக்கும் என்று தேர்ந்தெடுத்து அணிந்து கொண்டால் அதுவும் ஒரு பொலிவைக் கொடுக்கும்.

**சுகன்யா** : அந்த விதத்தில் நான் இந்திரா காந்தியை அழகின்னு சொல்வேன். அவர் வகித்த பதவிக்காக இல்லை. அவருடைய கம்பீரமே அவருக்கு ஒரு பெரிய ப்ளஸ் பாயிண்ட்.

**கலை** : எழுத்தாளர் இந்துமதியின் உடையணியும் நேர்த்தியும், துணிச்சலான கருத்து வெளிப்பாடும் எனக்கு ரொம்பப் பிடிக்கும்.

**கஜலட்சுமி** : அழகின்னா கிரண்பேடிதான். ரொம்ப ஸ்மார்ட்டா இருப்பாங்க.

**மாதவிலதா** : என் சாய்ஸும் அவங்கதான். அந்தப் போலீஸ் உடை அவருக்கு என்னமாப் பொருந்துது. தவிர, சிறையிலேயே அவர் செய்த சீர்திருத்தங்களைக் கேள்விப்பட்ட பிறகு அவர் அழகு பல மடங்கு அதிகமாயிட்ட மாதிரி தோணுது.

**கலை** : வைரத்தை தீட்டத் தீட்டத்தான் ஜொலிக்கும். இப்போதெல்லாம் சின்னச் சின்ன நகரங்களிலே கூட அழகு நிலையங்கள் வந்தாச்சு. அவற்றைப் பயன்படுத்திக் கொள்வதிலே தப்பு இல்லே.

**சுகன்யா** : அது எதுக்கு? ஆக்கபூர்வமான சிந்தனைகளை வளர்த்துக்கிட்டாலே நம் அழகை கூட்டிக் காண்பிக்கும்.

**கஜலட்சுமி** : தலையை எப்படி வாரிக் கொண்டால் எடுப்பாக இருக்கும் என்பது



போன்ற அடிப்படை விஷயங்களில் கவனம் செலுத்தினால் கூடப் போதுமே.

**விஜயலட்சுமி** : ஆனால் பல நேர்முகத் தேர்வுகளில் புற அழகுக்கு முக்கியத்துவம் கொடுக்கிறார்கள். ஒருவரைப் பார்த்தவுடனேயே மதிப்பு ஏற்படுவது அவரது தோற்றத்தை வைத்துத்தான். மீதியெல்லாம் பிறகுதான்.

**கஜலட்சுமி** : இருக்கட்டுமே. ஆனால், அந்த நேர்முகத் தேர்வு முடிவதற்குள் சம்பந்தப்பட்டவரின் மனப்பாங்கை கேள்விகளால் வெளிக்கொண்டு வந்து விட முடியுமே.

**கலை** : கேட்க நன்றாகத்தான் இருக்கிறது. ஆனால் நடைமுறை வேறுதான். சமீபத்தில் இரண்டே விமானப் பணிப் பெண்களைத் தேர்ந்தெடுக்க முனைந்த போது 530 விண்ணப்பங்கள் வந்து குவிந்ததாம். தோற்றத்தை வைத்துக் கொண்டு மட்டுமேதான் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள்.

**மாதவிலதா** : அந்தக் காலத்தில் பெண் பார்க்கச் செல்லும் போது லட்சணம் என்ற அடிப்படையில் குடும்பப்பாங்காக இருப்பதையும் கவனித்தார்கள். தவிர பெண்ணும் பிள்ளையும் சேர்ந்திருக்கும் போது உயரம் போன்றவற்றில் அதிக வித்தியாசம் இல்லாமல் இருந்தால்தான் அழகு.

**கலை** : சில பேருக்கு இளநரை தோன்றும். அதைச் சரிசெய்து கொள்ளாமல் "எனக்கு முப்பது வயசுதான். ஆனால் பேரன் பேத்திகள் இருக்காங்களான்னு என்னைச் சில பேர் விசாரிக்கறாங்க" என்று வருத்தப்படுவதில் அர்த்தமில்லை.

**கஜலட்சுமி** : புற அழகு என்பது நம் கையில் முழுவதும் இல்லை. ஆனால் மன அழகை வளர்த்துக் கொள்வது முழுவதும் நம்மிடம்தான். எனவே அதில் கவனம் செலுத்தலாமே.

**விஜயலட்சுமி** : உண்மைதான். மற்றவர்களைத் திருத்துவதை விட்டு விட்டு நாம் முதலில் நம்மைத் திருத்திக் கொண்டாலே நம் அழகு கூடும்.

**கஜலட்சுமி** : என் அலுவலகத்தில் ஒரு பெண்மணியைச் சுற்றி எப்போதும் ஒரு கூட்டம் இருக்கும். அத்தனை பேரையும் கவருமளவுக்கு அவளிடம் வழக்கமாகக் கருதப்படும் அழகு இல்லை. ஆனால், மிகவும் வெளிப்படையாகப் பேசுவதாலும், நகைச்சுவை உணர்வு நிறைய கொண்டிருப்பதாலும் அவளுக்கு ஒரு தனி மதிப்பு.

**சுகன்யா** : நான் கல்லூரியில் படித்த போது ஒரு விரிவுரையாளரிடம் அவரது துறையைச் சேராத மாணவிகள் கூடச் சென்று பேசுவதைக் கண்டு முதலில் வியப்பாக இருந்தது. பிறகுதான் அதற்கான காரணம் புரிந்தது. யார் தன்னுடைய பிரச்னையைக் கூறினாலும் அதற்கு ஒரு தீர்வு கூறுவார். அது சரிப்பட்டு வரவில்லை என்றால் கூட அவரது ஆறுதல் மொழிகள் பலருக்கும் அமைதி கொடுத்தது. ஒரு கட்டத்தில் எனக்கும்.

**விஜயலட்சுமி** : என்னுடைய தோழி ஒருத்தியிடம் பலரும் தங்கள் அந்தரங்க விஷயங்களைக் கூட பகிர்ந்து கொள்வார்கள். காரணம் அவள் ரகசியங்களைக் காப்பாற்றுவாள் என்பதும் மற்றவர்கள் பிரச்னைகளைத் தன் பிரச்னையாக எண்ணி யோசிப்பாள் என்பதும்தான். மனிதர்களுக்கு இப்படிப்பட்டவர்களைத் தானே பிடிக்கும்?

ஆக, 'இருக்கும் அழகை முடிந்தவரை சிறந்ததாக்கிக் கொள்ளலாம். அதைவிட பிறர் விரும்பும் குணங்களை நமக்குள் வளர்த்துக் கொள்ளலாம். இதுவே புத்திசாலித்தனம்' என்ற முடிவுடன் விவாதம் நிறைவுபெற்றது.

புகைப்படங்கள் : ஸ்ரீஹரி



பழைய எக்ஸ்-ரே ஷீட்டுகளை, இரும்பு முறத்திற்குப் பதிலாக அள்ளப் பயன்படுத்தலாம். கண்ணில் படாத தூசுகள் கூடச் சுத்தமாக அதில் வந்து விடும்.

- ஏ. ஹம்ஸத்

# MERIT 2005

Bring your Mark Sheet




**CSC®**

**COMPUTER EDUCATION**

ISO 9001:2000 Certified Institution

Students can now use their mark sheets as cheque

| 10th | 12th | Dip. | UG |
|---|---|---|---|

**The only largest network with 300 centres**

For more details contact nearest CSC centre or Call: Chennai-24312593, Others-9842324027 / 9364112272

# தலைநிமிர்ந்து ஒரு கண்ணீர் அஞ்சலி!



உதானம் தொடர்பாக வாசகர்களிடமிருந்து வந்த கடிதங்களில் ஒன்றில் ஒரு சின்னத் துண்டுக் காகிதத்தில் எழுதியிருந்த ஒரு வாசகர் தனக்கு 76 வயதாகியிருந்ததாகவும், தான் ஒரு முதியோர் இல்லத்தில் இருப்பதாகவும் எழுதியிருந்தார். மேலும், தன் வாழ்வின் ஒரு முக்கியமான விருப்பம் இறப்பிற்குப் பின் உடலைத் தானமாக கொடுப்பதுதான் என்றும், தெளிவாகக் குறிப்பிட்டிருந்தார். இந்த விருப்பத்தை நிறைவேற்றுவதற்காக இரு மருத்துவமனைகளைத் தொடர்பு கொண்டிருந்தாராம். அவர் குடியிருக்கும் இடத்திற்கு அருகே உள்ள மருத்துவக் கல்லூரியிடமிருந்து எந்தவிதமான பதிலும் வரவில்லை என்று வருத்தம் தெரிவித்து, 'உங்கள் எழுத்தின் மூலம் உடல் தானத்தைப் பற்றி பொது மக்களுக்கு மட்டுமல்லாமல் மருத்துவ உலகிற்கும் முறையாக எப்படி தானங்களை ஏற்பது என்பதையும் தெளிவு படுத்துங்கள்' என்று வேண்டுகோள் விடுத்திருந்தார்.



* டாக்டர். என். ராமகிருஷ்ணன்

அருகில் உள்ள மருத்துவக் கல்லூரியிலிருந்து பதில் ஏதும் வராததால் பல மைல்கள் தாண்டி உள்ள சென்னை மருத்துவக் கல்லூரி ஒன்றையும் தொடர்பு கொண்டிருந்தார் இந்தப் பெரியவர். அவர்களிடமிருந்து உடனடியாக நன்றி தெரிவித்தும், அவருடைய தானத்தைப் பெருமையுடன் ஏற்பதாக அவர்கள் எழுதிய கடிதத்தின் நகலையும் தன்னுடைய கடிதத்துடன் இணைத்திருந்தார். மேலும், முக்கியமாக இந்த விருப்பத்தை தன் குடும்பத்தினரிடம் தெரிவித்ததற்கு அத்தாட்சியாக அவர்களும், அவருடைய குடும்ப டாக்டரும் கையெழுத்திட்டிருந்த முறையான ஒரு சான்று பத்திரத்தையும் இணைத்திருந்தார். தன் விருப்பத்தை எப்படியாவது நிறைவேற்ற இவர்கள் அனைவரிடமும் தெரிவித்ததோடு நிற்காமல், தான் எப்பொழுதும் ஒரு 'டோனர் கார்டு' வைத்திருப்பதாகவும் 'இதைத் தவிர வேறு ஏதாவது செய்ய வேண்டுமா?' என்று கேட்டிருந்தார்.

தன்னுடைய உன்னதமான எண்ணத்தை நிறைவேற்ற பலவிதமான முயற்சிகளை எடுத்த இந்தப் பெரியவரிடம் பேச ஆர்வமாக இருந்ததால், அடுத்த நாள் காலை அவர் குடியிருந்த முதியோர் இல்லத்தைத் தொடர்பு கொண்டேன். அவர் பெயரைச் சொல்லி அவருடன் பேச வேண்டும் என்று கேட்டவுடன், "அவரா, அவர் இறந்து இரண்டு வாரங்கள் ஆகிறதே?" என்று கூறியவுடன், நான் என்னை அறிமுகம் செய்து கொண்டு, "அவருடைய விருப்பத்தின்படி அவர் உடலைத் தானம் செய்தீர்களா?" என்று கேட்டேன். "ஆமாம் சார், அவர் விருப்பப்படியே அவருடைய குடும்பத்தினர் அவர் முழு உடலையும் மருத்துவக் கல்லூரிக்குத் தானமாகக் கொடுத்தார்கள். அருகிலுள்ள அரசு மருத்துவக் கல்லூரி அதிகாரிகள் உடனே வந்து ஏற்றுக் கொண்டார்கள்" என்று சொன்னவுடன் மனதார அந்தக் குடும்பத்ினருக்கும் அவருடைய விருப்பத்தை நிறைவேற்றிய அனைவருக்கும் நன்றி கூறினேன்.

அன்று முழுவதும் இந்தப் பெரியவரின் உறுதியை நினைத்தும், தான் நினைத்த நல்ல காரியத்தை எப்படியாவது நிறைவேற்ற அவர் எடுத்த பல முயற்சிகளையும் நினைத்து பெருமிதத்துடன் தலைநிமிர்ந்து கண்ணீர் அஞ்சலி செலுத்தினேன்.

உடல் தானம் செய்ய சட்டரீதியாக என்ன செய்ய வேண்டும் என்பதை மேலும் அடுத்த இதழில் விவரிக்கிறேன்.

*(உதானம் தொடரும்)*

* அந்தப் பெரியவர் பெயர் : எஸ். குருமூர்த்தி





## போஸ்ட் கார்டு போட்டி முடிவுகள்

# ஆண் பாதி அலங்காரம் மீதி!

### முதல் பரிசு ரூ. 1000/-

1. பெண்களுக்குள் போட்டி மனப்பான்மை உண்டு. அழகு விஷயத்தில் அதிகம். ஏதாவது நிகழ்ச்சியில் பார்த்தாலே உண்மை 'பளிச்'சிடுமே!

2. ஆண்களின் இளமைக்கு வயது அதிகம். பெண்களின் இளமை குறைவுதான். அதனால் 'இளமை'க்கு 'பூச்சு' தேவை!

3. வேலை பார்க்கும் பெண்ணா? வீட்டில் இருப்பவரா? 'அழகு'படுத்திக் கொள்ளாவிடில் கொஞ்சம் விபரீதம்தான்!

4. உடற்தன்மையிலும் பெண்களுக்கு அழகுபடுத்திக் கொள்ளத் தேவைகள் அதிகம். 'இயற்கை மஞ்சள்' போலும் தன்மைகள் மறைந்து செயற்கை க்ரீம் ஆட்சி புரிகின்றன.

5. ஆண்களுக்கு அழகுபடுத்திக் கொள்வது 'உதிரி உறுப்புகள்' மாதிரி. பெண்களில் பன்முகத் தன்மைகளினால் அழகு செய்து கொள்வது 'முக்கிய பாகங்கள்' போன்றது.

6. பெண்களின் கூந்தலுக்கு இயற்கை மணமா? செயற்கை மணமா? எப்படியோ மணம் தேவை. சிலனே 'தலை'யிட்ட விஷயம்!

7. ஆண் வண்டினம். பெண் மலரினம். மகரந்தம் உட்பட அழகு இருந்தாலும் ஈர்ப்பும் தேவை!

போட்டி, இளமைத் தோற்றம், தேவை, உடற்தன்மை, பன்முகத் தன்மை, செயற்கையும் அவசியம், அழகுக்கு அழகான ஈர்ப்பு என்பனவற்றால் பெண்களே ப்யூட்டி பார்லருக்கு அதிகம் செல்கிறார்கள்.

**- சாரதா நாராயணன், கோயம்புத்தூர்.**

### இரண்டாம் பரிசு ரூ.500/-

இராமபிரானையும் சுந்தரமூர்த்தி நாயனாரையும் திருமண சமயம் அழகு மெருகூட்டி அழைத்து வருகிறார்கள். ஆனால் சீதையோ, தமயந்தியோ கண்டார் மயங்கும் வடிவினர். ஆண்கள் அழகு செய்து கொள்வது மெருகூட்டுவது. பெண்கள் அழகு செய்து கொள்வது அழகுக்கு அழகூட்டுவது. அரக்ககுண சூர்ப்பநங்கை கூட ஓர் அழகு மங்கை. கிளியோபாத்ராவின் அழகு ஒரு சரித்திரம். ஆக, பெண்கள் அழகுபடுத்திக் கொள்வது அழகுக்கு அழகூட்டும் கலை. ஆண்கள் அழகு செய்து கொள்வது தேவை. தேவைதான் தேடிச் செல்லும். வயதான ஜூலியஸ் ஸீஸரும், மார்க் ஆண்டனியும் கிளியோபாத்ராவைக் கவர அழகை அதிகப்படுத்திக் கொள்ளவும், வீரதீரம் காட்டவும் முயன்றனர். ஆனானப்பட்ட கிருஷ்ணன் கூட 'அழகூட்டப்பட்டு' ரசிக்கப்பட்டதாக புராணம் சொல்லும். இன்றைய ஆண்கள் அழகு சாதனங்கள், சாயம் பூசிக் கொள்ளுதல், ஆடம்பர அழகாடைகள், நகைகள் எனப் பலவற்றைப் பயன்படுத்துகிறார்களே! யதார்த்தம் என்னவென்றால் பெண்கள் செல்கிறார்கள். ஆண்கள் மிக அதிகம் பயன்படுத்துகிறார்கள்.

**- பி.பத்மா,**
**அரங்கநாதபுரம்.**

### மூன்றாம் பரிசு ரூ. 300/-

பெண்கள் தற்போது வெளியில் சென்று வேலை செய்யும் நிர்ப்பந்தம், மாஸ் மீடியா எனும் தகவல் தொடர்பு சாதனங்களின் தாக்கம் இவற்றால் பள்ளி மாணவிகள் முதல் பலரும் அழகு நிலையம் நோக்கிப் படை எடுக்கின்றனர். ஐஸ்வர்யாராய், சுஷ்மிதாசென் போன்ற நம் நாட்டுப் பெண்கள் உலக அழகிகளான பின் தங்களை அழகுபடுத்திக் கொள்வதில் மேலும் கவனம் செலுத்த ஆரம்பித்து விட்டனர் என்றால் அது மிகையல்ல. ஆள்பாதி ஆடை பாதி என்ற பழமொழி

போய் ஆள் பாதி; அலங்காரம் பாதி என்ற புதுமொழியும் தோன்றலாம். தெருவுக்குத் தெரு அழகிப் போட்டிகள் நடைபெற்று வருகிற காலமிது. அது மட்டுமின்றி மிஸ் சென்னை மட்டுமல்ல மிஸஸ். சென்னை, முதியோர் இல்லங்களில் அழகிய பாட்டி எனவும் தேர்வுகள் நடைபெறுகையில் அழகு நிலையங்களை அதிகம் நாடிச் செல்வது பெண்களே! பெண்களே! பெண்களே!

**- சித்ரா கணேசன், சென்னை - 42.**

## ஆறுதல் பரிசு ரூ. 200/-

பாலேடு, பகம் மஞ்சள், பயத்தம் மாவு இதுதான் பளபளக்கும் முகத்திற்கு பாட்டி தந்த டிப்ஸ். விழிக்கு ஒளி, வில்லை போல் புருவத்திற்கு விளக்கெண்ணெய் சிறந்தது. இதுவும் பாட்டி காலத்து டிப்ஸ்தான்! காய் கறிக் கடை போல் தெருவிற்கு நான்கு ப்யூட்டி பார்லர்கள். முகத்திற்கு சுண்ணாம்பு அடித்துக் கொண்டு மூன்று மணி நேரம் காத்திருந்தால், முகம் பளபளக்குமாம். அப்படி ஒரு நம்பிக்கை. இதுதான் நாகரிகமும் கூட. அழகு நிலையத்திற்குப் போகாதவர்கள் அசடுகள்! அழகாய் இருக்க யாருக்குத்தான் ஆசையில்லை? இதில் ஆண் என்ன? பெண் என்ன? 18 முதல் 81 வயது வரை ப்யூட்டி பார்லர் போகலாம்... பர்சில் கனமிருந்தால். என்னுடைய கருத்துப்படி அழகு நிலையத்தை குத்தகை எடுப்பவர்கள் 60% பெண்கள், 40% ஆண்கள்!

**- லக்ஷ்மி ஸ்ரீநிவாசன், சென்னை -42.**

## ஆறுதல் பரிசு ரூ. 200/-

அழகு நிலையத்திற்குச் செல்வது பெண்களிடையே வைரஸ் போல் பரவி விட்டது. விசேஷத்திற்குப் போக வேண்டுமா? அவர்கள் முதலில் போய் நிற்பது அழகு நிலையத்தில்தான். இப்போது அழகு நிலையத்திற்குப் போய் 'ப்ளீச்' செய்து கொண்டு வர நினைப்பதோடு, இயற்கையாய் வளர்ந்த புருவத்தை நாத்து பிடுங்குவது போல் பிடுங்கி, வேறு இடத்தில் ஷேப் செய்கிறார்கள். பாவாடை தாவணியும், இரட்டைச் சடையும், தழையக் கட்டிய புடைவையும், தரைப் பின்னிய கூந்தலும் மாறி ஜீன்ஸ், டாப்ஸ்ஸாகவும் போனிடைலுமாகவும் மாறி விட்டன.

பளிச்சென்று தன்னை மற்றவர்களிடமிருந்து வித்தியாசப்படுத்திக் காட்ட நிறைய பெண்கள் நினைக்கிறார்கள். தனக்காகவும், நிர்பந்தத்திற்காகவும் நிறையப் பெண்கள் அழகு நிலையத்திற்குத் தள்ளப்படுகிறார்கள்! இந்த அழகுக் கூட்டத்தில் ஆண்கள் காணாமல் போகிறார்கள்!

**- கலைச்செல்வி பிச்சை, பெரம்பலூர்.**

## மங்கையர் மலர் - வெள்ளி விழா போஸ்ட் கார்டு போட்டி! - 8

ஒவ்வொரு மாதமும் ஏதாவதொரு தலைப்பில் மினி கட்டுரைப் போட்டி! சிறந்த மூன்று 'போஸ்ட் கார்டு' கட்டுரைகளுக்கு முறையே **முதல் பரிசு, இரண்டாம் பரிசு, மூன்றாம் பரிசு** மேலும் **இரண்டு ஆறுதல் பரிசுகள்** உண்டு.

### போட்டி விதிமுறைகள் :

* 50 பைசா போஸ்ட் கார்டில் மட்டுமே எழுத வேண்டும்.
* யார் வேண்டுமானாலும் கலந்து கொள்ளலாம்.
* கடைசித் தேதி 15.8.2005
* ஆசிரியர், மங்கையர் மலர், கல்கி பில்டிங்ஸ், 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 32 என்ற முகவரிக்கு அனுப்ப வேண்டும்.
* ஆசிரியரின் தீர்ப்பே இறுதியானது.




செப்டெம்பர் மாத போட்டித் தலைப்பு :

**பிரச்னையை நேருக்கு நேர் சந்திப்பது ஆண்களா? பெண்களா?**

உங்கள் கருத்தை போஸ்ட் கார்டில் எழுதி அனுப்புங்கள்.





• பி.எம். பாண்டி

'திருமணம்' என்றால் நகைக்கு பட்ஜெட் போட்டு விட்டு அடுத்து விரைவது பட்டுப் புடைவைகளுக்குத்தானே! அப்படி ஒரு சமயம் திருமணத்தை முன்னிட்டு பிரபல ஜவுளிக் கடையில் புடைவைகள் செலக்ஷனுக்காக, தெருவடைத்து நுழைந்த பொழுது, கடையில் மற்றொரு வாடிக்கையாளர், விற்பனை யாளரிடம் "நீங்கள் கொடுத்த பட்டுப் புடைவை நல்ல பட்டு இல்லை என்று வீட்டிற்கு வந்திருக்கும் என் வயதான மாமா கூறுகிறார். அவர் ஏற்கெனவே அவர் ஊரில் ஜவுளிக் கடையில் வேலை பார்த்தவர்தான். தவறாகச் சொல்ல மாட்டார். மாற்றிக் கொடுங்கள்" என்று சண்டை பிடித்துக் கொண்டிருந்தார். அவரை நான் கேட்டேன், "ஏம்மா வாங்கும் பொழுதே 'சில்க் மார்க்' முத்திரையைக் கேட்டு அந்த லேபிள் உள்ள புடைவையை வாங்கியிருக்கலாமே! பிரச்னையே வந்திருக்காதே" என்றேன். "அப்படியா? அது என்ன? தெரியாதே" என்றார். விளக்கினேன். அப்புறம்தான் நம் சகோதரிகளுக்கும் இதைப் பற்றிச் சொன்னால் என்ன என்று தோன்றியது.

'சில்க் மார்க் ஆர்கனிசேஷன் ஆஃப் இந்தியா'வின் டெபுடி டைரக்டரும் நோடல் அதிகாரியுமான திரு. பி.எம். பாண்டி அவர்களை நேரில் கண்டு "மங்கையர் மலர் வாசகிகளுக்கு பட்டுப்

# இனி, ஏமாறாமல் பட்டுப்

பட்டாய் பட்டுத் துணியை எப்படி வாங்குவது என்று விளக்குமளியுங்களேன்" என்றோம் -

"ஏமாறுபவர்கள் இருக்கும் வரை ஏமாற்றுபவர்களுக்குப் பஞ்சமில்லை" என்று கூறுவது தவறே இல்லை. சில அறிவிப்புகள் மக்களை கண்மூடித்தனமாக நம்ப வைத்து விடுகின்றன. கல்யாண சீசன் இல்லாத நாட்களில் 25% முதல் 50% வரை பட்டுப் புடைவைகள் தள்ளுபடி விற்பனையில் கல்யாண மண்டபங்களில் அதிரடி விற்பனை செய்யப்படுகின்றன.

இது எப்படி சாத்தியம்? பட்டுக்கென்று பிரத்யேக தரம் இருக்கும் பொழுது அதிரடியாக எப்படி மலிவு விலையில் விற்பனை செய்ய முடிகிறது என்பதை மக்கள் யோசனை செய்வதே இல்லை. கிடைத்தவரை ஆதாயம் என்று போலிப் பட்டுக்களை வாங்கிக் குவித்துக் கொண்டு பிறகு வருத்தப்படுகிறார்கள்.

மக்களிடையே இதற்கு விழிப்புணர்வை ஏற்படுத்த வேண்டும் என்ற நோக்கத்துடன், மத்திய அரசின் ஜவுளி அமைச்சகத்தைச் சேர்ந்த, மத்திய பட்டு வாரியத்தினால் உருவாக்கப்பட்டு, பதிவு செய்யப்பட்ட சில்க் மார்க் ஆர்கனைசேஷன் ஆஃப் இந்தியா சங்கம் செயல்பட்டு வருகிறது.

இந் நிறுவனம் நுகர்வோருக்கு ஏதுவாக



மங்கையர் சக்தி மகத்தான சக்தி

மங்கையர் மலர் வெள்ளிவிழா




'சில்க் மார்க் லேபிள்கள்' 100% பட்டுத் துணிகளுக்கு மட்டுமே உத்திரவாதம் கொடுக்கிறது.

அதாவது, பட்டுத் துணிகளை வியாபாரம் செய்பவர்கள், இந் நிறுவனத்தின் ஒப்பந்தப் படிவத்தைப் பூர்த்தி செய்து, அங்கீகரிக்கப்பட்ட உபயோகிப்பாளர் ஆகிய பின், இந் நிறுவனத்தில் பயிற்சி பெற்று, தாங்கள் வணிகம் செய்யும் பட்டு ஜவுளிகளில் இணைத்துக் கொள்ளலாம். ஒரு குறிப்பிட்ட கோணத்தில் மட்டுமே தெரியும் அம்சங்களைக் கொண்ட இந்த லேபிள்கள், பிரித்து எடுத்து வேறு ஜவுளிகளில் இணைக்க முடியாவண்ணம் e-beam hologram-கள் உபயோகப்படுத்தப்பட்டு தயாரிக்கப்பட்டிருக்கின்றன.

இச் சங்கத்தின் உறுப்பினர் (வணிகம் செய்பவர்) இந்த லேபிள்களை தவறாக உபயோகித்தால், அவர் உறுப்பினர் நிலையை ரத்து செய்து, பிளாக் லிஸ்ட் செய்வதோடு அல்லாமல், நுகர்வோர் பாதுகாப்புச் சட்ட திட்டங்களின்படி ஈட்டுத் தொகையும் உறுப்பினர் கட்ட வேண்டும்.

ஆகையால், பட்டு என்கிற பெயரில் விற்பனை செய்யப்பட்டு வரும் போலிப் பட்டுகளைக் கண்டு ஏமாறாமல் 'சில்க் மார்க்' லேபிள் போட்டு உத்திரவாதம் அளிக்கும்படி நுகர்வோர் வியாபாரியிடம் தாராளமாகக் கேட்கலாம்.

# புடவை வாங்கலாம்!

வாங்கிய பட்டு அதாவது புடைவைதான் என்றில்லாமல் பட்டு நூல், பட்டுத் துணி, பட்டு உடை, பட்டுக் கம்பளம் போன்ற எல்லாவித பட்டு தயாரிப்பிலும் 100% உத்திரவாதம் அளிக்கப்பட்டாலொழிய இனி ஏமாறத் தேவையில்லை.

'சில்க் மார்க்' லேபிள் இருந்தும் ஏதாவது ஒருவிதத்தில் வாங்கியது 100% பட்டுதானா என்கிற சந்தேகம் வந்தால் எங்கள் நிறுவனம் செலவில்லாமல் டெஸ்ட் செய்து உத்திரவாதமும் அளிக்கும். அதாவது லேபிள் கிழிக்கப்படாமல் இருக்க வேண்டும் என்பது முக்கியம்.

எங்கள் முகவரி : சில்க் மார்க் ஆர்கனைசேஷன் ஆஃப் இந்தியா, ஸ்பான்சர்டு பை சென்ட்ரல் சில்க் போர்டு, (மினிஸ்ட்ரி ஆஃப் டெக்ஸ்டைல்ஸ், கவர்ன்மெண்ட் ஆஃப் இந்தியா) நோடெல் ஆபீஸ், 76, 12வது அவென்யூ, அசோக் நகர்,சென்னை - 600 083." என்றார் திரு. பாண்டி. என்ன சகோதரிகளே, இனி ஏமாறாமல் பட்டுப் புடைவை வாங்கலாம் தானே!

பேட்டி : **மாலதி சந்திரசேகரன்**

* மாடல் : பத்மா நாராயணன்




* சில்க் மார்க் லேபிள்






இன்றைக்கு அழகு என்பது ஆண்களுக்கும், பெண்களுக்கும் இன்றியமையாத சமாச்சாரமாகி விட்டது. பெண்களைப் போலவே ஆண்களும் அழகு நிலையங்களுக்குச் சென்று தங்கள் முக அழகை, முடி அழகை, உடலழகை பராமரித்து வருகின்றனர்.

நாளுக்கு நாள் அதிகரித்து வரும் பொல்யூஷன், வேலை டென்ஷன் இதைத் தவிர வெயிலும் தன் பங்குக்கு காட்டு காட்டு என்று நகரவாசிகளை ஒருகை பார்க்கிறது. இதில் தினம் இல்லையென்றாலும் வாரத்துக்கொரு முறையாவது ப்யூட்டி பார்லர் விசிட் நமக்கு அவசியமாகிறது.

இப்படி மக்களின் பிரத்யேக தேவையைக் கவனத்தில் கொண்டு 'நேச்சுரல்ஸ்' ப்யூட்டி பார்லர் ஆண், பெண் இருவருக்குமாக ஒரே இடத்தில் அழகு பராமரிப்பு சேவையை சத்தமில்லாமல் செய்து வருகிறது. அண்ணா நகரில் தொடங்கப்பட்டிருக்கும் இந்தப் புதிய கிளையை ஒரு ஃபேமிலி பார்லர் என்று கூட வர்ணிக்கலாம்.

வீக்-எண்டில் ஒரு புதிய உற்சாகத்தைப் பெற்று வாரம் முழுவதும் மகிழ்ச்சியாக வலம் வரலாம். ஃபேஷியல், டையிங், ஸ்கின் கேர், ஹேர் கேர் என்று வாடிக்கையாளர்களைத் திருப்திப்படுத்துவதை தங்களது குறிக்கோளாகக் கொண்டு செயல்பட்டு வரும் நேச்சுரல் ப்யூட்டி பார்லரின் உரிமையாளர் வீணாவைச் சந்தித்து இவர்களின் ஸ்பெஷாலிட்டியைப் பற்றி அறிந்தோம்.




# கணினி தரும் அழகு!

''தற்போது அட்வான்ஸ்ட் தொழில்நுட்பம் கொண்டு எங்கள் ப்யூட்டி பார்லரில் வாடிக்கையாளர்களுக்கு பல வசதிகளைச் செய்து தந்துள்ளோம். ஒவ்வொருவருக்கும் தேவையான ஹேர்ஸ்டைலை தேர்வு செய்ய கணினி உதவியுடன் அழகான, அதே சமயம் பொருத்தமான ஸ்டைலை உருவாக்குகிறோம். இதையெல்லாம் எங்கள் செலவிலேயே வாடிக்கையாளர்களுக்கு செய்து கொடுக்கிறோம்.

இதே போல் நம் கைவிரல்களில் அழகான நெயில் பாலீஷ் டிசைன்களைப் போட்டுக் கொள்ளலாம். நம் விரல்களை இதற்கென்றே உள்ள பிரத்யேக மெஷினில் வைத்தால் நம் கை நகங்களுக்கேற்ற டிசைன்கள் கணினியில் தெரியும். அவற்றைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம்'' என்கிறார் வீணா குமாரவேலு.

யாரும் இனி கஷ்டமில்லாமல் நேச்சுரல்ஸ் பார்லரில் கணினி மூலம் அவரவர்களுக்குத் தேவையான அனைத்து அழகு யோசனைகளையும் அள்ளிக் கொண்டு வரலாம்.

- பப்பி





என்றும் உங்களுடன்

# மங்கையர் மலர் வெள்ளி விழா

## செப்டெம்பர் மாத மெகா போட்டி






தேஜஸ், சென்னை - 17 வழங்கும்

2,500 ரூபாய் மதிப்புள்ள பரிசு!

மங்கலத் திருவிளக்கு - 5 நபர்களுக்கு!

# யார் இவர் யாரோ!

போட்டி விவரங்கள் :

இங்கே கொடுக்கப்பட்டிருக்கும் படங்களில் உள்ளவர்களின் பெயர்களைக் கண்டுபிடித்து, க்ளூவில் உள்ள எண் வரிசைப்படி எழுதி அனுப்பவும்.

க்ளூஸ் :

1. ஒரு நாள் போதுமா இவர் பாடலைக் கேட்க!
2. இவர் பிரபல தபேலா விற்பன்னர் அல்ல!
3. வினாடி வினா.
4. உனக்காக எல்லாம் உனக்காக!
5. நீண்ட கால முதல்வர்.
6. கேரள சித்திரக்காரர்.
7. இந்திய கணினி நாயகன்.
8. முஷ்ரஃப் பாராட்டிய ஏழுமலையான்!
9. நவரச இயக்குநர்.
10. சொல்லில் சதம் அடித்தவர்.
11. ஹாக்கியில் பெயர் சொல்ல ஒரு பிள்ளை!
12. வெள்ளியைச் சுட்டவர்!

(திருப்புக)

# செப்டெம்பர் மாத மெகா போட்டி




**போட்டி விதிமுறைகள் :**

- முன்பக்கம் கொடுக்கப்பட்டிருக்கும் புகைப்படங்களில் இருப்பவர்களின் பெயர்களை 'க்ளூ'வில் உள்ள எண் வரிசைப்படி தனித்தாளில் எழுதி கூப்பனுடன் அனுப்பவும்.
- அனைவரும் கலந்து கொள்ளலாம்.
- வயது வரம்பு இல்லை.
- எத்தனை கூப்பன்கள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- **கடைசித் தேதி : 15.8.2005**
- பரிசுகள் அனைத்தும் விதிமுறைகளுக்கு உட்பட்டவை.
- ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.
- சரியான விடை அளிப்பவர்களிலிருந்து குலுக்கல் முறையில் இருவர் பரிசுக்குரியவராகத் தேர்ந்தெடுக்கப்படுவர்.
- முகவரி : ஆசிரியர், மங்கையர் மலர், 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை-600 032.

பெயர்: ....................

வயது: ....................

முகவரி: ....................

....................

....................

....................

....................

தொ.பே. எண்: ....................

## ஆகஸ்ட் மாத மெகா போட்டி முடிவு

விடை :

படம் 1 : படம் ஒன்றில் இரு உருவங்கள் :

- இளம்பெண் வலப்பக்கம் திரும்பிப் பார்க்கிற உருவம்.
- வயதான மூதாட்டியின் உருவம்

படம் 2 : கண்ணாடியில் பெண்ணின் பிம்பம் இடம், வலம் மாறாமல் அப்படியே தெரிவது.



*சரியான விடையை எழுதிய நபர்களில் குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப்பட்ட, பரிசு பெற்ற வாசகிகள்* ▸▸





1. ஆர். ரமா பாரதி, கும்பகோணம்.
2. வி.எஸ். வைஷ்ணவி, பெங்களூர்.

# மணி மங்கை






• ஜூன் இதழில் பரிசு பெற்ற செகந்திராபாத் வாசகி கௌசல்யா ஸ்ரீராமன்

சுதந்திர பாரதத்தினையும், அதனுடைய சுதந்திரத்திற்காகப் போராடிய லட்சோபலட்ச தியாகிகளையும் எத்தனை பேர் நினைவில் கொள்கிறோம்? எண்ணற்றோர் உயிர்நீத்து, ரத்தம் சிந்திப் பெற்ற சுதந்திரத்தின் நினைவுகளாய் நாம் எதனை பாதுகாத்து வைத்திருக்கிறோம்? சுதந்திர தினத்தன்று பள்ளிகளில் கட்டாயமாக மாணவர்களை வரவழைத்து தேசியக் கொடியேற்றி, இனிப்பு கொடுத்து மகிழ்வதோடு சரி! வார விடுமுறை நாள் போல் அன்றும் விடுமுறை அவ்வளவே. ஏன் இப்படி? என்று யோசித்துக் கொண்டிருக்கும் வேளையில்தான் என்னைப் பாதித்த அந்த கதை மங்கையர் மலரில் வெளியானது. நவம்பர் 98-ல் கிருஷ்ணா அவர்கள் எழுதி வெளியான **'வந்தே மாதரம்'** என்னும் கதையாகும். அதில் இடம்பெற்ற மீனலோசனி கதாபாத்திரம்தான் என் மனதில் இன்றைக்கும் நீங்காது நிற்பவர்.

சுதந்திரப் போராட்டத் தியாகி ஒருவர் சுதந்திர தினத்தின் போது, "தான் நின்று போராடி, உப்புசத்தியாக்கிரகம் நடத்திய வேதாரண்யத்திற்குப் போக வேண்டும்" என்று விரும்பி, தன் பேரனுடன் கிளம்புகிறார். வழியெங்கும் சுதந்திரப் போராட்ட நிகழ்ச்சிகளை நினைவுகூர்ந்தவாறே

**ரூ.25,000/-**

**மதிப்புள்ள தங்க நகை பரிசு பெறும் கட்டுரை**



# மணி மங்கை

## செப்டம்பர் மாத போட்டித் தலைப்பு: பயனடைந்த மருத்துவக் குறிப்பு

**ரூ.25,000/-** மதிப்புள்ள தங்கநகைப் பரிசு

*2002-ம் ஆண்டு மங்கையர் மலரில் நீங்கள் படித்து, பயன்பெற்ற மருத்துவக் குறிப்பை எழுதுங்கள்.*

1. பழைய இதழின் பயனடைந்த பக்கத்தின் ஜெராக்ஸ் பிரதியை அனுப்ப வேண்டும்.
2. ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.
3. பரிசு வருமானவரி விதிமுறைகளுக்கு உட்பட்டது.
4. கூப்பனை இணைத்து அனுப்ப வேண்டும்.
5. கடைசி தேதி **15.8.2005**

ஆசிரியர், மங்கையர் மலர்,
47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல்,
சென்னை - 600 032.

பெயர்: ..............................
வயது: ..............................
முகவரி: ..............................
..............................
..............................
..............................
தொலைபேசி எண்: ..............................
ஈமெயில்:
..............................

வேதாரண்யம் வந்தடைகிறார்.

அங்குதான் அறிமுகமாகிறார் மீனலோசனி. உப்புசத்தியாகிரகப் போராட்டத்தின் போது காவலர்கள் தாத்தாவை அடித்து உதைக்க, ரத்த வெள்ளத்தோடு இருந்த அவரை வைத்தியர் ரங்கநாதன் என்கிறவர் காப்பாற்றுகிறார். அவருடைய மகள்தான் மீனலோசனி என்பதை தாத்தா அறிந்து கொள்கிறார். "என்னுடன் வீட்டுக்கு வாருங்கள். அங்கு ஒரு நினைவுச் சின்னத்தைப் பொக்கிஷமாய் வைத்திருக்கிறேன்" என்று மீனலோசனி அழைத்துச் செல்கிறார். அங்கே ஒரு பெட்டியில் தாத்தாவின் ரத்தம் தோய்ந்த கறைகள், கிழிசல்கள் நிறைந்த வெள்ளை ஜிப்பாவை எடுத்துக்காட்டுகிறார். அது தாத்தா, அவர்கள் வீட்டில் தஞ்சமடைந்த போது அவர் அணிந்திருந்த ஜிப்பா.

இந்த இடத்தில்தான் மீனலோசனி என்னை வெகுவாகப் பாதித்து விட்டார். 'சுதந்திரப் போராட்ட நினைவுச்சின்னங்களாய் நாம் எதனை பாதுகாக்கிறோம்?' என்ற என் ஆரம்ப ஆதங்கத்திற்கு பதிலளித்தவர் மீனலோசனி. சுதந்திரப் போராட்டத்தின் பின்னணியில் எண்ணற்றோர் சிந்திய ரத்தத்தையும், காயங்களையுமே நினைவுச்சின்னமாய் ஜிப்பா வடிவில் பாதுகாத்திருக்கிறார் மீனலோசனி. அதைப் படித்த போது என் கண்களில் கண்ணீர் ஆறாகப் பெருக்கெடுத்து ஓடியது. என் மனதில் நின்ற கதாபாத்திரம் அவரே.

சுதந்திரப் போராட்ட நினைவுச் சின்னமாய் என் வீட்டில் எதுவும் இல்லை. ஆனால், மங்கையர் மலரில் வெளியான இந்தக் கதையையே அப்படி எண்ணிப் பாதுகாக்கிறேன். **'வந்தே மாதரம்'!**

**- லட்சுமி சுதாகரன்,**
**திருச்சி - 21.**

# மங்கையர் மலர்

பெட்டகம் 2 ஆகஸ்ட் 2005




# கூந்தலுக்குக் காய்கறி வைத்தியம்!

- இயற்கை 'டிப்ஸ்' இருபத்தைந்து

எடுத்துக்கோ...
எடுத்துக்கோ...






பட்டுச் சேலைகள்
டிசைனர் சேலைகள்
ஃபேன்சி சேலைகள்
சுடிதார் மெட்டீரியல்
காக்ரா சோலி
ஜீன்ஸ்
ரெடிமேட் ஆடைகள்
சிறுவர் ஆடைகள்

5%-60%
ஆடி
தள்ளுபடி

எடுத்துக்கோ

# சரவணா செல்வரத்தினம்

டெக்ஸ்டைல்ஸ்

75, உஸ்மான் ரோடு, ரங்கநாதன் தெரு எதிரில், தி.நகர், சென்னை- 17

## பாரம்பரியம்
## மற்றும்
## நாகரீகத்தின்
## அழகிய கலவை.

## (ஒவ்வொரு
## மணமகனும்
## எதிர்பார்ப்பது
## இதைத்தானே!)

**வழங்குகிறோம்**
**பாரம்பரியப் பட்டின் உயர்தரமும்,**
**புதுயுக டிசைன்களும் சங்கமிக்கும்**
**திருமண பட்டுச் சேலைகள்.**



# சேகர் எம்போரியம்
வாழ்வின் வண்ணங்கள்

22, ஆற்காடு சாலை, கோடம்பாக்கம், சென்னை - 600 024.
போன்: 2483 8035/ 2483 2075/2483 2076
www.sekar-emporium.com
E-mail: sekaremporium@yahoo.com



# சுப - யாத்ரா®



43. தெற்கு மாட வீதி, (சித்திர குளம் எதிரில்) மைலாப்பூர், சென்னை — 4.
Ph. 2495 0218, 2495 2319. Cell : 98400 64243.

**ஷிரிடி சாய் பாபா தரிசனம்** 17-08-05 14-09-05
ஷிரிடி, சனி சிங்கனாபூர், மஹா கணபதி (4 நாட்கள்) ரூ. 1700/-

**ஷிரிடி — பண்டரிபுரம்** 10-08-05 12-10-05
ஷிரிடி, சனி சிங்கனாபூர், பண்டரிபுரம், துல்ஜாபூர் (5 நாட்கள்) ரூ. 2500/-

**ஷிரிடி — நாசிக்** 24-08-05 28-09-05
ஷிரிடி, த்ரயம்பகேஷ்வர், பஞ்சவடி, சனிசிங்கனாபூர், மஹாகணபதி (4 நாட்கள்) ரூ. 2000/-

**ஷிரிடி — மந்த்ராலயம்** 24-08-05 28-09-05
ஷிரிடி, சனி சிங்கனாபூர், மஹாகணபதி, மந்த்ராலயம், பஞ்சமுகி ஆஞ்சநேயர் (5 நாட்கள்) ரூ. 2400/-

**ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமி தரிசனம்** 25-08-05 29-09-05
மந்திராலயம், பஞ்சமுகி, ஆஞ்சநேயர் கோவில், நவபிருந்தாவனம் (4 நாட்கள்) ரூ. 1700/-

**காசியாத்திரை** 10-10-05 (8 நாட்கள்) ரூ. 4800/-
அலஹாபாத், அயோத்யா, காசி, கயா



# ஸ்ரீ அய்யப்பா டிராவல் ஏஜன்ஸி

ஸ்தாபகர் : S.V. அய்யப்பன்

13/27, வெள்ளாளத் தெரு, புரசைவாக்கம், சென்னை-84. (தபால் நிலையம் எதிரில்). போன் : 26431023, 52020059
E-mail : sriayyappatravels@hotmail/yahoo/rediff.com/touchtelindia.net

02-08-05 ஆடி அமாவாசை பாண தீர்த்தம், நவகிரகம், நவ திருப்பதி, பாண்டி நாடு, திவ்ய தேசங்கள், தென் நாடு சக்தி பீடங்கள் யாத்திரை - 7 நாட்கள், ரூ. 3,200/-

09-08-05 திவ்ய தேசங்களில் நரசிம்மர் மற்றும் சுதர்ஸன தரிசனம் - 6 நாட்கள், ரூ. 3,060/-

10-08-05 பஞ்ச துவாரகை (ரயில்) - 15 நாட்கள், ரூ. 6,360/-

20-08-05 காவேரி தென்கரையில் 62 சிவஸ்தலங்கள் (பாகம்-2) - 6 நாட்கள், ரூ. 2,610/-

28-08-05 கோகர்ன (துளுவ நாட்டு சிவஸ்தலம்) கர்னாடக மாநில யாத்திரை (கோகுலாஷ்டமி உடுப்பி தரிசனம்) - 7 நாட்கள், ரூ. 3,200/-

31-08-05 அஹோபில 9 நரசிம்மர், 9 பிருந்தாவன, ஸ்ரீசைலம், மந்திராலயம் யாத்திரை - 6 நாட்கள், ரூ. 2,610/-

09-09-05 முக்திநாத் சாளக்கிராம நேபாள யாத்திரை (ரயில்) - 15 நாட்கள், ரூ. 7,290/- (ஆகாய விமானம், குதிரை கட்டணம் தனி)

17-09-05 குரு பெயர்ச்சி நவகிரக யாத்திரை - 4 நாட்கள், ரூ. 1,630/-

26-09-05 தொண்டை நாடு, நடு நாடு, சிவஸ்தலங்கள் - 6 நாட்கள், ரூ. 2,610/-

02-10-05 வடநாட்டு சக்தி பீடங்கள் (ரயில்) - 15 நாட்கள், ரூ. 7,200/-

05-10-05 நவராத்திரி சக்தி தரிசனம் ஸ்பெஷல், தென்நாட்டு சக்தி பீடங்கள் - 6 நாட்கள், ரூ. 2,700/-

19-10-05 சோழநாடு, தொண்டைநாடு, நடுநாடு, 64 வைஷ்ணவ திவ்ய தேசங்கள் - 6 நாட்கள், ரூ. 3,060/-

25-10-05 தீபாவளி ஹரித்வார் நிஜ கங்கா ஸ்நானம் யாத்திரை- 10 நாட்கள், ரூ. 5,400/-

25-10-05 தீபாவளி காசி கங்கா ஸ்நானம் யாத்திரை - 10 நாட்கள், ரூ. 5,400/-

05-11-05 திருச்செந்தூர் சூரசம்ஹாரம், ராமேஸ்வரம், 9 திருப்பதி - 6 நாட்கள், ரூ. 2,700/-

12-11-05 பாண்டிய நாடு, மலை நாடு, வைஷ்ணவ திவ்ய தேசங்கள் - 6 நாட்கள், ரூ. 3,060/-

கிளை : கோவை : 15/637, மேட்டுபாளையம் ரோடு, கோவை-2. Cell : 9894211024, 9894847325 Email : sriayyappatravels_coimbatore@touchtelindia.net

# இதுதான் பெண்கள் முன்னேற்றமா?

உத்திரப்பிரதேசத்தில்
ஏழைப் பெண்கள் படும் பாடு
அதிர்ச்சியிலும் வருத்தத்திலும்
ஆழ்த்துகிறது. பொருளாதார வளர்ச்சியில்
முன்னேறிக் கொண்டிருக்கும் இந்தியாவின் நிலை இதுதானா?

உங்களுக்குத் தெரியுமா? ஒவ்வொரு வருடமும் இந்தியாவில் பேறுகாலத்தில் சுமார் 5 லட்சம் பெண்கள் இறக்கிறார்கள் என்று. 5 வயது நிறையுமுன் இறந்து விடும் குழந்தைகள் எத்தனை தெரியுமா? சுமார் 1.1 கோடி. இதுதான் நாட்டின் முன்னேற்றமா? ஆனால் பெரிய பெரிய பத்திரிகைகள், எங்கும் வியாபித்துள்ள கேபிள் டீவி சானல்கள் என்ன சொல்லிக் கொண்டு இருக்கின்றன. "நமது நாடு இன்பார்மேஷன் டெக்னாலஜியில் மிக முன்னேற்றம் அடைந்துள்ளது" என்று. இந்தச் செய்தியைப் படிக்கும்போதும், தொலைக்காட்சி மூலம் கேட்கும் பொழுதும் எல்லோரும் புளகாங்கிதம் அடைந்து பூரித்துப் போகிறார்கள்.

உலகிலுள்ள மிகப் பெரும் பணக்காரர்கள் வரிசையில் நமது நாட்டு சில செல்வந்தர்களும் இருக்கிறார்கள் என்ற செய்தி





இட்லி மிளகாய்ப் பொடி தயாரிக்கிறீர்களா? மாறுதலுக்கு இப்படிச் செய்யலாமே...

வறுத்த சிவப்பு மிளகாய், உப்பு, வறுத்த பெருங் காயம் இவற்றைப் பொடிக்கவும். இத்துடன் வறுத்த வேர்க்கடலையையும், பொட்டுக்கடலை சிறிதும் சேர்த்துப் பொடி செய்யவும். இப் பொடியை இட்லி, தோசை, அடை, சப்பாத்தி இவற்றுக்குத் தொட்டுக் கொள்ளலாம். தயிரில் இப் பொடியைக் கலக்கி, மல்லித் தழை சேர்த்து கடுகு, உ. பருப்பு, கறிவேப் பிலை தாளித்து தயிர்ப் பச்சடியாக 'ரெய்தா' உபயோகிக்கலாம். சாதத்துடன் பிசைந்தும் சாப்பிடலாம்.

- ராஜம் தேசிகாச்சாரி பரணி.

காதில் தேன் பாய்வது போலிருக்கிறது பணக்காரர்களுக்கு, உயர்நிலை வர்க்கத் துக்கு, மெத்தப் படித்தவர்களுக்கு. ஆனால் ஏழைகள்? அதிலும் ஏழைப் பெண்கள் கஷ்டப்படுகிறார்கள். இன்னல்களில் உழல்கிறார்கள் என்பது ஒரு செய்தியே அல்ல இவர்களுக்கு.

ஒருமுறை உத்திரப்பிரதேசத்தில் பிரயா ணம் செய்யும் சமயம், சுகாதாரப் பணி யாளர் ஒருவர் சொன்ன செய்தி அதிர்ச்சி யைக் கொடுத்தது. உ.பி.யில் பெண்கள் படும் துயரம் சொல்லவொணாதது.

உத்திரப்பிரதேசத்தில் (குழந்தைப்) பேறுகாலங்களில் வருஷா வருஷம் இறக் கும் பெண்கள் எண்ணிக்கை சுமார் 40,000 பேர். வயதில் குறைந்த (குழந்தை பெற்ற) பெண்கள், உடல் எடை குறைந்த பெண் கள் போக, 3வது வகைதான் மிக முக்கிய மானது. ஆம் கருக்கலைப்பு. (அபார்ஷன்) கருக்கலைப்புதான் இப்பொழுது சட்டப் படி தவறல்லவே! குற்றமல்லவே!

அதிக அளவில் கருக்கலைப்பு செய்யப்படும் மாநிலம் உத்திரப்பிரதேசம். வருடத்திற்கு எத்தனை பேர் தெரியுமா? 2 லட்சம் பேர்கள்! பேறுகாலங்களில் மரணமடையும் பெண்களில் 15-30 சதவிகிதத் தாய்மார்கள் இவ்வாறான அறுவைச் சிகிச்சை செய்யப்படும் போது தான் மரிக்கிறார்கள்.

இரத்தப்போக்கு, சுகாதாரக் குறைவு டன் தொத்து வியாதி பரவுதல், உடற் காயங்கள் இவற்றால் மரணம் அவர் களைத் தழுவுகிறது. ஒழுங்கான முறையில் பொறுப்புடனும், மனிதாபிமானத்துட னும் சிகிச்சை செய்யப்பட்டால் நிறைய இறப்புகளைத் தடுக்க முடியும். ஆனால் தவறுகளை, தவறு செய்பவர்களை யாரும் கண்டுகொள்வதில்லை. தவறுகளுக்கு யாரும் பொறுப்பேற்பதுமில்லை.

குடும்பக் கட்டுப்பாடு முறைகள் பலவிருந்தாலும், அவற்றில் எதையும் பெண்கள் தேர்ந்தெடுத்துக் கொள்ளலா மென்றிருந்தாலும் நடைமுறையில் Tubectomy என்ற கருத்தடை அறுவை சிகிச்சை தான் செய்யப்படுகிறது. இதைச் செய்து கொள்பவர்களில் 97 சதவிகிதம் பெண் களே. இதில் பாதி பேர் "சிகிச்சைக்குப் பிந்தைய" கஷ்டங்கள்/பிரச்னைகளுக்கு ஆளாகிறார்கள். ஏழ்மையில் எதிர் கொள்ள முடியாமல் கஷ்டப்படுகிறார் கள். அறுவை சிகிச்சைகள் சுமார் 4.7 சதவிகிதம் தோல்வியில் முடிகின்றன. அறுவை சிகிச்சை வெற்றி பெறுவதில்லை. அதாவது ஆபரேஷனுக்குப் பின்னரும் பெண்கள் கருவுறுகிறார்கள். அதன் பின்னர் திரும்பவும் அறுவை சிகிச்சை செய்து "கட்டாய மரணத்துக்கு" தள்ளப் படுகிறார்கள்.

2002 - 2003 ஆண்டில் கருத்தடை அறுவை சிகிச்சை சம்பந்தமாக நடத்தப் பட்ட ஓர் ஆய்வில் அறியப்பட்ட

விவரங்கள் : ஆண்/பெண் இருபாலினருக்கும் அரசு சில வழிமுறைகளை விதித்திருக்கிறது.

ஆனால் நடைமுறையில் அவை கண்டுகொள்ளப்படுவதில்லை. பாக்டீரியா எதிர்ப்பு, தொற்று நோய் பரவாது தடுத்தல், உடலுறுப்பில் புண் ஆகாமல் பார்த்துக் கொள்ளுதல், முதலிய எச்சரிக்கை நடவடிக்கைகள் எதுவுமே செய்யப்படாமல் நடத்தப்படுகின்றன. மேலும் அந்த ஆய்வு தெரிவிப்பதாவது :

ஒருநாளைக்கு நடமாடும் மருத்துவ முகாம் மூலமாக 20க்கு அதிகமாக அறுவை சிகிச்சை செய்யக் கூடாது. என்பது கட்டாயம். ஆனால் ஒரு இடத்தில் 75 அறுவை சிகிச்சைகள் வெறும் 2½ மணி நேரத்துக்குள் செய்து முடிக்கப்பட்டிருக்கின்றன. அதாவது வெறும் 2 நிமிடங்களில் (120 வினாடிக்குள்) ஒரு அறுவை சிகிச்சை. என்ன வேகம்! என்னே சட்டம்! என்னே எச்சரிக்கைகள்! என்னே வழிமுறைகள்! என்னே பொறுப்புணர்ச்சி! என்னே சாதனை!

தீய பழக்கங்கள்
நகமாய்
வெட்டப்படட்டுமே...
நல்ல பழக்கங்கள்
மருதாணியாய்
அலங்கரிக்கப்படட்டுமே...

- ஜே. தனலக்ஷ்மி.

இம்மாதிரியான ஆய்வுகள் என்ன தெரிவிக்கின்றன?

என்ன செய்வதென்று தெரியாமல் வாழும் பெண்கள் ஒருபுறம், மறுபுறம் பொறுப்புகளுக்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டியவற்றிற்கு கொஞ்சமும் மதிப்பு கொடுக்காத நிலைமையிலுள்ள மருத்துவ அமைப்பு!

மற்றுமொரு ஆய்வின் தலைப்பு என்ன தெரியுமா? "மரணத்துக்கும் அறுவை சிகிச்சைக்குமிடையில் எதைத் தேர்ந்தெடுப்பது என்ற நிலை."

வாரணாசி மாவட்டத்தில் ஒரு பெண் 6 ஆண்டுகளில் 4 குழந்தைகள் பிரசவித்திருக்கிறாள். கடைசிக் குழந்தை பெற்று, 4 மாதங்களில் கருத்தடை அறுவை சிகிச்சைக்கு ஒப்புக் கொண்டிருக்கிறாள்.

அறுவை சிகிச்சை பண்ணுகையில் அவளது குடலில் பட்டு விட்டது. பக்கத்திலுள்ள ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்லுமுன்னரே அந்த அப்பாவிப் பெண் இறந்து விட்டாள். அந்த பாவப்பட்ட குடும்பத்துக்கு, இந்தத் தவறுக்கு என்ன காரணம், யார் காரணம் எனத் தெரியாது. ஆனால் ஒரு பொதுநல அமைப்பு, நீதித்துறை மூலம் வழக்குப் போட்டு 10,000 ரூபாய் நஷ்டஈடு வாங்கிக் கொடுத்துள்ளது. இம்மாதிரி நெஞ்சைத் துளைக்கும் நிகழ்வுகள் கணக்கின்றி உத்திரப்பிரதேசம் மட்டுமின்றி இந்தியத் திருநாட்டின் பலவிடங்களிலும் தினம் தினம் நடைபெற்றுக் கொண்டுதானிருக்கின்றன.

அப்பாவிப் பெண்களாகிய அவர்களுக்கு ஏன் இந்நிலை? காரணம் - அதிகரித்துக் கொண்டே போகும் மக்கள் தொகையைக் கட்டுப்படுத்த நினைக்கும் மனோபாவமே! அந்த மனோபாவத்துக்கு இம்மாதிரி சாவுகள் சாதாரணமே. அந்தச் சாவுகளுக்கு பலியாவது பெண்களே என்பதும் அற்ப விஷயமே!

உத்திரப்பிரதேசத்திலுள்ள பெண்களுக்கு மட்டுமா இந்நிலை? மற்றைய மாநிலப் பெண்களில் பலரும் இதே மாதிரி துயரங்களை அனுபவித்திருப்பார்கள். ஆனால், அவர்கள் படும் துயரங்கள் எல்லாம் மிகச் சக்திவாய்ந்த ஊடகங்கள் மூலமாக உலக வெளிச்சத்துக்கு வராது. ஏனென்றால் வெகுஜன மீடியாக்களுக்கு இதெல்லாம் செய்தியே அல்ல. சதாம் ஹுசேன் பாத்ரூமில் ஜட்டி துவைப்பதும், அமெரிக்க அதிபர் தன் செல்ல நாயைக் கொஞ்சுவதும்தான் இங்கு செய்தியாக்கப்படும்!

தமிழாக்கம் : **டி.எஸ். மரகதவள்ளி**

நன்றி : **'தி ஹிந்து'**

# தேன் நிலவு 5



“அத்தை! வெளி வராந்தாவில் அந்தப் பெரிய மனுஷர் வந்திருக்கார். கடையிலேருந்து, ரசகுல்லா, வடை ஏதாவது வாங்கி வரட்டுமா?”

ஹாரு உரத்த குரலில் கேட்டான்.

ஆனால் என்ன ஆச்சு இன்னைக்கு? ராம் கங்கா அத்தை ஒன்றுமே பதிலே சொல்ல மாட்டேங்கிறாளே?

இந்தப் பெரிய மனிதர் யாரு?

யாராவது பயங்கர ஆளா?

பெரிய எஜமானரும், அவர் பெயரைக் கேட்டதும் திடீர்னு பேசாம இருக்காரே... அத்தையும் எதுவும் பேசவில்லையே!

என்ன ஆயிற்று?

“ஏ அத்தை! என்னாச்சுது இன்னைக்கு? நீ பேசவே மாட்டியா? வாங்கி வரணுமின்னா சீக்கிரம் சொல்லு.”

பூர்ணிமா சட்டென்று பழைய நினைவுகளிலிருந்து மீண்டவளாக, “இனிப்பு வாங்கி வர வேண்டாம்” என்று சொல்லி விட்டுத் திரும்பவும் சமைய லறைக்குள் புகுந்து கொண்டாள்.

“இருக்கட்டும்... இருக்கட்டும்... நமஸ்காரம் செய்ய வேண்டும் என்று அவசிய மில்லை” நடுங்கும் மெல்லிய குரலில் சிவசங்கர் இந்த மறுப்புக் கட்டளையை மட்டும் உச்சாரணம் செய்து விட்டு, அதீந்திரனைப் பார்த்து “உட்கார்” என்று மட்டும் சொன்னார்.

அதீந்திரனை உற்றுநோக்கினார். இப்போதும், அதே பழைய தோற்றம், அரசகுமாரன் போன்ற உறுதியான உடல் கட்டு. கல்யாணத்துக்குத் தயாராக இருக்கும் மாப்பிள்ளைப் பையன் என்று சொன்னாலும் தவறில்லை. ஆனால் பூர்ணிமா எப்படித்தான் மாறிப் போய் விட்டாள்? கிழவியாகப் போய் விட்டாள்.

பணக்காரர் வீட்டுப் பிள்ளை. ராஜ போகத்தின் சுகத்தில் திளைத்த தேகம், அதுவுமில்லாமல் வயதும் அதிகம் ஆக வில்லை. நாற்பதுக்கும் கீழேதான். நல்ல ஆரோக்கியமுள்ள மனிதனின் விஷயத்தில் இது வாலிப வயது என்றே சொல்ல லாம்.

சிவசங்கர் சாதாரணக் குரலிலேயே பேச ஆரம்பித்தார். “சொல்லச் சங்கடமாக இருக்கிறது. ஆனால் நீ வீட்டிற்கு வந்திருக்கும் விருந்தாளி. பார்க்காமலேயே திருப்பி அனுப்பி விடுவது என்பது கிருஹஸ்தனுடைய தர்மத்துக்கு எதிரான விஷயம். அதனாலேயே பேச வேண்டியிருக்கிறது. திடீரென்று இங்கே இப்போது வந்திருப்பதன் காரணம் என்ன?” என்று கேட்டார்.

அதீந்திரன் நிமிர்ந்து பார்த்து விட்டு, குரலைச் சரிசெய்து கொண்டு, “மன்னிப்பு கிடைக்காது என்பது தெரியும். மன்னிப்புக் கேட்கும் பாக்கியமும் எனக்கில்லை. என்னுடைய வேண்டுகோள் மறுக்காமல் தெரியப்படுத்த வேண்டும். அம்மா அனுப்பினார் என்னை...”

“சொல். என்ன காரணத்துக்காக அனுப்பியிருக்கிறாள். எல்லாவற்றையும் கேட்கத் தயாராக இருக்கிறேன்.”

அதீந்திரன் அமைதியான குரலில், “திருமண அழைப்பைத்தான் அனுப்பியிருக்கிறார். அவருடைய பிள்ளையின் திருமணத்துகான அழைப்பிதழை... பல வருடங்களுக்கு முன்னால் நடந்த திருமணத்தின்... அம்மா, அவருடைய நாட்டுப் பெண் பேத்தியை அழைத்துப் போவதற்கான அழைப்பையும், விருப்பத்தையும் தெரிவித்து விடச் சொல்லி

வங்க மூலக்கதை : ஆஷா பூர்ணாதேவி

தமிழாக்கம் : புவனா நடராஜன்

என்னை அனுப்பியிருக்கிறார்" என்றான்.

"என்ன சொன்னாய்?"

"அதுதான் சொன்னேனே" இம்முறை தலையைக் குனிந்து கொண்டான் அதிந்திரன். "கஷ்டம் என்று தெரியும். இருந்தும் பிச்சை கேட்கிறேன்... செய்த தவற்றுக்கு மன்னிப்பே கிடையாதா? பிராயச்சித்தம் செய்வதற்கான சந்தர்ப்பத்தை எனக்கு தயவுசெய்து கொடுங்கள். நீங்கள் என்பதால் என்னால் இத்தனை தூரத்துக்குப் பேச முடிகிறது. உங்களால் முடியாததில்லை. உங்களுக்கு இது கஷ்டமில்லை."

சிவசங்கர் இந்தப் பேச்சுக்குப் பதில் சொல்லாமல் சட்டென்று எழுந்து முழு வராந்தாவிலும் குறுக்கும், நெடுக்குமாக

ஆசையில்லையா அதிந்திரா?"

"மிகவும் அதிகப்படியாக இருக்கலாம். துர்ப்பாக்கியமாகவும் இருக்கலாம். இருந்தாலும் உங்களைத் தெரியும் என்பதாலேயே..."

"வீண் பேச்சு ஏன் பேசுகிறாய் அதிந்திரா, என்னைத் தெரியும் என்று சொல்வதினால் பிரயோஜனம் இல்லை. இருந்தாலும் ஒன்று மட்டும் சொல்கிறேன். என் மன்னிப்பு கிடைக்கும், கிடைக்காது என் பதில் எந்த அர்த்தமும் இல்லை. இந்த விஷயத்தில் பூர்ணிமா என்ன தீர்மானிக்கிறாளோ அதுவே முடிவான சொல்."

இன்னும் ஒருமுறை குறுக்கும் நெடுக்கும் நடந்தார். பிறகு, "உன்னுடைய

## இப்படி ஓர் ஆசையா?



பீட்ரூட்டைப் பொரியலுக்கு அரியும் போது, அதிலிருந்து ஒரு சிறு துண்டை எடுத்து உதட்டில் தேய்த்துக் கொண்டால் உதடு நேச்சுரல் 'பிங்க்' கலரில் அழகாகத் தெரியும்.

– என்.வி. லக்ஷ்மி




நடந்தார். அதிந்திரனுக்கு மிக மிக அருகில் வந்து, "சரியாகச் சொன்னாய் அதிந்திரன். எனக்கு எதுவும் கஷ்டமில்லை. இருந்தாலும் உன் தாயின் இந்த நல்ல விருப்பத்தின் காரணம் என்ன? என்ற கேள்வியை என்னால் கேட்காமல் இருக்க முடியவில்லை."

"மனிதர்கள் மாறி விடுவதும், ஒருநாள் தன் தவற்றைத் தானே உணருவதும் இயல்புதானே."

"ஆனால் அந்தத் தவற்றுக்கான பிராயச்சித்தத்திற்கான சந்தர்ப்பம் எப்போதுமே காத்துக் கொண்டிருக்குமா என்ன? இது மிகவும் அதிகப்படியான

தாயாரின் இந்தப் புது எண்ணம், விருப்பம் என்பதுதான் ஆச்சர்யத்தின் காரணம். உண்மைதான்... நீ சொல்வது உண்மைதான். பெண்களின் மனது விசித்திரமானது என்பது உண்மைதான். ஆனால் உன் தந்தை?"

"அப்பா இல்லை." ஒரு நீண்ட பெருமூச்சு விட்டபடியே, அதிந்திரன் மெல்ல, "அப்பா உயிரோடு இல்லை. அப்பா இறந்து போய் விட்டார்" என்றான்.

சிவசங்கர் இந்தச் செய்தியைக் கேட்டுச் சற்றே திகைத்துப் போனார். மரணச் செய்தியின் விஷயமே அப்படித்தான். அதுமட்டுமில்லாமல் பாகு

டைய மரணச் செய்தியாக இருந்தாலும் துக்கத்தைக் கொடுக்கக்கூடியதுதான்.

"அவருடைய மரணச் செய்தி எனக்கு வெட்கத்தைக் கொடுத்தது. காரணம் நான் அவரை வெறுத்தேன் என்பதை நினைத்து, மரணம் அவருடைய குற்றங்களையெல்லாம் கழுவிப் பவித்திரமாக்கி விட்டது. அழுக்கற்றதாகி விட்டது" என்றான் அதீந்திரன்.

"நல்லது நீ ஓய்வு எடுத்துக் கொள். நீ "எனக்குப் பார்க்க வேண்டாம் அப்பா" என்றாள்.

சிவசங்கர் மிருதுவான குரலில், "நீ நன்றாக யோசனை செய்துதான் சொல்கிறாயா பூர்ணிமா?"

"ஆமாம் அப்பா."

"பிறகு வருத்தப்படக் கூடாது."

"நான் நன்றாக நிறைய யோசித்து விட்டேன்."

"என்னுடைய சொந்த விருப்பம்,




சொன்ன விஷயத்தைப் பூர்ணிமாவுக்குத் தெரியப்படுத்துகிறேன்."

உள்ளே திரும்பிச் சென்றார் சிவசங்கர்.

சமையலறையில் பூர்ணிமா திரும்பவும் தன்னுடைய வேலைகளில் ஆழ்ந்திருந்தாள்.

"அதீந்திரன் உன்னைப் பார்க்க விரும்புகிறார் பூர்ணிமா" பூர்ணிமா மிகவும் உறுதியான, ஆழ்ந்த குரலில், வெறுப்பு இதைப் பற்றி நினைத்து உன்னுடைய தீர்மானத்தை நீ முடிவு செய்யவில்லை இல்லையா?"

"நீங்கள் உங்களுடைய விருப்பு வெறுப்புக்களை எப்போதுமே என் மீது திணித்ததில்லையே அப்பா."

சிவசங்கர் பெண்ணை நிமிர்ந்து பார்த்தார்.

அமைதியான உறுதி நிறைந்த முகம்.

"நல்லது. நான் உன் தீர்மானத்தை

அவருக்குத் தெரிவித்து விடுகிறேன். இருந்தாலும் நீ விஷயத்தைத் தெரிந்து கொள்வது நல்லது. அதீந்திரன் அவருடைய தாயார் அனுப்பியதன் பேரில் வந்திருக்கிறார். அவருடைய அம்மா, உன்னையும் ஆலோவையும் அழைத்துக் கொள்ளும் தீர்மானத்துடன் அதீந்திரனை அனுப்பியிருக்கிறார்..."

"அப்பா!"

தீர்க்கமான, ஆழமும், உறுதியும் நிறைந்த குரல் சிதறிப் போயிற்று. "இத்தனை வருடங்களுக்குப் பிறகு யாராவது எங்களிடம் உண்மையான பிரியம் செலுத்த முடியுமா?"

"அப்படித்தான் எனக்கும் தோன்றியது. ஆனால் அதீந்திரன் தன் அப்பா காலமாகி விட்டதாகச் சொன்னார். அவருடைய அம்மா மிகுந்த துக்கத்தில் மனம் மாறி இத்தனை அற்புதமான முடிவுக்கு வந்து அவரை அனுப்பியிருப்பது சாத்தியமே. உலகில் நடக்கக்கூடியது தான்."

பூர்ணிமா இதற்குப் பதிலே சொல்லவில்லை.

அவள் மனதில் திரும்பத் திரும்ப ஒரே ஒரு வாக்கியம்தான் ஒலித்துக் கொண்டிருந்தது. அதீந்திரனின் தந்தை காலமாகி விட்டார்... அதீந்திரனின் தந்தை காலமாகி விட்டார்.

அப்பா என்ற சொல் எல்லோருக்கும் ஒரே மாதிரியான உணர்ச்சியைக் கொடுக்கக்கூடியதா என்ன?

"உன் விஷயத்தில் நன்றாக யோசித்து எப்போது நீ ஒரு முடிவுக்கு வந்தாயோ, பிறகு இது பற்றி நான் எதுவும் சொல்வதற்கில்லை. ஆலோ சம்பந்தமாக என்ன முடிவுக்கு வந்தாய்?"

"ஆலோ?!" பூர்ணிமாவின் அந்த அமைதியான உறுதியான முகமும் சற்றே இளகியது. உறுதியான, மென்மையான குரலும் சற்றே நடுங்கியது.

"ஆலோவை பள்ளியிலிருந்து அழைத்து வர ஆள் அனுப்பியிருக்கிறேன்"

"அழைத்து வர அனுப்பியிருக்கிறாயா?" அதிர்ந்தார் சிவசங்கர்.

"ஆமாம் அப்பா... ஹாருவை வீட்டில் முக்கியமான விஷயம் என்று சொல்லியனுப்பியிருக்கிறேன்."

"இது விஷயமாக யோசித்தாயா?"

"யோசித்தேன் அப்பா..." இதற்கு மேல் பூர்ணிமாவால் தன்னுடைய உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்தி, மறைத்து வைத்துக் கொள்ள முடியவில்லை. குரல் நடுங்கிற்று.

"வாழ்க்கையில் ஒருமுறையாவது தன் கண்களால் பார்க்கட்டும்."

கண்களால் பார்க்கட்டும்!?

அதுதானே! தந்தை உயிருடன் இருந்தும், இதுவரை தந்தையின் முகத்தைப் பார்த்தது கூட இல்லையே!

(நிலவு வளரும்)



பாத்திரம் கழுவும் 'ஸிங்' 'வாஷ்பேஸின்' போன்றவை சில சமயங்களில், தண்ணீர் போகாமல் அடைத்துக் கொண்டு அவஸ்தை கொடுக்கும். இரண்டு ஸ்பூன் சமையல் சோடா உப்புடன், ஒரு கப் வினிகர் கலந்து, 'ஸிங்'கில் ஊற்றி, அத்துடன் ஒரு கப் நீரையும் ஊற்றி வைத்தால், ஒரு மணி நேரத்தில் அடைப்பு நீங்கி விடும்.

- ஏ. ஹம்ஸத்.

# இதோ ஒரு டிஜிட்டல் ஓவியர்!

தங்கள் ஜூன் 2005 இதழில் 'கணினி ஓவியர்' என்ற கட்டுரை கண்டேன். எங்கள் அலுவலகத்திலும் இதுபோன்ற ஒரு 'டிஜிட்டல் ஓவியர்' இருக்கிறார். அவர் பெயர் திருமதி. சாவித்திரி. 'கண் பார்த்ததைக் கை வரையும்' என்று சொல்வார்களே! அது


சாவித்திரி





போன்று இவர் மனம் நினைத்தவாறு 'மௌஸ்' நகரும். தெய்வங்களின் படம் வரைவதில் முக அம்சமும், கண்களின் தீட்சண்யமும் சரியாக அமையப் பெற்றால்தான் ஓவியம் முழுமையுறும். இவர் வரையும் ஓவியங்கள் அப்படிப்பட்ட தீட்சண்யம் பொருந்தியவை. இவரது ஓவியங்கள் சிலவற்றை நமது மலர் தோழிகளும் கண்டுரசிக்க இங்கு அனுப்பியுள்ளேன்.

**- நளினி சுப்ரமணியன்.**







● மணிமேகலை செல்லையா

# கணினி ஓவியராக ஆசையா?

இளமையில் பள்ளிப் பாடங்களைத் தவிர நாம் கற்கும் மற்ற கலைகள் (பாட்டு, நடனம், ஓவியம்) நம் மனதில் "பசுமரத்து ஆணி போல்" நன்கு பதிந்து விடுகிறது. அதே போல், நான் இளமையில் கற்ற ஓவியக் கலை, எனது 50-வது வயதில் மிகவும் உதவியாக இருந்தது. தற்போது பத்து ஆண்டுகளாக ஓவியம் வரைந்து வருகிறேன்.

கணினியில் ஓவியம் வரைவது பற்றி ஜூன் மாத இதழில் ஒரு சகோதரி எழுதியிருந்தார்.



அதற்குத் தேவையான 'ஃபோட்டோ ஷாப் சாஃப்ட்வேர்' பயன்படுத்தி ஓவியம் வரைவது, 'ஃபோட்டோ எடிட்டிங்' போன்றவைகளை இலவசமாக ஆன்-லைனில் கற்கலாம்.

www.hp.com அல்லது www.hponline courses.com என்ற இணையதளத்திற்குச் சென்று அதில் உங்கள் பெயரைப் பதிவுசெய்து கொள்ள வேண்டும். அதில் யூஸர் நேம், பாஸ்வேர்ட் கொடுத்து நமக்கு விருப்பமுள்ள பாடத்தில் பதிவுசெய்து கொண்டால் நம்முடைய ஈ-மெயில் விலாசத்திற்கு பாடங்கள் வந்து விடும். இதில் சான்றிதழ் வேண்டுமென்றால் அதில்

உள்ள பயிற்சிகள், கேள்வி-பதில்கள் இவற்றைச் செய்தால் அந்த படிப்பின் முடிவில் நம் பெயரில் உள்ள சான்றிதழை நாம் பிரிண்ட் செய்து எடுத்துக் கொள்ளலாம். இந்தப் படிப்பில் டிஜிட்டல் ஃபோட்டோகிராபி, வெப்சைட் டிசைனிங், பிரிண்டிங் போன்ற 10க்கும் மேற்பட்ட படிப்புகள் உள்ளன. அவரவர்களின் தேவைக்கு ஏற்ப தேர்வு செய்து கொள்ளலாம். இதில் முக்கியமாகக் கவனிக்க வேண்டியது இந்தப் பாடங்களை நமது கணினியில் இறக்கிக் கொள்வதற்கு முன் சிஸ்டமில் நார்டன், ஏவிஜி போன்ற ஏதாவது ஒரு ஆன்டி வைரஸ் சாஃப்ட்வேர் இருக்கிறதா என்று பார்த்துக் கொள்ள வேண்டும்.

இந்தப் படிப்பு, ஒரு பொழுதுபோக்கு மட்டுமல்ல. இதில் உபயோகமான நிறைய விஷயங்களை நாம் தெரிந்து கொள்ளலாம். பிரிண்டிங் கோர்ஸில் கிரிட்டிங் கார்டுகள், விசிட்டிங் கார்டு, இன்விடேஷன் கார்டு போன்ற கார்டுகள் செய்யும் முறைகள் விவரமாக கொடுக்கப்பட்டுள்ளன.

இதில் குறிப்பிட்ட நேரத்தில்தான் ஆரம்பிக்க வேண்டும், முடிக்க வேண்டும் என்ற அவசரம் கிடையாது. கோர்ஸ் ஃபைலை டவுண் லோட் செய்து ஆஃப் லைனில் வைத்து படித்துக் கொள்ளலாம் அல்லது பிரிண்ட் எடுத்துக் கொண்டு நேரம் கிடைக்கும் போது படித்துக் கொள்ளலாம். இல்லத்தரசிகளுக்கு இது ஒரு வரப்பிரசாதமாகும்!

- மணிமேகலை செல்லையா

# இம்மாத இல்லத்தரசி

**சமையல் கூப்பன்**

கடைசி தேதி : 20.08.2005

பொருள் : கருப்பட்டி
(பனைவெல்லம்)

என்ற தலைப்பில் சமையல் குறிப்பை இதனுடன் அனுப்பியுள்ளேன். இச் சமையல் குறிப்பு இதுவரை எந்தப் பத்திரிகையிலும் வெளியானதல்ல என்று உறுதி கூறுகிறேன்.

கையொப்பம்

## உருளைக்கிழங்கு சூப்

* சூப்



**தேவையான பொருள்கள் :**

பசலைக் கிரை - 100 கிராம்,
காரட் - 100 கிராம்,
உருளைக்கிழங்கு - 500 கிராம்,
எண்ணெய் - 2 மேஜைக்கரண்டி,
காய்கறி வேகவைத்த தண்ணீர் - ¾ லிட்டர்,
கடைந்த பாலேடு - 3 மேசைக்கரண்டி.

**செய்முறை :**

# உருளைக்கிழங்குதான் ரொம்பப் பிடிக்கும்!

காய்கறிகளை நன்றாகக் கழுவி நறுக்க வேண்டும். சட்டியில் எண்ணெய் சூடானவுடன் நறுக்கிய காய்கறிகளை இலேசாக வதக்கவும். பின்னர் காய்கறி வேகவைத்த தண்ணீரை ஊற்றி 20 நிமிடம் குக்கரில் வேகவைக்கவும். சூடு ஆறியவுடன் நன்றாக மசிக்கவும். அல்லது மிக்ஸியில் ஒரு சுற்றுச் சுற்றி எடுக்கலாம். நிறைய நேரம் மிக்ஸியில் அடித்தால் சூப் களி போல் ஆகிவிடும்.

## உருளைக்கிழங்கு ரோஸ்ட்

**தேவையான பொருள்கள் :**

உருளைக்கிழங்கு - 500 கிராம்,
காரட் - 800 கிராம்,
கொத்துமல்லி இலை - 1 கட்டு,
கடலை மாவு - 1 கப்,
உப்பு தேவைக்கேற்ப,
நல்ல மிளகுப்



* கொழுக்கட்டை

பொடி - 1 தேக்கரண்டி,
மசாலாப் பொடி - 1 தேக்கரண்டி,
எண்ணெய் - பொரிப்பதற்கு,
கெட்டித் தயிர் - 2 கப்



* ரோஸ்ட்

*செய்முறை:*

உருளைக்கிழங்கு மற்றும் காரட்டை துருவிக் கொள்ளவும். கொத்துமல்லி இலைகளை நன்றாகப் பொடியாக நறுக்கவும்.

மிளகு, மசாலாப் பொடி, உப்பு, தயிர், கடலை மாவு மற்றும் காய்கறி, மல்லி இலைகளுடன் நன்றாகச் சேர்த்து தோசை மாவு பதத்தில் கலக்கவும்.

எண்ணெய் சூடானவுடன் இந்தக் காய்கறிக் கலவையை ஒரு பெரிய கரண்டியில் எடுத்து தோசைக்கல்லில் தோசை போல் இடவும். ஆனால் தடிமனாக இருக்க வேண்டும். ஒருபுறம் ப்ரவுன் நிறம் வந்தவுடன் திருப்பிப் போட வேண்டும். இளம் ப்ரவுன் நிறத்தில் இருந்தால் போதுமானது. இதை உப்பிட்ட கெட்டித் தயிருடன் சாப்பிடலாம். தேங்காய்ச் சட்னி கூட நல்ல காம்பினேஷன்தான்.

(கடலை மாவைத் தவிர்த்து முட்டை மூன்றும் கலக்கலாம்)

## உருளைக்கிழங்கு கொழுக்கட்டை

**தேவையான பொருள்கள் :**

உருளைக்கிழங்கு - 1½ கிலோ,
பிரட் - 2,
வெண்ணெய்/நெய் - 2 மேஜைக்கரண்டி,
உப்பு - தேவைக்கேற்ப.

*செய்முறை :*

அரை கிலோ உருளைக்கிழங்கை தோலுரித்து துருவிக் கொள்ளவும். அதை ஒரு மெல்லிய துணியின் உள்ளே வைத்து அதில் உள்ள தண்ணீரைப் பிழிந்து எடுக்கவும். இந்தத் துருவிய தண்ணீர் எடுத்த உருளைக்கிழங்கை தனியாக வைக்கவும்.

வெண்ணெய் அல்லது நெய்யில் பிரட் துண்டுகளை (சிறியதாக நறுக்கவும்) பொரித்து தனியாக வைக்கவும்.

மீதி ஒரு கிலோ உருளைக்கிழங்கை வேகவைத்து எடுக்கவும். தோலுரித்து கெட்டியாக மசிக்கவும். உப்பிட்டுக் கொள்ளவும். உள்ளங்கையில் மசித்த கிழங்கை தட்டிக் கொள்ளவும். அதன் நடுவில் பொரித்த ரொட்டி வைத்து மசித்த கிழங்கால் மூடவும். இது கொழுக்கட்டை போல் உருண்டையாக இருக்க வேண்டும். இதைத் துருவிய உருளைக் கிழங்கில் புரட்டி எடுக்கவும்.

பெரிய சட்டியில் தண்ணீர் ஊற்றி கொதிக்க விடவும். தண்ணீர் கொதித்தவுடன் மிதமான தணலில் வைத்து கொழுக்கட்டைகளை ஒவ்வொன்றாக உள்ளே போடவும். 20 - 25 நிமிடங்களில் மேலே மிதந்து வரும் போது எடுக்கவும்.

இதைச் சாப்பிடும் போது கர்நாடக வாசிகளின் "ராகி முத்தே"யை நினைவில் வைக்க வேண்டும். கடித்து சாப்பிடக் கூடாது. அப்படியே விழுங்க வேண்டும்.

- கார்த்திகா

SAASTHAA
SHRI CHAKKRA

# மூன்று கல் ரகசியம்
# சமையலறை அதிசயம்!

தேங்காய் துருவி மற்றும்
கோதுமை,மைதா மாவு
பிசையும் கருவிகள் இலவசம்!




சிறப்பம்சங்கள்

- 2 லிட்டர் கொள்ளளவு
- 15 நிமிடத்தில் மாவு அரைக்கும் அதிசயம்
- கடினமான கருப்புக் கல்
- ஹெவி டியூட்டி மோட்டார்
- 50% வரை மின்செலவு குறைவு
- உறுதியான ஏபிஎஸ் பாடி
- உடையாத பாலிகார்பனேட் மூடி
- கிரைண்டர் தயாரிப்பில் 25 வருட அனுபவம்
- R&D தனிப்பிரிவு



110 volts & 60 Hz availabl
for USA & Canada

## தமிழகமெங்கும் முன்னணி கடைகளில் கிடைக்கும்

டிஸ்ட்ரிபியூட்டர்கள் :

கோயமுத்தூர் / நீலகிரிஸ் :
லக்ஷ்மண் அசோசியேட்ஸ்,கோவை
Ph : 0422-2541297, 2541397

சென்னை / காஞ்சிபுரம் / திருவள்ளூர் :
ஜோதி அப்ளையன்சஸ்.
Ph : 044-52173064, 25290084

வேலூர் / திருவண்ணாமலை
சீனிவாசா அசோசியேட்
Ph : 0416-2213190,Cell:94434-0

செங்கல்பட்டு :
ஜோதீஸ்வரி எண்டர்பிரைசஸ்
Ph:04114-223333

சேலம் / தர்மபுரி / நாமக்கல் :
விக்னேஷ் ஏஜென்சீஸ்
Mobile:98427-66539/36539

கடலூர் / விழுப்புரம் :
ஜெயம் மார்க்கெட்டிங்
Ph:0431-2701123,Cell:98424-11066

பாண்டிச்சேரி :
ஸ்ரீ குமரன் ஸ்டோர்ஸ்
Ph : 0413-3090610

ஈரோடு / கரூர் :
ஸ்ரீ இண்டஸ்ட்ரீஸ்
Ph:0424-2252408,Cell:94437-40913

திருச்சி :
மெயின் டீலர் : கிஷோர்குமார் டிரேடர்ஸ்
Ph : 0431-2701262

திருச்சி/தஞ்சாவூர்/திருவாரூர்/நாகப்பட்டினம்/அரியலூர்/பெரம்பலூ
எம்.ஆர்.எம். ஏஜென்சீஸ்
Ph : 0431-2750430, 2750290

திருநெல்வேலி / தூத்துக்குடி / கன்னியாகுமரி :
திரு. நெல்லையப்பர் ட்ரேட் லிங்க்ஸ்
Ph : 0462-2578425 Mobile : 98421-58225

மதுரை/தேனி/திண்டுக்கல்/ராமநாதபுரம்/ சிவகங்கை/புதுக்கோட்டை/விருதுநக
பி.சி. பர்னிச்சர் லேண்ட், மதுரை
Ph : 0452-2345806, 5373221.

தயாரிப்பாளர்கள் : **SHREE SAASTHAA GRINDERS**

430, Kannusamy Gounder Street, Rathinapuri, Coimbatore - 27. Ph : 2332133, Cell : 98430-72346.

சாஸ்தா – சமையலறையின் சூப்பர் ஸ்டார்

# கூந்தல் பராமரிப்பிற்கு : இயற்கை 'டிப்ஸ்' இருபத்தைந்து




1. 'சீப்பு' உங்களுக்கென்று தனியாக வைத்துக் கொள்ளவும். வாரத்தில் மூன்று தடவை அதைக் கழுவ வேண்டும். உலோகத்தால் ஆன சீப்புகளைத் தவிர்க்கவும்.

2. தேங்காயைத் தண்ணீர் சேர்க்காமல் அரைத்துப் பால் பிழியவும். இதை இரும்புக் கடாயில் காய்ச்சினால் எண்ணெய் தனியாக வரும். அந்த எண்ணெயைத் தலையில் தடவி ஊறியபின் சீயக்காய் அல்லது கடலை மாவு தேய்த்து அலசவும்.

3. நல்ல மரச் சீப்பினால் தலையை அழுந்த வாரினால் மயிர்க் கால்களில் ரத்த ஓட்டம் அதிகமாவதோடு முடி வளர்வதும் தூண்டப்படுகிறது.

4. நீங்கள் உபயோகிக்கும் ஷாம்பூவுடன் சில துளிகள் கிளிசரின் சேர்த்துக் கொண்டால் முடி அறுந்து போகாது.

5. இரண்டு ஸ்பூன் வினிகருடன் கடலை மாவைக் குழைத்துக் கால் மணி நேரம் ஊறவைக்கவும். இதை நன்றாக மயிர்க்கால்களில் படும்படித் தடவி அரை மணி நேரம் ஊறிய பிறகு அலசி விடவும். பொடுகு போயே போச்!

6. அழுகின தேங்காயைத் தூக்கி எறியாமல், சிறிது கடுநீருடன் அரைத்துத் தலையில் தடவி ஊறவைக்கவும். பிறகு நன்றாக 'மஸாஜ்' செய்யவும். மயிர்க்கால்கள் வலுப்பெற வழி இது!

7. முடி எல்லோருக்கும் அடர்த்தியாக வளரும் என்று சொல்ல முடியாது. இது பரம்பரையாக வருகின்ற சொத்து என்பதுதான் உண்மை. அதே போல்தான் வழுக்கை விழுவதும். அதைப் புரிந்து கொண்டால் கவலைப்பட்டு முடி கொட்டுவதைத் தவிர்க்கலாம்.

8. வைட்டமின் 'பி' காம்ப்ளெக்ஸ் குறைபாட்டினால் விரைவில் தலைமுடி வெளுக்க ஆரம்பிக்கும். ஊட்டமிக்க உணவு இந்தக் குறைபாட்டை நீக்கும்.

## கூந்தலுக்கு

9. நெல்லிக்காயையும், ஊறவைத்த வெந்தயத்தையும் நன்றாக அரைத்து அந்த விழுதைத் தலையில் தடவி ஊறவைப்பது குளிர்ச்சியைத் தரும். கண் எரிச்சலைப் போக்கும்.

10. விளக்கெண்ணெயைப் போல் குளிர்ச்சி தருவது வேறு எதுவுமே இல்லை. விளக்கெண்ணெய் இரண்டு டேபிள் ஸ்பூன், தேங்காய் எண்ணெய் ஒரு டேபிள் ஸ்பூன் எடுத்து இலேசாகச் சுடவைத்து மயிர்க்கால்களில் நன்றாகப் படும்படித் தடவி விடவும். ஒரு பழைய துணியை வெந்நீரில் நனைத்





# காய்கறி வைத்தியம்!

துப் பிழிந்து, தலையின் மீது சுற்றவும். அந்தச் சூடு உள்ளே இறங்கும். சற்று ஆறியதும் மீண்டும் அவ்வாறு செய்யவும். பிறகு தலையை ஷாம்பூ போட்டு அலசி விடவும். முடி உதிராமல் காக்க முத்தான வழி.

11. கூந்தல் வறண்டு இருந்தால், ஒரு கிண்ணத்தில், மருதாணிப் பொடி, தேங்காய்ப் பால், தேங்காய் எண்ணெயும் சேர்த்துக் குழைத்துத் தலையில் மஸாஜ் செய்யவும். அரைமணி



## அம்மாடியோவ்!

இங்கு காணப்படும் படத்தைப் பார்த்து மிரண்டு விடாதீர்கள்! சீனாவில் ஜீஜியாங்கோவில் வசிக்கும் தாயி யுக்வின் என்ற பெண்ணினுடைய கூந்தலைத்தான் பார்க்கிறீர்கள். நீளம் எவ்வளவு தெரியுமா? 4.2 மீட்டர்! அம்மாடியோவ்! 26 வருடங்களாக இந்த தலைமுடியை வளர்க்கிறார் இவர்.

நன்றி : ஈநாடு நாளிதழ் (தெலுங்கு)
தகவல் : சாந்தா ராவ்

நேரம் கழித்துத் தலைக்குக் குளிக்கலாம்.

12. அங்கங்கே தலையில் சிறு பொட்டல் இருந்தால் சிறிய வெங்காயமும், மிளகுப் பொடியும் சேர்த்துத் தடவி ஊற வைத்தால் மீண்டும் முடி வளரும்.

13. தலைமுடிக்குப் போஷாக்குத் தரும் ஷாம்பூ பவுடர் வீட்டிலேயே தயாரிக்கலாம். ஒரு பங்கு சீயக்காய், வெந்தயம் கால் பங்கு, பச்சைப் பயறு அரைப் பங்கு, புங்கங்காய் கைப்பிடி எடுத்து மிஷினில் அரைத்து வைத்துக் கொள்ளவும். ரசாயனப் பொருள்கள் இல்லாத பொடி, எந்தவிதத் தீங்கும் ஏற்படுத்தாது. முடியும் வளரும்.

14. முடி பளபளக்கக் காய்கறி வைத்தியம் இதோ : வெங்காயத்தையும் முட்டைக்கோஸையும் பொடிப் பொடியாக நறுக்கி (ஒரு கப்) அதை இரவு முழுவதும் ஒரு செப்புப் பாத்திரத்தில் போட்டு வைக்கவும். காலையில் சிறிது யூடிகோலன் சேர்த்தால் வெங்காய வாசனை போய் விடும். இந்தச் சாற்றுடன் தேங்காய் எண்ணெய் கலந்து மயிர்க்கால்களில் படும்படி நன்றாக மஸாஜ் செய்யவும். சீயக்காய்ப் பொடி போட்டுக் குளித்தால் முடி பளபளப்பாக மென்மையாக...

15. நேரமில்லை என்பவர்கள் சாதம் வடித்த கஞ்சியில் வெந்தயப் பொடி, பயத்த மாவு கலந்து ஊறவைத்துத் தேய்த்துக் கொள்ளலாம்.

16. இளநரையைத் தடுக்க எளிய வழி : கறிவேப்பிலைத் துவையல்தான் சிறந்தது. கீரை, பூசணிக்காய், பசும்பால், வெங்காயம் ஆகியவற்றை அடிக்கடி உணவில் சேர்த்து வந்தால் இளநரையைத் தடுக்கலாம்.

17. பித்தம் உடலில் அதிகமானாலும் நரை ஏற்படும். கசகசாவும் அதிமதுரமும் சம அளவு எடுத்துப் பொடி செய்து பசும்பாலில் குழைத்துத் தலையில் தடவி ஊறியபின் குளித்தால் விரைவில் குணம் தெரியும்.

18. தேங்காய் எண்ணெய் தடவிக் கொள்ளும் வழக்கம் இருப்பவர்கள், அந்தத் தேங்காய் எண்ணெயில் காய வைத்த செம்பருத்திப் பூ மற்றும் ஆல மரத்தின் இளம் வேர்களையும் பொடி செய்து கலந்து வைத்துக் கொண்டு பயன்படுத்தினால் முடி கறுப்பாக வளரும்.

19. ஓடி ஆடி வெயிலில் அலைந்து

# வெற்றிக்கு வழி



**இவரை ஒருமுறை சந்தியுங்கள். உங்கள் வாழ்க்கையில் ஒரு மிகப்பெரிய திருப்பத்தை, வெற்றியை மிக விரைவில் அடைவீர்கள். இதை இவரிடம் சென்றவர்கள் அனைவரும் அனுபவப்பூர்வமாக கூறிய உண்மை.**

உங்கள் வாழ்க்கையில் உள்ள அனைத்துப் பிரச்னைகளுக்கும் பெயர், கையெழுத்து, தொழில் வசியம், இராஜ வசியம் போன்ற வற்றின் மூலம் 100க்கு 100 சதம் தீர்த்து வைக்கிறார். உலகளவில் பல்லாயிரக்கணக்கானோர் வாழ்வில் வளம் பெறச் செய்துள்ளார்.

தொழிலில் வெற்றி இல்லாமை, வியாபாரத்தில் விருத்தி இல்லாமை, கணவன் - மனைவிக்குள் கருத்து வேறுபாடு, தாம்பத்யக் கோளாறு, திருமணம் தடைபட்டுக் கொண்டேயிருத்தல், குழந்தை பாக்கியம் இல்லாமை, வெளிநாடு செல்லத் தடை, எதிர்ப்பு, கோர்ட் வழக்கு, மனக்குழப்பம், பணம் இருந்தும் மனநிம்மதி இல்லாமை, கடின உழைப்பிருந்தும் செல்வம் சேர்க்க முடியாமை, புகழ் பெற முடியாமை, முயற்சி இருந்தும் முன்னேற்றத் தடை, செய்வினை, மாந்திரீக பாதிப்பு, தீய பழக்கங்களுக்கு அடிமையாதல் போன்ற அனைத்துப் பிரச்னைகளுக்கும் பெயர், கையெழுத்து, தொழில் வசியம், பெயர் வசியம், இராஜ வசியத்தின் மூலம் தீர்த்து வைக்கிறார்.

இவரால் தொழில் வசியம் செய்யப்பட்ட அனைத்துத் தொழில் நிறுவனங்களும் இன்று முன்னணியில் வெற்றிகரமாக இயங்கிக் கொண்டிருக்கின்றன.

இவரிடம் பெயர் வசியம் செய்து கொண்டவர்கள் பலரும் இன்று கலைத் துறையிலும், அரசியலிலும் புகழ்பெற்று விளங்குகிறார்கள். இராஜவசிய உச்சாடனப்படி அதிர்ஷ்டப் பெயர் அமைத்துக் கொண்டவர்கள் பலரும் இன்று மிகப்பெரிய கோடீஸ்வரர்களாகவும், சாதனையாளர்களாகவும் திகழ்கிறார்கள்.

வெற்றியடைய முடியாத பல காரியங்களைச் சவால் விட்டுச் சாதித்துக் கொடுத்துள்ளார்.

ஆண்-பெண் எந்தத் தேதியில் பிறந்தவராக இருந்தாலும் அவர்கள் திருமணம் செய்த நாளின் கூட்டு எண் (திருமணத் தேதி, மாதம், வருடம் மூன்றையும் கூட்டி வரும் எண்) 2, 4, 5, 7, 8 வரும் நாளில் கண்டிப்பாகத் திருமணம் செய்யக் கூடாது. அப்படிச் செய்தால் சோதனைகளும், போராட்டங்களும் நடக்கும். இதிலிருந்து விடுபட இவர் சொன்னபடி **"மறுமாங்கல்ய பூஜை"** செய்து கொண்டவர்கள் அனைவரும் இன்று சிறப்புடனும், செல்வச் செழிப்புடனும் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள்.

நீங்களும் வாழ்வில் வளம்பெற, பணம், பதவி, புகழ் பெற உடனே (அதிர்ஷ்டக் கலை) அதிர்ஷ்ட நியூமராலஜி நிபுணரை இன்றே சந்தியுங்கள்.

வெளிநாட்டு அன்பர்கள் போன் (அல்லது) தபால் மூலம் தொடர்பு கொண்டு பயனடையுங்கள்.

விஞ்ஞான ஆய்வு முறையில் நியூமராலஜி, நேமாலஜி, சைன், தொழில் வசியம், பெயர் வசியம், இராஜவசியம், சர்வ காரியசித்தி வசியம், ஜன வசியம், மேக்பவர், கையெழுத்து வசியம் போன்றவற்றைப் பற்றி பல அற்புதமான நூல்களை எழுதியுள்ளார்.

உலகளவில் விற்பனையில் சாதனை படைத்துக் கொண்டிருக்கும் இவரது புத்தகங்களை வாங்கிப் படியுங்கள்.

1. **அதிர்ஷ்ட பெயர் எண் சாஸ்திரம்** (தமிழ், ஆங்கிலம், தெலுங்கு) ரூ.300/-
2. **வெற்றிக்கு வழி** ரூ.1,050/-
3. **பணம், பதவி, புகழ்** ரூ.550/-

தபால் மூலம் பெற - M.O. செய்யுங்கள்.
வெளிநாட்டினர் இரு மடங்கு தொகை அனுப்புங்கள்.

**வாழ்வில் முன்னேற வந்து சந்தியுங்கள்**

**சென்னை வருகை**

**ஆகஸ்ட் - 3,4 செப்டெம்பர் - 7,8, அக்டோபர் 5,6 தேதிகளில் மட்டும்**
**ஹோட்டல் தாச பிரகாஷ்**
100, பூந்தமல்லி ஹைரோடு
செல்: (0) 94430 56366
போன்: 044 - 28255111

**உங்கள் வெற்றிக்கு வழிகாட்டும் ஜோதிட மாமேதை கே.ஆர். பிரபாகர் ராஜ்**

**நியூமராலஜி - நேமாலஜி - சைன் - தொழில் வசியம்**




## கே.ஆர். பிரபாகர்ராஜ் M.A.,

நல்லாந் தோட்டம், கஞ்சு வக்கரை (P.O) 638 459.
பு. புளியம்பட்டி (Via), கோவை (Dt.)
TAMIL NADU - INDIA. Ph:(04254) 287258.
Cell:(0) 94430 56366 Fax: 04254 - 287258





வார விடுமுறை : புதன், வியாழன்

# நீங்கள் நினைப்பதை அடையலாம்.

திரிந்து வாழ்க்கையை ஓட்டுகின்ற காலத்தில் நாம் இருக்கிறோம். தினமும் உச்சந்தலையில் ஒரு விரல் விளக்கெண்ணெயைத் தடவி வந்தால் கண்ணுக்குக் குளிர்ச்சி, முடியும் உதிராது.

20. வெந்தயத்தைப் பொடி செய்து வைத்துக் கொள்ளவும். அதை முதல் நாள் இரவு சிறிது தண்ணீரில் குழைத்து வைத்து விடவும். காலையில் அந்தப் பசையை மயிர்க்கால்களில் படும்படித் தடவி பின் குளிக்க முடி வளரும்.

21. மருதாணியை அரைத்துச் சிறு வில்லைகளாகத் தட்டி வெயிலில் காய வைத்து அதைத் தேங்காய் எண்ணெயில் போட்டு வைக்கவும். அந்த எண்ணெயைத் தடவுவது முடி வளர உதவும்.

22. அதிகமாக முடிகொட்டுகிறது என்று கவலைப்படுபவர்கள் வாரத்தில் மூன்று நாட்கள், வேப்ப இலைகளைப் போட்டுக் கொதிக்க வைத்த தண்ணீரில் தலைக்குக் குளித்து வரக் குணம் தெரியும்.

23. கரிசலாங்கண்ணி (கீரைக்காரியிடம் கேட்டு வாங்கலாம்)யின் சாறும், நெல்லிக்காய் அரைத்துப் பிழிந்த சாறும் சம அளவு எடுத்து அதில் ஆறு டேபிள் ஸ்பூன் நல்லெண்ணெய் சேர்த்துக் காய்ச்சவும். இரும்புக் கடாயில் காய்ச்சுவது நல்லது. இளஞ்சூட்டில் காய்ச்சி நீர் வற்றியபின் அந்த எண்ணெயைத் தடவி வரக் கருகருவென்ற கூந்தல் வளரும்.

24. இளநரையைப் போக்க உட்கொள்வதற்கும் வைத்தியம் இருக்கிறது. தாமரைப் பூ இரண்டு 100 மில்லி தண்ணீரில் கொதிக்க வைத்து இலேசாக வற்றியதும் வடிகட்டி வைத்து இருவேளை சாப்பிடலாம். வாரத்துக்கு ஒருமுறை செய்து வந்தால் போதுமானது.

25. ஒரு வில்வப் பழத்தை எடுத்து உள்ளே உள்ள சதைப்பற்றை நல்லெண்ணெயில் போட்டு வதக்கி ஆறியபின் தலையில் தேய்த்துக் குளிக்கவும். முடி நன்றாக வளர இயற்கையான வைத்தியம் இவை!

- கமலாம்பாள்

## பஞ்சாமிர்தம்



● எள்ளுத் தாத்தா : ஸ்ரீனிவாச ஐயங்கார், கொள்ளுத் தாத்தா : சுந்தர்ராஜ ஐயங்கார், பாட்டி : மாலா ராமன், அப்பா : ரவிதேஜிக், எள்ளுப் பேத்திகள் : வைபவலட்சுமி, ஐஸ்வர்யா.






ஒரு பெண்ணைப் பார்த்துத்தான் அவர் வயதைச் சொல்ல வேண்டும் என்பது இல்லை. அவர் கைப்பை அதாவது ஹேண்ட்பேக்கை... அதிலுள்ள பொருள்களைப் பார்த்தே அவரது வயதைக் கணக்கிட்டு விடலாம்.

❖ சின்னக் கைப்பையில் (அது நகைக்கடை பர்ஸாகக் கூட இருக்கலாம்) ஒரு பென்சில், பேனா, சில லேபிள்கள், பேட்ஜ், சில சில்லறைக் காசுகள் - இது பள்ளி மாணவி.

❖ லேட்டஸ்ட் ஃபேஷன் ஹாண்ட் பேக்கில் ஒரு லிப்ஸ்டிக், சின்ன கண்ணாடி, ஸ்டிக்கர் பொட்டு அட்டை (குட்டிக் குட்டியாகக் கண்ணுக்குத் தெரியாத பொட்டுகள்) ஹேர்கிளிப், செல்ஃபோன், சில ரூபாய் நோட்டுகள் - கண்டு பிடித்து விட்டீர்களா? இது கல்லூரி மாணவி.

❖ நல்ல லெதர் ஹேண்ட்பேக்கில் சின்ன அட்ரஸ் புக். யாரோ வைத்துக் கொடுத்த மஞ்சள், குங்குமம், சீப்பு அடங்கிய பிளாஸ்டிக் பை. சில கிரெடிட் கார்டுகள், கணவர் அல்லது தனது விசிட்டிங் கார்ட்கள், கர்ச்சிப், சின்ன பௌடர் டப்பா, ஸ்டிக்கர் பொட்டு - இது திருமணமான இளம் பெண்ணின் ஹேண்ட் பேக்.

❖ பழசாகி விட்டாலும் தூக்கி எறிய மனம் வராத ஒரு ஹேண்ட்பேக்கில் அட்ரஸ் ஃபோன் நம்பர் உள்ள ஒரு புத்தகம். சில கடை பில்கள். கட்ட வேண்டிய, கட்டி முடித்த கணக்கு விவரங்கள், சீப்பு, சில பிடித்தமான சாமி படங்கள், சில மாத்திரைகள் - இது நடுத்தர வயதுப் பெண்மணியின் கைப்பை.

❖ சற்றே பழைய (ராசியான) லெதர் பையில் ஸ்தோத்திரப் புத்தகங்கள், சாமி படங்கள், கோவில் விபூதி குங்கும பிரசாதங்கள், தலைவலி ஜலதோஷ தைலங்கள், சில மாத்திரைகள், ஒரு சின்ன தண்ணீர் பாட்டில் - இது அறுபது வயது மூதாட்டியின் கைப்பை.

இதில் நீங்கள் எந்த வயதினரானாலும் சரி. கையில் ஹேண்ட் பேக் வைத்திருக்கிறீர்களா? இதோ உங்களுக்காகச் சில வார்த்தைகள்.

சிலரைப் பாருங்கள். எதைக் கண்டாலும் எடுத்து ஹேண்ட்பேக்கில் போட்டுக் கொள்வார்கள். ஏதாவது எடுக்கச் சொல்லிக் கேட்கும் போது, ஆட்டோக்காரனுக்கு சார்ஜ், கடைக்காரனுக்கு பில் பணம், தெரிந்தவர்களுக்கு விசிட்டிங் கார்டு இப்படி எதையாவது எடுக்கப் போனால், தலையைப் பைக்குள் விட்டுக் கொண்டு, எதிராளியை காக்க வைத்துக் கொண்டு, அவர் பொறுமையை சோதித்தபடி கையை வைத்து அலசுவார்கள். எடுக்க வேண்டியதைத் தவிர்த்து மற்ற எல்லாம் கைக்கு வர பொறுமையிழந்து, "என்ன

ஹேண்ட் பேக் இது... சே" என்று தன் பையையே ஒரு திட்டு திட்டுவார்கள். அந்த ஹேண்ட்பேக்கும் தினமும் திட்டு வாங்கிக் கொண்டு எல்லாப் பொருட்களையும் சுமந்தபடி ஒரு சுமைதாங்கியாக கூடவே அலையும்.

**உங்கள் ஹேண்ட்பேக்கில் நீங்கள் நினைத்த பொருளை ஒரு நொடியில் எடுக்க, இதோ உங்களுக்கு சில டிப்ஸ் -**

# கதை சொல்லும் கைப்பை!

❖ ஒரு விரிப்பில் அமர்ந்து இப் போதே உங்கள் ஹேண்ட்பேக்கை தலை கீழாகக் கொட்டி பழையன கழியுங்கள். பழைய கடை பில்கள், நகைக் கடை ரசீது, லாண்டிரி பில், பழைய ஹேர்பின்கள், தேவையற்ற விசிட்டிங் கார்டு இவற்றை அப்புறப்படுத்துங்கள்.

❖ பொடி சில்லறைகள் அவ்வளவையும் பைக்குள் வைக்காமல் சிறிதளவு சில்லறையை ஒரு குட்டிப் பையில் (நகைக்கடை சிறு வெல்வெட் பை) போட்டு ஹேண்ட் பேக்கில் வைக்கலாம்.

❖ ரூபாய் நோட்டுக்களை அப்படியே அங்கும் இங்கும் திணித்து வைக்காமல் முழுதாக விரித்தபடி உள் பையில் அடுக்காய் வைக்கலாம்.

❖ ஒரு பேனா, ஒரு ஸ்டிக்கர் அட்டை, சின்ன சைஸ் கண்ணாடி, ஒரு சீப்பு என்று அளவாக வைத்துக் கொள்ளுங்கள்.

❖ நிறைய சாமி படங்கள் வேண்டாம். எல்லா தெய்வங்களையும் மனதில் வைத்துக் கொண்டு ஒரே ஒரு இஷ்ட தெய்வத்தின் படம் மட்டும் கைப்பையில் வைத்தால் போதும்.



❖ நான்கு நாட்களுக்கு ஒரு முறை ஹேண்ட்பேக் சுத்தப் படுத்துவதை வழக்கப்படுத்திக் கொள்ளுங்கள்.

*என்ன... ஹேண்ட் பேக் வெயிட் குறைந்து 'சிக்' என்று இருக்கிறதா? இனி மேல் நீங்களும் எதையும் 'டக்'கென்று எடுத்து நீட்டுவீர்கள்தானே!*

**- கீதா தெய்வசிகாமணி**

# தெப்பக்குளத் தாயம்

தெப்பக்குளத் தாயம் விளையாட இரண்டிலிருந்து, நான்கு நபர்கள் வரை வேண்டும். பொதுவான தாயம் விளையாட்டில் உள்ள விதிகளே இவ் விளையாட்டிலும் கடைப்பிடிக்க வேண்டும். படத்தில் குறிப்பிட்டுள்ளபடி அம்புக் குறி போட்ட வழிகளில் காய்களை நகர்த்தி, பழமாக்க வேண்டும். பழம் செல்லும் போது, நுழைவதற்கு காய்கள் இருந்தாலும், இங்கு மட்டும் ஏற்றுக் கொள்ளப்படும்.

கிராமங்களில், ஏகாதசி, சிவராத்திரி சமயங்களில், இரவில் விழித்திருப்பவர்கள், தெப்பக் குளத்தைப் பெரியதாக வரைந்து, நிறைய காய்கள் வைத்து, விடியும் வரை விளையாடுவர். விடுமுறை நாட்களில், வயதானவர்கள், பேரன், பேத்திகளுடன் மதியப் பொழுதைக் கழிக்க தாயம் விளையாட, அன்னையர்கள் ஓய்வெடுக்கும் காட்சிகளும், நாங்கள் பள்ளியில் படிக்கும் காலத்தில் நிகழ்ந்த வசந்தங்கள்.

**- கோமதி நமசிவாயம்**



## பத்து கட்டான ஆட்டம்

சதுரங்க ஆட்டம், சொக்கட்டான், தாயக்கட்டை, புலி ஆட்டம் போல் பத்து கட்டம் ஆட்டம் உண்டு. "தாயம் உருட்டவா? ஏன் அங்கே ஒரு சகுனி வந்து நின்றான்" புலவர் கீரன் மஹாபாரதத்தில் இதை ரொம்ப நன்றாக வியாக்யானம் பண்ணுவார்.

இந்தப் பத்து கட்டம் ஆட்டமும் தாயக்கட்டை போல்தான். ஆனால் 8 குண்டுமணியோ சோழியோ எடுத்துக் கொள்ள வேண்டும். 4 பக்கம் உட்கார வேண்டும். தாயம் போட்ட பிறகே காயை நகர்த்தணும். ஆனால் பிறகு 12, 8, 4 போட்டால் ஜோடி ஜோடியாக கட்டத்திற்குப் போகலாம். ஜோடி ஜோடியாகப் போனால், ஜோடி ஜோடியாகத்தான் வெட்டணும்.

3 ஜோடி - 2 ஒத்தை காய்.

இந்த ஆட்டம் கூடுதல் நேரமாகும். எல்லாம் தாயக்கட்டம் போல்தான் விதிமுறை. 6 பெரிய சோழிகளை உருட்டி ஆடலாம். சோழி கவிழ்ந்து விழுந்தால் 12. நிமிர்ந்தால் 6.

**- பி. கமலா, சென்னை - 93.**

# ஓர் இல்லத்தரசியின் மௌனவிரதம்!

**கா**லைல எழுந்ததிலிருந்து, ராத்திரி படுக்கிற வரை ஒவ்வொருத்தர்கிட்டேயும் ஒவ்வொண்ணுக்கும் கத்திக் கத்தி தொண்டை புண்ணாய்ப் போயிடுது. பேசாம இருந்தா ஒரு வேலையும் நடக்க மாட்டேங்குது. ஒரு நாளாவது பேசாம இருக்க முடியுதா? திடீர்னு ஒரு ஐடியா தோணிற்று. ஒருநாள் முழுக்க மௌன விரதம் இருந்தா என்ன? நாக்குக்கும், தொண்டைக்கும் நல்ல ரெஸ்ட். வீட்ல உள்ளவங்க 'அந்த' ஒருநாளை எப்படிச் சமாளிக்கிறாங்கன்னு பார்க்கலாமே!

என் தீர்மானத்தைக் கணவர், குழந்தைகளிடம் சொன்னேன். எல்லோரும் சிரிச்சாங்க. 'உன்னால பேசாம இருக்கவே முடியாது'ன்னு சேர்ந்தாப்பல கேலி செஞ்சாங்க. நடத்திக் காட்டறேன்னு ஒரு நாளை நிர்ணயம் செய்தேன். அன்று காலை 6 மணி யிலிருந்து மாலை 6 மணி வரை மௌன விரதம் அனுஷ்டிப்பதென்று முடிவாயிற்று. அந்த நாளும் வந்தது. வழக்கம் போல் காலை 5 மணிக்கு எழுந்து, வாசல் தெளித்து, கோலம் போட்டு, குளித்து, பூஜை செய்து, குக்கர் வைத்து விட்டேன். கூடத்து கடிகாரம் 6 தடவை ஒலித்து என் மௌன விரதத்தை நினைவுபடுத்தியது.

"காப்பி ஆயிடுச்சா?" "பேப்பர் வந்துடுச்சா?" "டிபன் ரெடியா?" "இன்னைக்கு என்ன சமையல்?" "என் பேனா எங்கேம்மா?" "என் பேக்கை எங்கே வச்சுத் தொலைச்சே?" பலப்பல கேள்விகள். 'உம்'கூடக் கொட்டாமல் சைகையிலேயே எல்லாவற்றுக்கும் பதில் சொல்லிக் கொண்டிருந்தேன். பால்காரரிடம் 'பால் தண்ணியா இருக்கு' என்று சொல்ல முடியவில்லை. காய்கறிக்காரி வந்து விட்டாள். பேசாமல், பார்த்துப் பார்த்து






மங்கையர் சக்தி மகத்தான சக்தி

மங்கையர் மலர் வெள்ளிவிழா

காய் வாங்க வேண்டியதாயிற்று. சைகையினால் பேரம் பேசத்தான் முடியவில்லை. பள்ளி விழாக்களில் ஆடிய நடன அசைவுகளை நினைவுக்குக் கொண்டு வந்து அபிநயம் பிடித்து, அவர்களுக்குப் புரிய வைப்பதற்குள் நான் பட்ட பாடு!

கணவர், ஆபீசுக்குப் புறப்படும் போது எதையும் மறந்து விடாமல் இருக்க வேண்டுமே, மாலையில் வரும் போது என்னென்ன கொண்டு வர வேண்டும், குழந்தைகள், புத்தகங்கள், பேனா, பென்சில் எல்லாம் சரியாக எடுத்து வைத்துக் கொண்டார்களா, ஹோம்-ஒர்க் முடித்து விட்டார்களா? - இவை எல்லாவற்றையும் சைகை மொழியிலேயே புரியவைப்பதற்குள் என் பிராணன் போச்சு!

"என்னம்மா சொல்றே? ஒண்ணும் புரியலை." உனக்கு நடிக்கவே தெரியலை" என்ற மகனின் விமரிசனத்துக்கு "நல்லாச் சொல்லு. மௌன விரதம்னு நம்ம உயிரை எடுக்கறா" என்று அவரும் ஒத்து ஊதினார். 'ஊம். உங்களுக்குப் புரிஞ்சுக்கற திறமை கிடையாதுங்கறதுக்காக எனக்கு நடிக்கத் தெரியலைன்னு சொல்லிடறதா?' மனசுக்குள் கறுவினேன்.

தினமும் வீட்டில் என் குரல் உரத்து ஒலிக்கும். இன்று, மற்றவர்கள் சப்தம் போட்டுக் கொண்டிருந்தார்கள். சந்தோஷமாக இருந்தது. ஒருவழியாய் ஆபீஸ், ஸ்கூல் என்று எல்லோரும் கிளம்பி விட்டார்கள். இனி பேச வேண்டிய அவசியம் வராது என்ற நினைப்புக்கு சற்று நேரத்திலேயே சோதனை வந்தது. 11 மணி. காலிங் பெல் அழைத்தது. ஐயையோ! என்ன செய்யறது? கதவு திறந்தால் எதிர் வீட்டுப் பெண். மௌனவிரதம் என்று நான் செய்த சைகை அவளுக்குப் புரியவில்லை போலிருக்கிறது. வெடுக்கென்று போய் விட்டாள். கோபம் போலும். என்னைப் பற்றி என்ன நினைத்தாளோ!

ஒரு புத்தகத்தை எடுத்துக் கொண்டு அமர்ந்த போது தொலைபேசி அலறியது. பழக்கதோஷத்தில் எழுந்தவள், மௌன விரதம் நினைவுக்கு வர, மீண்டும் அமர்ந்தேன். யாராவது வெட்டியாய்ப் பேசி அறுப்பார்கள். அல்லது 'ராங்'காலாக இருக்கும் என்று சமாதானம் செய்து கொண்டாலும் உள்மனம் ஏதாவது முக்கியச் செய்தியாய் இருக்குமோ என்று சஞ்சலப்பட்டது. மேலும், மேலும் சோதனைகள், தபால்காரர், வேலைக்காரி, விற்பனைப் பிரதிநிதிகள், மாலைப் பால்காரர் என்று வரிசையாய் வந்தனர்.

மாலை 6 மணி வரை சைகையினால் எப்படியோ சமாளித்து விட்டேன். வாய் பேசவில்லையே தவிர, அது பேச நினைத்ததை எல்லாம் மனம் உரத்துப் பேசிக் கொண்டிருந்தது. மௌனவிரதத்திற்குச் சோதனைகள் வந்தாலும் சமாளித்தது இனிய புதிய அனுபவமாகவே இருந்தது. இனி மனக் குரலையும் அடக்கப் பழக வேண்டும். என்ன, நான் கத்தினால் எனக்கு டென்ஷன். நான் பேசாவிட்டால் மற்றவர்களுக்கு டென்ஷன்!

**- எஸ். ராஜம்**



தலைக்கு சீயக்காய்த் தூள் தேய்த்துக் கொள்ளும் போது, சீயக்காய்த் தூளுடன் தண்ணீருக்குப் பதில் மோர் விட்டுக் கரைத்து தேய்த்துக் குளித்தால், தலை முடியில் உள்ள அழுக்கு சுத்தமாக நீங்கி விடும். சீயக்காயும் குறைந்த அளவு போதுமானது.

**- ஏ. ஹம்ஸத்**



# ஸ்ரீ ஆதிசங்கரர் அருளிய கனகதாரா ஸ்தோத்ரம்

9. இஷ்டா-விசிஷ்ட-மதயோ-(அ)பியயா தயார்த்ர
த்ருஷ்ட்யா த்ரிவிஷ்டப-பதம் ஸுலபம் லபந்தே ।
த்ருஷ்டி: ப்ரஹ்ருஷ்ட-கலோத ர-தீப்தி-ரிஷ்டாம்
புஷ்டிம் க்ருஷீஷ்ட-மம புஷ்கர-விஷ்டராயா: ॥

10. கீர்தேவதேதி கருடத்நஜ-ஸுந்தரீதி
சகம்பரீதி சசிசேகர-வல்லபேதி ।
ஸ்ருஷ்டி-ஸ்திதி-ப்ரலய-கேலிஷு ஸம்ஸ்திதாயை
தஸ்யை நமஸ்-த்ரிபு-வநைக-குரோஸ்-தருண்யை ॥

11. ச்ருத்யை நமோ-(அ)ஸ்து சுப-கர்ம-பல-ப்ரஸூத்யை
ரத்யை நமோ-(அ)ஸ்து ரமணீய-குணார்ணவாயை ।
சக்த்யை நமோ-(அ)ஸ்து சத-பத்ர-நிகேதநாயை
புஷ்ட்யை நமோ-(அ)ஸ்து புருஷோத்தம வல்லபாயை: ॥

12. நமோ(அ)ஸ்து நாலீக-நிபாநநாயை
நமோ-(அ)ஸ்து துக்தோததி-ஜந்ம-பூம்யை ।
நமோ(அ)ஸ்து ஸோமாம்ருத-ஸோதராயை
நமோ(அ)ஸ்து நாராயண-வல்லபாயை ॥

# பொன் மழை பொழியத் துதி

9. வேள்வி செய்து வரமதுவும் வேண்டுவது தானறியார்
ஆள்வதும் உன் கருணையாக அமராவதி நகர் வாழ்வளிக்கும்
கமலம் நிகர் கண்களால் அடியேன் என் குறைகள் தன்னைக்
கருணை கூர்ந்து நீக்குவையே செங்கமலத் தாயே!

10. படைக்கும் பேருருளே பாரதியே! பாவமகற்றி
அடைக்கலம் உயிர்களுக்கு அன்னையே அலைமகளே
ஒடுக்குவதும் தீமைதனை உமையே உன்னருளே
உலகாளும் நாராயணன் மனமுவந்த செந்திருமகளே!

11. வேதவடிவானவளே போற்றி நல்வினைப்பயனை அருள்பவளே போற்றி
தீதொழித்து நலம் தரும் நற்குணத்திருவருட் செல்வி போற்றி
ஆதவன் வரவால் மலரும் அழகுமலர் உறையும் அன்னையே போற்றி
நாதன் திருமாலவன் துணையே உலகாளும் நாயகியே போற்றி போற்றி

12. தாமரை முகமலராள் தேவியின் தாள் பணிந்தோம் போற்றி
பாற்கடலில் உதித்த திருப்பாவையேபதம் பணிந்தோம் போற்றி
தேமதுரம் அமிழ்தம் மதியொடு உதித்த செல்வத்திருமகளே போற்றி
நாற்றிசையும் வணங்கும் எங்கள் நாராயணன் துணைவியே போற்றி

தமிழாக்கம் : **செ.ப. ராமமூர்த்தி**
(பொன்மழை தொடரும்)









• ப்ரக்ருதி. • நீரஜா

# என் செல்லமே



• அபினேஷ்









• அனிருத்



• கே.சி. ரோஷன் விஜய்



• எஸ். சங்கீத்

• வருண்



• நிதிஷ்










இன்றைய நவீன காலத்தில் ப்யூட்டி பார்லரின் படி ஏறாத பெண்களே கிடையாது எனலாம். திருமண சமயத்தின் போதாவது கூடுதல் ஜொலிப்புக்காக ப்யூட்டி பார்லரை பெண்கள் நாடுவார்கள். "தெருவுக்குத் தெரு அழகு நிலையங்கள் தோன்றினாலும் இன்னமும் அதன் தேவை குறையவில்லை" என்கிறார் ஷிபானி. 'அனுஷ்கா' அழகு நிலையத்தின் நிறுவனரான இவர், மங்கையர் மலர் வாசகிகளுக்கு ப்யூட்டி பார்லர் தொடங்கத் தேவையான வழிமுறைகளை விளக்குகிறார் :

# ப்யூட்டி பார்லர்



* ஷிபானி

"தங்களை அழகுபடுத்துவதும் அடுத்தவர்களை அழகு படுத்துதலும் ஒரு பெண்ணுக்கு கைவந்த கலை.

முதலில் குறைந்தபட்சம் பத்தாவது படித்தவராக நீங்கள் இருக்க வேண்டும். ஏனெனில் அடிப்படை அறிவியல் தெரிந்திருந்தால்தான் பொருளிலுள்ள கெமிகல் ரியாக்ஷனை உங்களால் உணர்ந்து கொள்ள முடியும். ஒவ்வொரு பொருளையும் நீங்கள் பயன்படுத்துவதற்கு முன் அதற்கென உள்ள செயற்முறைகளை அறிந்து கொள்ளவாவது அடிப்படைக் கல்வி அவசியம் அல்லவா?

எதையும் முறையாகக் கற்றால் எந்தக் காலத்திலும் தடுமாற்றம் இருக்காது. அதனால் மூன்று மாதம் ப்யூட்டிஷியன் கோர்ஸ் டிப்ளமோ படிப்பது மிக மிக அவசியம். உங்களைத் தேடி வரும் கஸ்டமர்களின் குறைகளைக் கண்டறிவதற்கும் அழகு சாதனங்களின் மூலக்கூறுகளைத் தெரிந்து கொள்வதற்கும் இப்படிப்பு அவசியமானதாகிறது.

அடுத்த கட்டமாக தரமான ப்யூட்டி பார்லர்களில் அப்ரென்டிசாக மூன்று மாதப் பயிற்சி எடுத்துக் கொள்ளுங்கள்.

இதன் பின்பு சென்னை, கிண்டியிலுள்ள ஸ்மால் ஸ்கேல் இண்டஸ்ட்ரி (எஸ்.எஸ்.ஐ)யில் டிப்ளமோ படிப்பை ரிஜிஸ்தர் செய்து கொள்ள வேண்டும். இதன் மூலம் மூன்று லட்சங்கள் வரை வங்கிகளில் கடன் பெறலாம். (ஒரு லட்சம் இருந்தாலே போதும், தரமான சிறிய ப்யூட்டி பார்லர் திறந்து விடலாம்.)

சொந்த முதலீட்டிலோ அல்லது வங்கியில் வாங்கிய கடன் மூலமாகவோ வியாபாரத்துக்குத் தோதான இடத்தில் ப்யூட்டி பார்லரைத் தொடங்கி விடலாம். இதற்கென்று தனியாக அரசாங்கம், சட்டம் ஏதும் இயற்றவில்லை. வழக்கமாக ஒரு கமர்ஷியல் ஷாப் தொடங்கும் விதிமுறைகள்

# தொடங்குகிறீர்களா?

தான் ப்யூட்டி பார்லருக்கும். இதன் பின்பு மாதா மாதம் சர்வீஸ் டாக்ஸை அரசாங்கத்துக்குச் செலுத்த வேண்டும். பின்பு 'சேர் டாக்ஸ்' என்று உங்கள் பார்லரில் எத்தனை இருக்கைகள் உள்ளதோ ஒவ்வொன்றுக்கும் வருடத்துக்கு ரூ. 15 வசூலிக்கப்படும். பெண்கள் ப்யூட்டி பார்லர் தொழிலில் ஈடுபடும் பொழுது அவர்களுக்கென்று வருமான வரியில் ஐயாயிரம் ரூபாய்க்கு சலுகையும் வழங்கப்படுகிறது!

முக்கியமான விஷயம், ப்யூட்டி பார்லரை வீட்டில் வைத்து நடத்தவே கூடாது. தேவையில்லாத கவனச் சிதறல்கள் ஏற்படும். எந்தளவுக்கு நகரத்துக்கு அழகு நிலையங்களின் தேவையுள்ளதோ அதே அளவு கிராமப்புறங்களிலும் தேவைப்படுகிறது. ப்யூட்டிஷியனுக்கென்று ஆங்காங்கே நடத்தப்படும் செமினார்களில் நிச்சயம் கலந்து கொள்ள வேண்டும்.

கஸ்டமர்களை தொடர்ந்து வர வைப்பதற்கும் நீங்கள் சகல திறமைகளோடும், உங்களது அழகு நிலையம் நூறு சதவிகிதம் சுகாதாரமாகவும் இருத்தல் அவசியம்

இன்றைக்கு நிலவும் டிமாண்டில் ஒரு லட்சம் மதிப்பில் ஆரம்பிக்கப்படும் ப்யூட்டி பார்லரில் தினமும் குறைந்த பட்சம் ரூ. 300 வருமானம் பார்க்க முடியும். மிகக் குறுகிய காலத்தில் மாதம் ரூ. 30,000 சம்பாதிக்க முடியும். தொழில் பக்தியோடும் தரமான ப்யூட்டி பார்லர் நடத்தும் சமயத்தில் உங்கள் கனவெல்லாம் சாத்தியமாகி அழகான வாழ்க்கை அமையக்கூடும்.

**- சநகன்**

படங்கள் : **ஸ்ரீஹரி.**

## அன்னைக்கு இம்போஸிஷன்!



எனது பேரன் சித்தார்த் யு.கே.ஜி. படித்து வருகிறான். மகள் கல்லூரிப் பேராசிரியை. வீட்டில் அவனுக்குப் பாடம் சொல்லிக் கொடுப்பதும், தவறுகளைத் திருத்துவதற்கு பலமுறை இம்போஸிஷன் கொடுப்பதும் வழக்கம். ஒருநாள் ஆங்கில ஸ்பெல்லிங் டெஸ்ட் நடத்தி, அதைத் திருத்தும் போது தவறான ஸ்பெல்லிங்கிற்கு அவசரத்தில் டிக் செய்து விட்டாள். வந்தது வினை. அதே தவற்றைப் பள்ளியிலும் செய்து ஒரு மதிப்பெண்ணை இழந்தான். மற்ற சப்ஜெக்டில் நூற்றுக்கு நூறு வாங்கியவனுக்கு இதைத் தாங்கிக் கொள்ள முடியவில்லை. கோபத்துடன் வீடு திரும்பியவன் அன்னையின் வருகைக்காகக் காத்திருந்தான். வந்ததும் நீதி கேட்ட கண்ணகி போல் ஒரு கையில் டிக்ஷனரியுடனும் மற்றொரு கையில் தவறாகத் திருத்திய நோட்டுடனும், "அம்மா உனக்குத் தெரியவில்லை என்றால் டிக்ஷனரியில் பார்க்கக் கூடாதா? உன்னால் எனக்கு வகுப்பில் ரேங்க் போயிற்று" என்றானே பார்க்கணும். ஆங்கிலப் பேராசிரியைக்கு வாயைத் திறக்க முடியவில்லை. அவளது கல்லூரி முதல்வர் கூட்டிக்காட்டியிருந்தால் கூட இந்த அளவு பாதிப்பு அவளிடம் ஏற்பட்டிருக்காது. அவன் அத்துடன் விடாமல், "நீ 100 முறை தவறான வார்த்தையைத் திருத்தி எழுத வேண்டும்" என்றான். அங்கிருந்த எல்லோரும் ஸ்தம்பித்து நின்றோம்!

**- விமலா உதயமூர்த்தி**

# கர்ணன் — இறுதி பாகம்

குருக்ஷேத்திரத்திற்குள், கர்ணன் நுழைந்ததும், அவனுக்குரிய பராபரச் சங்கு கம்பீரமாக முழங்கியது.

எதிர் அணியில் நின்ற தர்மனும் நகுல சகாதேவர்களும், கர்ணனின் பக்கம் பார்வையைத் திருப்பினார்கள்.

கர்ணனின் தேரை ஓட்டி வந்த சாரதி சல்லியமன்னர், "கர்ணா! இந்த யுத்தத்தைச் சீக்கிரம் முடிக்க வேண்டிய பொறுப்பு உன்னிடம்தான் உள்ளது. முதலில் தர்மபுத்திர



ரையும் நகுலசகாதேவர்களையும் தாக்கிக் கொன்று விட்டால், அதைக் கண்டு மனோரீதியாக அர்ஜுனன் நிலைகுலைந்து போய்விடுவான். அப்புறம் எளிதாக அவனையும் பீமனையும் வீழ்த்தி விடலாம்...'' என்று யோசனை சொன்னார்.

வீரத்தால் இவர்கள் எனக்குச் சமமானவர்கள் அல்ல; பலவீனமானவர்கள்... பலத்தில் சமமானவர்களோடும்,



சில நாட்களுக்கு முன்பு, அவன் குந்தியிடம் அளித்த வரங்கள் நினைவுக்குள் எழுந்தன. அர்ஜுனனைத் தவிர, மற்ற நான்கு சகோதரர்களையும் போரிட்டுக் கொல்ல மாட்டேன் என்று வாக்களித்திருக்கிறானே...?

''வேண்டாம், சல்லியரே! ... பாவம்! மேம்பட்டவர்களோடும் போரிடுவதுதான் க்ஷத்திரிய தர்மம்!'' என்று மறுத்த கர்ணன், பாஞ்சஜன்யத்தின் ஒலி கேட்டுத் திரும்பினான்.

வலது பக்கம், கர்ணன் ஓட்டும் தேரில் நின்று அர்ஜுனன், போர் நடத்திக் கொண்டிருந்தான்.

''சல்லியரே...! அதோ, அங்கே அர்ஜுனனின் முன்னால், நம் தேரைக்

**சிறப்புச் சிறுகதை** **அய்க்கண்**

கொண்டு போய் நிறுத்துங்கள்.. அவனைத் தாக்கி வீழ்த்துகிறேன்..." என்று அர்ச்சுனனோடு போரிடத் தொடங்கினான் கர்ணன்.

அம்பறாத் தூணியிலிருந்த வலுவான அஸ்திரங்கள் எல்லாம், அர்ஜுனன் முன்பு பயனின்றிப் போனதும், பிரம்மாஸ்திரத்தைத் தொடுக்க நினைத்தான் கர்ணன். ஆனால், குரு பரசுராமர் ஏற்கெனவே கொடுத்திருந்த சாபத்தின்படி, அந்த அஸ்திரத்தைச் செலுத்தும் மந்திரம் அவனுக்கு மறந்துபோய் விட்டது. அப்போது நாகாஸ்திரம் அவன் முன்னால் வந்து நின்றது.

"சல்லியரே! கடைசியாக, அர்ஜுனனுக்கு எமனான நாகாஸ்திரத்தைச் செலுத்தப் போகிறேன். இதனால் அவனுடைய கழுத்தைத் துணித்து, தலை வேறு உடல் வேறாக வீழ்த்தப் போகிறேன்..." என்று முழங்கியபடி, நாகாஸ்திரத்தை தொடுத்துக் குறிவைத்தான் கர்ணன்.

"கர்ணா...! அதோ பார்த்தசாரதி, தேரிலிருந்து உன்னையும் அஸ்திரத்தையும் கூர்ந்து பார்த்துக் கொண்டிருக்கிறார்!... அந்த வஞ்சகக் கண்ணன் ஏதாவது தந்திரம் செய்து அர்ஜுனனைக் காப்பாற்றி விடுவார்... அதனால் அர்ஜுனனுடைய குறுகிய கழுத்துக்குக் குறிவைப்பதை விட அகன்ற மார்புப் பகுதிக்கே குறிவைத்து நாகாஸ்திரத்தைச் செலுத்து!" என்று ஆலோசனை சொன்னார் சல்லிய மன்னர்.

இதைக் கேட்டதும் கர்ணனுக்கு ஆத்திரம் மேலும் வலுத்தது.

எதற்கெடுத்தாலும் ஆதிக்கம் செலுத்த எண்ணும் க்ஷத்திரிய மேலாண்மை, அவன் உள்ளத்திற்குள் சுரீர் எனறு பாய்ந்து குத்தியது :

"சாரதியே! உங்கள் தேரோட்டும் வேலையை மட்டும் செய்யுங்கள்...! எப்படிக் குறிவைப்பது என்பது, எனக்குத் தெரியும்..." என்று கோபமாகச் சொல்லி விட்டு, நாகக் கணையை எய்தான் கர்ணன்.

விர்ரென்று சீறும் ஒலியோடு பாய்ந்து சென்றது நாகக் கணை.

அந்தக் கணை அர்ச்சுனனை நெருங்கியதும், கிருஷ்ணன் நறுக் என்று தன் காற்பெருவிரலை அழுத்தி, தேரை ஒரு சாண், நிலத்திற்குள் இறங்கும்படி செய்து விட்டார்.

கழுத்துக்கு நேரே வந்து கொண்டிருந்த அஸ்திரம், அர்ச்சுனனின் தலை மகுடத்தை வீழ்த்தி விட்டுச் சென்றது.

கண்களில் ஆத்திரம் கொப்பளிக்க, சல்லியன் கர்ணனைத் திரும்பிப் பார்த்தார். கோபத்தில் உதடுகள் துடிக்க, வார்த்

### கொத்துமல்லி வடகம்!



கொத்துமல்லி அதிகம் கிடைக்கும் நாளில் இந்தத் தழையை நன்கு சுத்தம் செய்து உப்பு, பச்சை மிளகாய் ஆகியவற்றைச் சேர்த்து அரைத்து சிறு சிறு வடைகளாகத் தட்டி வெயிலில் காய வைத்து வடகமாகச் செய்து கொண்டால், தேவைப்படும் போது குழம்பு, ரசத்தில் போட்டால் மிகவும் வாசனையாகவும், சுவையாகவும் இருக்கும். அவசரத்திற்கு தயிர்ப் பச்சடி செய்யவும் பயன்படும். பூந்தி, ஏலப்பொடி போன்ற மொறுமொறு தின்பண்டங்களுடன் கூடக் கலந்து சாப்பிடலாம்.

- வத்சலா சதாசிவன்.

தைகள் வெளிவரவில்லை.

திகைத்துப் போன கர்ணன், சில நொடிப் பொழுதில் இயல்பு நிலைக்குத் திரும்பி விட்டான்.

"சல்லியரே! உங்கள் கோபம் எனக்குப் புரிகிறது... ஆனால், நீங்கள் சொன்னபடி, அர்ஜுனனின் மார்புக்குக் குறிவைத் திருந்தால், வஞ்சகக் கண்ணன் என்ன செய்திருப்பார்? அர்ஜுனனைச் சாகவிட்டிருப்பாரா...? இன்னும் கொஞ்சம் வலுவாக அழுத்தி, தேரை இன்னும் ஒரு சாண் அளவு, நிலத்திற்குள் இறக்கியிருப்பார் - அவ்வளவுதான்!" என்று நிதானமாகச் சொன்னான் கர்ணன்.

அர்ச்சுனனைப் பழிவாங்க முடியாமல் திரும்பி வந்த நாகாஸ்திரம், மறுபடியும் தன்னை எய்யும்படி கர்ணனைக் கெஞ்சியது.

"கர்ணா! இந்தத் தடவை, அர்ஜுனனின் நடு உடலுக்குக் குறிவைத்து நாகாஸ்திரத்தைச் செலுத்து...." என்றார் சாரதி சல்லியன். ஆனால் கர்ணன் மறுத்து விட்டான்.

அவன்தான், இரண்டாம் முறை அர்ச்சுனன் மேல் நாகாஸ்திரத்தைச் செலுத்த மாட்டேன் என்று தாயிடம் வாக்கு அளித்திருக்கிறானே...?

அந்த விஷயத்தை சல்லியனிடம் சொல்ல முடியுமா...?

"இல்லை, அரசே! க்ஷத்திரிய வீரன், ஓர் அஸ்திரத்தை ஒரு தடவைதான் எய்வான் : இரண்டாவது முறை எய்வது, வீரத்திற்கே இழுக்கு..." என்று சமத்காரமாகத் தெரிவித்தான்.

இதைக் கேட்டதும் சல்லியனின் மனம் எரிச்சலால் சூடாகியது :

"கர்ணா! இனிமேல் உனக்குச் சாரதியாயிருப்பதில் பயன் ஏதும் இல்லை..." என்று சொல்லி விட்டுக் கீழே இறங்கினான் சல்லிய மன்னன்.

இந்தச் சூழ்நிலையில், கர்ணனுக்கு ஒரு முனிவர் கொடுத்திருந்த சாபம் வந்து குறுக்கிட்டது.

அவனுடைய தேர், சேற்றில் சிக்கி இடது சக்கரம் பதிந்து விட்டது. தேரைச் சரிப்படுத்துவதற்காக, கர்ணன் கீழே குதித்து தேரின் இடதுபக்கத்தைத் தோள் கொடுத்துத் தூக்கிக் கொண்டிருந்தான்.

அப்போது, பார்த்தசாரதி, அர்ச்சுனனிடம், "விஜயா! கர்ணனுடன் தர்மயுத்தம் செய்து யாராலும் வெல்ல முடியாது... இப்போது நிராயுதபாணியாக இருக்கும் அவன் மேல் அம்புகளைச் செலுத்து...." என்று ஆணையிட்டான். வேறுவழியின்றி, அர்ச்சுனனும் யுத்த தர்மம் மறந்து, கர்ணன் மேல் அம்புகளைப் பொழிந்தான்.

விஜயனின் கணைகள் கர்ணனின் உடலெங்கும் பாய்ந்து, சல்லடைக் கண்களாய்த் துளைத்து, இரத்த வெள்ளம் வெளிப்பட்டாலும், தேர்ச் சக்கரத்தில் சாய்ந்தபடியே வீழ்ந்த கர்ணனின் உயிர் பிரியவில்லை.

திகைத்துப் போன கண்ணன், "அர்ஜுனா! போரை நிறுத்து..." என்று சொல்லிவிட்டுத் தேரிலிருந்து இறங்கினான்.

எப்போதுமே காய்கறிகளை நறுக்குவதற்கு மர போர்டுகளையே பயன்படுத்துங்கள். கத்தி கூர்மையும் மங்காது. பிளாஸ்டிக் போர்டுகளைப் பயன்படுத்தினால் சிறு சிறு பிளாஸ்டிக் துண்டுகளும் உணவோடு சேர்ந்து வயிற்றுக்குள் போய் விடும்.

- சுலைஹா அஹமது.



என்னிடம் இரண்டு வேஸ்ட் காஸ்கெட்டு கள் இருந்தன. அதை ஓரிடத்தில் கத்தரித்து ஒயர் பையின் கைப் பிடியின் உள்ளே வைத்து கைப்பிடி போட்டேன். இப்போது பை அழகா னது மட்டுமல்ல. ஸ்ட்ராங் காகவும் ஆகி விட்டது.

- க. கண்ணகி



கர்ணனின் மேல் பாய்ந்து உடலைக் கிழித்திருக்கும் வலுவான அம்புகள், அவனது உயிரை நெருங்காதபடி, தர்மம் கவசமாகப் பாதுகாத்துக் கொண்டிருக் கிறது என்பதைப் புரிந்து கொண்டான் ஜனார்த்தனன்.

கர்ணனையும் தர்மபுண்ணியத்தையும் பிரித்தால்தான் அவனது உடலையும் உயிரையும் பிரிக்க முடியும் என்பது கண் ணனுக்குப் புரிந்தது.

குருதி வெள்ளத்தில் குற்றுயிராகக் கிடக்கும் கர்ணனிடம், ஏழை வேதியனாக உருவெடுத்து வந்தான் நாராயணன்.

"கர்ணா! நீ கேட்டவர்க்கெல்லாம் கேட்டவை கொடுக்கும் வள்ளல் என்று கேள்விப்பட்டு, மேருமலையிலிருந்து வந்திருக்கிறேன்..." என்று வேதியன் சொன்னதும், அதைக் கேட்டு உள்ளம் மகிழ்ந்தவனாய், மெல்லச் சிரித்தபடி "இங்கே நான் தரக்கூடிய பொருளாகச் சொல்லுக" என்றான் வள்ளல்.

"உன் புண்ணியம் அனைத்தையும் எனக்குத் தருக..." என்று கையேந்திக் கேட் டான் அந்தணன்.

"வேதியரே! என் உயிர் உடலுக் குள்ளோ, வெளியேயோ என்று சொல்ல முடியாதபடி கலங்கியிருக்கும் நிலையில் நீங்கள் வந்திருக்கிறீர்கள். என்னுடைய புண்ணியம் அனைத்தையும் உங்களுக்கு ஈந்தேன்..." என்ற கர்ணன், தன் உடம்பில் அம்புகள் பாய்ந்ததனால் வெளிவரும் இரத்தத்தைக் கையில் ஏந்தித் தாரை வார்த்துக் கொடுத்தான்.

கர்ணனின் கொடையில் நெக்குருகிப் போன அந்தணன், "கர்ணா! உனக்கு என்ன வரம் வேண்டும், கேள்!" என்றான்.

"வினைப் பயனால் எனக்குப் பிறப்பு ஏற்பட்டால், ஏழேழு பிறவியிலும் இல்லையென்று கேட்டு வருவோருக்கு, இல்லை என்று சொல்லாத இதயம் எனக்கு அருள்வாய்..." என்று வரங்கேட் டான் வள்ளல்.

இதைக் கேட்டதும், கண்ணன் அவனை இரு கைகளாலும் இறுகத் தழுவி, கண்களிலிருந்து நீர் அருவியாக வழிய, "நீ எத்தனை பிறவி எடுத்தாலும், அத்தனை பிறவியிலும் கொடைக் குணமும் செல்வமும் பெற்று, முடிவில் முக்தியும் பெறுவாயாக..." என்று வழங்கிய கண்ணன், கர்ணன் சிறிதும் எதிர்பாராத வகையில், அவன் கேட்காமலே, அவ னுக்கு விஸ்வரூப தரிசனம் அளித்தருளி னான்...

உலகில் எவருக்கும் கிடைத்தற்கரிய திருமாலின் திவ்விய விஸ்வரூப அழகைக் கண்ணாரக் கண்டு பிறவிப் பயன்பெற்ற கர்ணன், மெய்யெல்லாம் பக்தி விகசித்துப் பொங்க, "கண்ணா! கடையேனாகிய எனக்கும் உன் விஸ்வரூப தரிசனம் வழங் கினாயே, நான் என்ன பாக்கியம் செய் தேன்?" என்று மனம் கசிந்து விம்மினான்.

"கர்ணா! இந்தப் போர்க்களத்திலே நான் அர்ஜுனனுக்கு உபதேசித்த பகவத் கீதையின் தத்துவங்களை வாழ்ந்து காட்டிய உன்னத மாமனிதன் நீதான்! அதற்குப் பரிசாகத்தான் நான் விஸ்வரூப தரிசனத்தை வழங்கினேன்..." என்று தழுதழுத்த குரலில் பரிவு பொங்கச் சொன்னார் அச்சுதன்...

இறைவனின் எதிர்பாராத கருணை மழையில் நனைந்தவனாய், குருதிச்சேற் றில் புதைந்து கிடந்தான் கர்ணன்.

"கர்ணா! இந்தக் குருக்ஷேத்திரத் திலேயே, மிகவும் வஞ்சிக்கப்பட்ட

துர்ப்பாக்கியசாலி, நீதான்... மனிதர்களாலும் தெய்வங்களாலும் வஞ்சிக்கப்பட்ட ஜீவாத்மா நீ... ஆகையால்தான் நானே உன்னைத் தேடி நேரில் வந்தேன். இல்லையேல், முன்பு இந்திரனை அனுப்பிக் கவசகுண்டலங்களை வாங்கியது போல, இன்னொரு கடவுளை அனுப்பி உன் புண்ணியத்தை வாங்கியிருப்பேன்...'' என்று பரமாத்மா சொன்னதும், கர்ணன் மெய்சிலிர்த்து, கண்ணனின் முகத்தையே தரிசித்துக் கொண்டிருந்தான்.

சின் முழுப் பரிமாணம் - முழு அர்த்தம், லோகநாயகனுக்கே தெரியாது!

''தெய்வமாக விளங்க வேண்டிய குருமார்களும் உன்னை வஞ்சித்து விட்டார்கள். அர்ஜுனனுக்குச் சமமான திறமை பெற்றிருந்த உன்னிடம் பொறாமை கொண்டு, துரோணர் உனக்கு வில்வித்தை கற்றுக் கொடுக்க மறுத்து விட்டார். குரு பரசுராமரும், நீ பிராமணன் இல்லை என்பதை அறிந்ததும், நீ கற்றுக் கொண்ட பிரம்மாஸ்திரம் மறந்து

## கேரட் அடை



கேரட் - ¼ கிலோ, கடலை மாவு அல்லது பொட்டுக் கடலை மாவு 100 கிராம், உப்பு தேவையான அளவு, பெரிய வெங்காயம் - 1, பச்சை மிளகாய் - 2, இஞ்சி ஒரு துண்டு.

**செய்முறை :**

கேரட்டை நறுக்கி, உப்பு, மஞ்சள் தூள் பிசிறி, குக்கரில் 6 நிமிடங்கள் வேக விடவும். பிறகு இலேசாகப் பிசைந்து, கடலை மாவு அல்லது பொட்டுக் கடலை மாவு, பொடியாக நறுக்கிய வெங்காயம், பச்சை மிளகாய் சேர்த்துப் பிசைந்து தோசைக்கல்லில் எண்ணெய் தடவி சிறு சிறு அடைகளாகத் தட்டவும். இந்த அடை ருசியோடு இருப்பதோடு சத்து நிறைந்ததும் கூட.

- ஆர். ராஜலட்சுமி.

''கர்ணா! ஒரு மனிதனுக்கு முதல் தெய்வம் தாய் : அந்தத் தாயே உன்னை அவமானச் சின்னமாகப் பெற்று ஆற்றில் பெட்டியில் வைத்து விட்டு விட்டாள்...'' என்று தொடங்கினான் கிருஷ்ணன்.

''ஆம்... அப்படி பெட்டியில் விடாமல், பிறந்ததும் என்னைக் கொன்று ஆற்றிலே வீசியிருந்தால், வாழ்நாள் பூராவும் சூதகுலத்தவனாக - அனாதையாக உலகத்தார் பேசும்படி வாழ்ந்திருக்க மாட்டேன்...'' என்ற கர்ணனின் நெஞ்சில் மிதந்து வெளிவந்த ஆழமான பெருமூச்

போகட்டும் என்று சாபம் கொடுத்து விட்டார்.

காட்டிலே எதிர்பாராதவிதமாக முனிவரின் பசு உன்னால் அடிபட்டு இறந்து விட்டதற்காக, அந்த முனிவன் போர்க்களத்தில் உன் தேர்ச் சக்கரம் சேற்றில் சிக்கிக் கொள்ளட்டும் என்று சாபம் கொடுத்து விட்டான். உன் உயிரைக் காக்கக்கூடிய கவசகுண்டலங்களை இந்திரன் வந்து யாசித்துப் பறித்துக் கொண்டு போய் விட்டான்... கடைசியில், பெற்ற தாய் வந்து இரண்டு வரங்களை வாங்கிக் கொண்டு உன் கைகளைக்

கட்டிப் போட்டு விட்டாள். இவற்றிற் கெல்லாம் உச்சமாய், வஞ்சகக் கண்ணன் உன் எதிரில் பார்த்தசாரதியாய் நிற்கிறான்!

கர்ணா! இத்தனை பலஹீனங்களையும் சுமந்து கொண்டு, வேறெந்த வீரனும் குருக்ஷேத்திரத்திற்கு வரவில்லை. இத்தனை தடைகளையும் எதிர்கொண்டு போரிட்டு, நட்புக்காகவும் நன்றிக்காகவும் உயிர் கொடுத்திருக்கிறாயே, நீதான் முதன்மையான வீரன்!... ஓர் உன்னதமான ஜீவாத்மாவின் கடைசிக் கணங்களைப் பக்கத்தில் இருந்து தரிசிக்க வேண்டும் என்பதால்தான், நானே உன் சந்நிதானத்தைத் தேடி வந்தேன், கர்ணா!"

"வசுதேவா...! என் கண்களில் உன் விஸ்வரூப லாவண்யம் பதிந்திருக்க, என் நாவில் உன் திவ்யத் திருநாமம் ஒலித்திருக்க, மனம் நிறைந்த ஆனந்தத்துடன் சாக, நான் புண்ணியம் செய்திருக்கிறேன்... மாதவா! எனக்குக் கடைசியாக ஓர் உதவி செய்ய வேண்டும்..." என்று உயிரின் கடைசி இயக்கத்திலிருந்தபடி முணுமுணுத்தான் கர்ணன்.

"கேசவா! என் மனைவியிடம் போய், என்னைப் பற்றி நீ சொல்ல வேண்டும். நான் யார் என்பதை அவளுக்குத் தெரிவிக்க வேண்டும்" என்று கோரிக்கையைத் தெரிவித்தான் அவன்.

"ஏன், நீ இறந்ததுமே, குந்திதேவி இங்கே ஓடிவந்து உன்னை மடியில் தூக்கி வைத்துக் கொண்டு, 'என் மகனே' என்று அழத்தானே போகிறாள்?" என்று குறுக்கிட்டுக் கேட்டான் கண்ணன்.

"இல்லை... அது, என் மனைவிக்கு முக்கியமில்லை; நான் ஒரு க்ஷத்திரியன் என்பது அவளுக்குத் தெரிய வேண்டும். அவள் ஓடிவந்து, என் உடலின் மேல் விழுந்து, என் கணவர் இறந்து விட்டாரே என்று அழ வேண்டும். அப்போதுதான் என் ஆத்மா சாந்தியடையும்... இத்தனை நாளும், என்னைக் கணவனாக முழுமையாக அவள் அங்கீகரிக்கவில்லை. தேரோட்டி மகனாகத்தான் மதித்திருந்தாள்..." என்று உடைந்த சொற்களில் வெளிப்பட்ட அவனுடைய ஆழமான ஆதங்கத்தைப் புரிந்து கொண்டான் கண்ணன்.

"நானே போய், அவளிடம் தெரிவிக்கிறேன், கர்ணா! குந்தி இழந்தது, ஒரு மகனைத்தான். ஆனால், காஞ்சனா இழந்தது, ஓர் உன்னதமான க்ஷத்திரியனை..." என்று உணர்வு பொங்கும் குரலில் சொன்ன பார்த்தசாரதி, அர்ச்சுனனிடம் திரும்பி, கடைசியாக அம்பு எய்யச் சொன்னான்.

கனத்த இதயத்துடன், அர்ச்சுனன் அஞ்சலிகா என்ற அஸ்திரத்தை கர்ணன் மேல் எய்தான். அதன் தாக்குதலில் கர்ணனின் உயிர், உடலிலிருந்து மெல்ல விடுபட்டு, விண்ணை நோக்கி நகர்ந்தது...

பாண்டவருக்காக, துரியோதனின் அரண்மனைக்குத் தூது நடந்த கண்ணன், இப்போது கர்ணனுக்காக, காஞ்சனையின் மாளிகையை நோக்கிப் புறப்பட்டான்....

(முற்றும்)

உங்களுக்குத் தெரியுமா?



சேம்பு, கருணை இவற்றை வாங்கிய உடனேயே சமைப்பதை விட, நான்கைந்து நாட்களுக்குப் பின் சமைப்பது நல்லது. காரல் இருக்காது. எளிதில் வேகும். சுவையும் அதிகமாக இருக்கும்.

- ஜானகி அம்மாள்.





மே 2005 இதழில் சகோதரி துர்கா அவர்கள் பலவித கீரைகளைப் பற்றித் தெரிவித்திருந்தார். மேலும், சில கீரைகளின் விவரங்களை வாசகிகள் போட்டி போட்டுக் கொண்டு எழுதிக் குவித்து விட்டனர். அவற்றின் விவரம் இதோ -

# இந்தக் கீரை போதுமா?

**1. வெந்தயக் கீரை** - வயிற்று வலி, குடல் ரணம், வயிற்றுக் கடுப்பு வலி தீர உதவும். உயிர்ச்சத்து 'ஏ' அதிக அளவில் உள்ளது. கண் பார்வைக் கோளாறை நீக்க உதவுகிறது.

**2. துத்திக் கீரை** - மூலநோய்க்குச் சிறந்தது.

**3. புதினாக் கீரை** - சமையலில் இதைச் சேர்ப்பதால் நல்ல மணமூட்டுவதுடன், ஜீரண சக்தியையும் அளிக்கிறது. பசியின்மை, அஜீரணம், குமட்டல், வாந்தி, மாதவிடாய்க் கோளாறுகள், சுவையின்மை போன்ற பல உடல் உபாதைகளைக் குணப்படுத்துகிறது.

**4. சுக்காங்கீரை** - ஈரலுக்கு வலுவைத் தந்து, பசியைத் தூண்டும் குணமுள்ளது. சூட்டால் ஏற்படும் வாய்வு, நெஞ்செரிச்சல், பித்தம் முதலியவற்றை கண்டிக்கும் குணமுள்ளது.

**5. தொய்யாக்கீரை** - சுண்ணாம்புச் சத்து நிறைந்தது. பற்களுக்கும், நகங்களுக்கும் நல்ல ஆரோக்கியம் அளிக்கும்.

**6. பண்ணைக்கீரை** - ஜீரணக்குடல், மற்றும் மலக்குடல் வலுவடைய உதவும். சரும நோய்களையும் நீக்கும் குணமுடையது.

**7. ஆரைக்கீரை** - இக் கீரையை உண்பதால் அடிக்கடி சிறுநீர் கழிப்பதும், அதிக அளவில் சிறுநீர் கழிப்பதும் குணமடையும். பித்தத்தைத் தணிக்கும் குணமுள்ளது.

**8. பரட்டைக் கீரை** - தோல் சம்பந்தமான வியாதிகள் குணமாகும். இக் கீரை உடல் உஷ்ணத்தை சமநிலையில்







வைக்கும் குணமுடையது.

**9. சாணாக்கீரை** - சளித்தொல்லையை நீக்கும். ஆறாத புண்களை ஆற்றும்.

**10. சிறுபசலைக் கீரை** : தாகத்தைத் தணிக்கும் குணமுடையது.

**11. பொடுதலைக்கீரை** - அஜீரண பேதி, மண்டையிடி, இருமல், தலைவலி, தலைப் பொடுகு போன்ற நோய்களைக் கண்டிக்கும்.

**12. வல்லாரைக் கீரை** – ஊட்டச்சத்து நிறைந்தது. பலகீனம், ஞாபகமறதியைப் போக்குகிறது. நரம்பு, மூளைக்கு பலத்தைத் தரும் குணமுள்ளது. இதை அடிக்கடி சாப்பிடாமல் வாரம் ஒருமுறை பருப்புடன் அல்லது துவையலாகச் செய்து உண்ணலாம்.

**13. அம்மாப்பச்சரிக்கீரை** - மாதவிடாய் சம்பந்தமான கோளாறுகளையும், வயிற்றுப் புண்களையும் ஆற்றும். தாய்ப் பாலைப் பெருக்கும். வயிற்று உபாதைகளுக்குச் சிறந்தது. ருசிமிக்கது. இக் கீரையின் பால் கால் ஆணியை குணமாக்கவல்லது.

**14. மூக்கரட்டைக் கீரை** - சிறுநீர் கோளாறுகளுக்கு நல்லது.

மேலும், முசுமுசுக்கை, கல்யாண முருங்கை, சாணாக்கீரை, முக்குளிக்கீரை, முள்ளுக்கீரை போன்ற மருத்துவக் குணமுள்ள கீரைகளையும் உண்ணலாம். குப்பைக் கீரை, சிகப்பு முளைக்கீரை, சிலோன் பசலை, கொடிப் பசலை, செடிப்பசலை, சிகப்பு பசலை போன்ற ருசிமிக்க கீரைகளையும் சமைத்து உண்ணலாம்.

**- கே. அனுராதா**

**மேலும் கீரைகளைப் பற்றி குறிப்பிட்டிருக்கும் வாசகிகள்...**

வட்டச்சரணைக் கீரை, தவசிக் கீரை, நீராரைக் கீரை - **வி. லட்சுமி**

சுக்குக் கீரை, கோரைக் கீரை **ஐஸ்வர்யா**

நெருஞ்சிக் கீரை, தைவளைக் கீரை குமுட்டிக் கீரை, துயிலுக்கீரை, முள்ளிக் கீரை - **சுப். செண்பகவேலன்**

மீனாஷிக்கீரை, முடக்கத்தான் கீரை - **விசாலம் நாராயணஸ்வாமி.**

வாதநாராயணக் கீரை, மணல் கீரை, **டி. கே. சித்தாலட்சுமி.**

முசுமுசுக்கை, பூசணிக் கொடி கீரை, லச்சபட்டைக் கீரை - **ஜானகி ரங்கநாதன்.**

புதினா கீரை, வெந்தயக் கீரை, வெங்காயத் தழைக்கீரை - **கே. வசுமதி.**

திருவாட்சிக்கீரை, பாலக் கீரை, கல்யாண முருங்கைக் கீரை, கீழாநெல்லிக் கீரை, ஓமவல்லிக் கீரை, சங்கிலைக் கீரை, புளிய இலைக் கொழுந்து - **பி. தமிழ்மணி**

மின்ன இலை, சேம்பு, சோம்புக்கீரை - **மைதிலி சம்பத்**

தும்பை இலை, முள்ளுக் கீரை **ஊர்மிளா பிரசாத்.**



ராஜஸ்தானில் ஆஜ்மீருக்கு அருகில் இருக்கும் பியாவர் என்ற ஊரில் அப்பளம் பிரசித்தி பெற்றது. எள்ளை இடிக்கவோ, அரைக்கவோ இல்லாமல், வெள்ளை எள்ளை சீனிப் பாகில் கலந்து அப்பளம் செய்வார்கள். எள் ஒன்றோடு ஒன்று ஒட்டாமல் தனித்தனியாக சீனிப் பாகில் கண்ணாடியில் செய்தது போல் ரொம்ப அழகாகவும், சுவையாகவும் இருக்கும். பியாவரில் மாத்திரமே கிடைக்கக்கூடிய 'தில்லி கா பாப்பட்'-ஐ சில குடும்பத்தினரே செய்கிறார்கள்.

**- வெ. ராஜலட்சுமி.**

இந்த ரசம் வாய்ப்புண், குடல் புண் போன்றவற்றுக்குச் சிறந்த மருந்து. குழந்தைகளுக்கும் தரலாம். இதில் முக்கியமாக, அகத்துக் கீரை, மணத்தக்காளிக் கீரை சேர்க்கலாம். மற்ற கீரைகள் இல்லையெனிலும் பரவாயில்லை. ஆனால் முருங்கைக் கீரை சேர்க்கக் கூடாது.



# கீரை ரசம்

1. கீரைகள் அகத்துக் கீரை, மணத்தக்காளிக் கீரை, பொன்னாங்கண்ணி, தண்டுக் கீரை வேறு எந்தக் கீரையாக இருந்தாலும் தலா ஒரு கட்டு.
2. கசகசா - 1 டீஸ்பூன்,
3. சீரகம் - ½ டீஸ்பூன்,
4. சின்ன வெங்காயம் - 10,
5. தக்காளி - 1 (சிறியது),
6. உப்பு - தேவைக்கேற்ப,
7. எண்ணெய் - 2 டீஸ்பூன்,
8. கடுகு - ½ டீஸ்பூன்,
9. காய்ந்த மிளகாய் - 5,
10. பால் - ½ தம்ளர்,
11. அரிசி கழுவிய தண்ணீர் - 1½ லிட்டர்.

**செய்முறை :**

1. கீரைகளை நன்கு ஆய்ந்து சுத்தம் செய்து கொள்ள வேண்டும்.

2. அரிசி கழுவிய நீரில் 7 வெங்காயத்தைப் பொடியாக நறுக்கி, உப்பு, தக்காளி, கீரை சேர்த்து நன்கு வேகவிட வேண்டும்.

3. தேங்காய், சீரகம், கசகசா, 3 சின்ன வெங்காயத்தை அரைத்துக் கொண்டு கீரையில் சேர்க்க வேண்டும்.

4. பால் சேர்த்து இரண்டு கொதி வந்தவுடன், எண்ணெய் காயவைத்து கடுகு, காய்ந்த மிளகாய் தாளித்துக் கொட்ட வேண்டும். (பாலைச் சூடாக்கி பிறகு கீரை ரசத்தில் சேர்க்க வேண்டும்.)

குழம்பு, சாம்பார் போல் இந்த ரசத்தை சாதத்தில் ஊற்றிச் சாப்பிடலாம். (கசகசா சேர்க்க வேண்டும் என்ற அவசியம் இல்லை).

- ப்ரியா சிவா, சிங்கப்பூர்.

# கஞ்பு வட்டம்



## ரேவதி சங்கரன்

*ஜெயந்தி முத்துக்குமாரசாமி,*
*திருச்சி - 18.*

*ஒரு பெண் திருமணத்திற்கு முன்பு அவர்கள் அம்மா வீட்டுக் குலதெய்வத்தைக் கும்பிடுகிறாள். திருமணத்திற்குப் பின் மாமியார் வீட்டுக் குலதெய்வத்தைக் கும்பிடுகிறாள். சில சமயம் அம்மா வீட்டுத் தெய்வம் அம்மன். மாமனார் வீட்டுத் தெய்வம் ஐயனார் (அல்லது ஆண் தெய்வம்) என்றால் அவள் அம்மா வீட்டுக் கோவிலுக்குச் செல்லக் கூடாது என்கிறார்கள்? சரியா? தவறா?*

அன்பு எனும் மகத்தான சக்தியே தெய்வம். தெய்வ வழிபாடு, குலதெய்வத்தைக் கும்பிடுவது இதெல்லாம் மனம் ஒருமைப்படுவதற்காக முன்னோர்கள் வகுத்த வழி ஆகும். உலக மக்கள் அனைவருமே ஒரு குடும்பத்து மக்கள் என்ற அடிப்படையில் அன்பால் பிணைக்கப்பட வேண்டும் என்று தெய்வத்திடம் இறைஞ்சுகின்ற காலகட்டத்தில் தாய் வீட்டுத் தெய்வம் மாமனார் வீட்டுத் தெய்வம் என்ற பேதம் தேவையில்லையே அம்மா!

*கே. கீர்த்தி சாகர், பூனா.*

*நல்லவன் கஷ்டப்படுகிறான். தீயவன் சந்தோஷமாக, பணக்காரனாக வாழ்கிறான். நான் சந்தோஷமாக, செல்வந்தனாக வாழவே விரும்புகிறேன். அப்படியானால் நான் தீயவனாக மாற வேண்டுமா?*

அவசரப்பட்டு மாறி விடாதீர்கள். சந்தோஷமாக, செல்வச் செழிப்போடு வாழ வேண்டும் அவ்வளவுதானே! யாரோ பணக்காரன் தீயவன் சந்தோஷமாக வாழ்வதை முன்னோடியாகக் கொள்ள வேண்டாம். மனதில் தீய எண்ணங்களை நீக்கி ஆக்கபூர்வமாகச் சிந்திக்கவும், செயல்படவும் ஆரம்பியுங்கள். நல்லவனாக




செல்வந்தனாக வாழப் போகின்ற நாட்கள் மிக அருகில் இருப்பதாக எண்ணி வாழ்க்கையை நடத்துங்கள். இதுவே உங்களுக்கு உந்து சக்தியாகட்டும். நல்ல எண்ணங்களே வழிநடத்த உங்களது இலக்கை அடைவீர்கள். இம்மையிலும் மறுமையிலும்!

*ஆர். கவிதா, சீர்காழி.*

*இராகு காலம், எமகண்டம் தவிர்த்து நல்ல நேரம் பார்த்து ஆரம்பிக்கும் புதிய முயற்சிக்கும், இதை எதுவுமே பாராமல் மனம் போன போக்கில் எடுக்கும் முயற்சிக்கும் வெற்றியின் பங்கு வித்தியாசப்படுமா? ப்ளீஸ். விளக்கம் கூறுங்களேன்.*

நல்ல வேளையில் எதையும் தொடங்குவது நமது நாட்டில் வழி வழிவந்த பழக்கம். நாம் செய்யும் செயல்கள் ஒவ்வொன்றும் இறைவனால் ஆசீர்வதிக்கப்பட்டவையே என்ற முழுமையான சரணாகதியிலும் வெற்றி பெறலாம். "நாள் என்செயும் வினைதான் என்செயும் எனைநாடி வந்த கோள் என்செயும் கொடுங்கூற்று என் செயும்' என்ற ஆணித்தரமான நம்பிக்கை இருந்தாலும் வெற்றி பெறலாம். உண்மையான உழைப்பு வீண் போகாது. வெற்றிக் கனியின் சுவை ஒரு நாளும் குன்றாது! குறையாது!

*கே. பட்டு, சென்னை - 44.*

*ஒரு வாரத்தில் இறக்க வேண்டும் என்று இறைவன் கனவில் கட்டளையிட்டால் என்ன செய்யத் தோன்றும்? (தவறாக எண்ணாதீர்கள்)*

உண்மையில் மகிழ்ச்சிதான். இப்போது வாழ்கின்ற நாள் ஒவ்வொன்றும் 'போனஸ்' தானே! வாழ்க்கையை முழுமையாக வாழ்ந்த பின்னர், நடமாடிக் கொண்டிருக்கும் போதே அழைப்பு வருகிறது. அதுவும் முன்கூட்டியே அறிவிக்கப்படுகிறது என்றால் இறைவனுக்குத்தான் என்மீது எவ்வளவு கருணை! ஆனால், அடுத்த மாத இதழைத் தயாரிப்பதில் எந்தவிதக் குந்தகமும் ஏற்படக்கூடாதே என்று கொஞ்சம் அவசரமாகச் செயல்பட அந்த இறைவனே வழிகாட்ட வேண்டும் என்று வேண்டுவேன், அவ்வளவுதான்.

* பெயர் சொல்ல பேரன்கள், பேத்திகள்...



*வான்மதி, கோவை.*

*'மங்கையர் சக்தி'யை நமது இதழ் மூலம் வெளிக்கொணர்ந்து வாசகியரின் இதயத் துடிப்பை சரியாக 'நாடி' பிடித்த தங்களின் 'ரோல் மாடல்' யார் மேடம்? தங்களின் சுறுசுறுப்பான செயல்கள் இந்த வேகம் பெறுவதற்கு தாங்கள் செய்யும் ஆரோக்கிய ரகசியம் என்ன?*

உலக வாழ்க்கை எனும் நாடகத்தில் எனக்குத் தரப்பட்டிருக்கும் பாத்திரத்தை அந்த 'சூப்பர் டைரக்டர்' நடத்திச் செல்வதை அப்படியே ஏற்றுக் கொண்டிருக்கிறேன். நாடியைப் பிடிக்க வைப்பதும், நடத்திச் செல்வதும், அதில் ஒரு ஈடுபாடும் வேகமும் தருபவள் ஈச்வரி ஜகதீச்வரிதான் என்பதைத் திண்ணமாக நம்புகிறேன். இன்னாரால் இன்னது இப்படி இப்படி முடிக்கப்பட வேண்டும் என்பது முன்கூட்டியே நிர்ணயிக்கப்பட்ட செயல். எனக்கு இந்த ரோலைத் தந்த மாடல் வேறு யாராக இருக்க முடியும்?

*கே. சு. சீதாலெக்ஷ்மி, தேனி.*

*இன்றைய இளையதலைமுறைகள் நாள், கிழமை, பண்டிகைகளையும், திதி போன்றவற்றையும் வேண்டாமென்று ஒதுக்கி விட்டார்கள். பெற்றோர்கள் (கணவனின்) வேண்டாம், மூதாதையரின் பெயர்களையும் வைக்கக் கூடாது என முடிவு செய்து விட்டார்கள். ஆனால், அவர்களின் சொத்து, பணம் மட்டும் வேண்டாமென்று சொல்லவில்லை. இது நல்லதற்கா, உங்களின் கருத்து என்ன என்பதைத் தெரிந்து கொள்ள ஆசைப்படுகிறேன்.*

உண்மையில் தாத்தா-பாட்டியின் பெயருக்குப் பெருமை சேர்ப்பவர்கள்தான் பெயரன், பெயர்த்தி, மருவிப் பேரன், பேத்தி என்கிறோம். காலத்தின் போக்கில் ஏற்படுகின்ற மாற்றங்களை ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும். திருவேங்கடாசலபதி, தேனார்மொழியம்மை என்ற பெயர்களைப் பள்ளிகளிலும் பாஸ்போர்ட்டிலும் எழுதுவது எவ்வளவு கடினம்! நடைமுறைக்கு ஏற்றபடி அர்ஜுன், திவ்யா என்பதில் தப்பில்லை. சொத்து, பணம் என்கிறீர்களே, மூதாதையர் செய்த நல்வினை தீவினைகளும்தானே அதில் அடங்கும்? பணத்தை வேண்டாம் என்று சொன்னாலும் மற்றவைகளை அனுபவித்துத்தானே ஆகவேண்டும்! பொருளோடு அருளையும் விட்டுச் செல்லும் குடும்பத்தில் பிறக்க நல்வினைப் பயன் வேண்டுமே!

*காசி.கி. நிர்மலா பிரேம் ஆனந்த், மயிலாடுதுறை.* ✱

*பிறருக்குத் தொல்லைக் கொடுக்கக் கூடாது என்பது ஏமாளித்தனமா? பிறர் மனம் புண்படாமல் நடந்து கொள்வது கோமாளித்தனமா? சுயநலமில்லாமல் வாழ நினைப்பது இளிச்சவாய்த்தனமா? பதில் வேண்டும்.*

பிறருக்குத் தொல்லை கொடுக்காமல் இருப்பது ஏமாளித்தனமல்ல. பிறர் மனம் புண்படாமல் நடந்து கொள்வது கோமாளித்தனமல்ல. சுயநலமில்லாமல் வாழ நினைப்பது இளிச்சவாயத்தனமல்ல. உயர்வான நற்பண்புகளோடு வாழ

✱ இந்த மாதம் அன்பு வட்டம் சிறந்த கேள்விக்கு நர்மதா பதிப்பகம், சென்னை - 17 வழங்கும் ரூ. 250/- மதிப்புள்ள புத்தகங்களைப் பரிசாகப் பெறுபவர் :

காசி. கி. நிர்மலா பிரேம் ஆனந்த், மயிலாடுதுறை.



வீட்டில் பழைய இஞ்செக்ஷன் சிரிஞ்சுகள் இருக்கிறதா? வீணாக ஏன் இடத்தை அடைத்துக் கொண்டு என்று தூக்கிப் போட்டு விடாதீர்கள். பூட்டுகள், கதவு கீல், தாழ்ப்பாள் ஆகியவை துரு ஏறாமல் இருக்க, எண்ணெய் விடுவதற்கு அவற்றைப் பயன்படுத்தலாம்.

– ஏ. ஹம்ஸத்

வேண்டும் என்று நினைப்பதே மிக உயர்ந்த உள்ளத்தின் வெளிப்பாடு. இப்போதுள்ள காலகட்டத்தில் நீங்கள் சொல்வது போல் வாழ்பவர்களுக்கு மற்றவர் தரும் பட்டங்கள்தான் நீங்கள் இட்டுள்ள பட்டியல். இதற்கெல்லாம் மதிப்பெண் போடுவது மக்கள் அல்ல. இதற்கெல்லாம் பயந்திருந்தால், அன்னை தெரசாவோ, அண்ணல் காந்தியோ செயல் பட்டிருப்பார்களா? நல்லதே செய்வோம். நல்லதே நடக்கும்! வாழ்வோம் எளிமை யான ஏமாளியாக, மகிழ்வூட்டுவோம் கோமாளியாக, பிறர்க்கென வாழ்வதில் மனம் நிறைந்து சிரிக்கும் இளிச்சவாயாக!

*மாலதி நாகராஜன், கடலூர்.*

*பத்திரிகைத் துறையில் ஆசிரியராகப் பொறுப்பேற்று என்னதான் சிரமப்பட்டாலும் பெண்கள் தாக்குப்பிடித்து வெற்றிக்கொடி நாட்டுவது, ஆண்களுக்கு நிகராக பெண்கள் உயர்ந்த இடத்தைப் பிடிப்பது என்பது, இன்றையக் கால கட்டத்தில் எளிதில் நடக்கக்கூடிய காரியமா? பதில் கூறவும்.*

உயர்ந்த இடத்தைப் பிடிப்பது வேறு, உயர்ந்த இலக்கை நோக்கிச் செல்வது வேறு. எத்தனை உயர்வுகள், எத்தனை வெற்றிகள் பெற்றாலும் இறுதியில் எதை எடுத்துச் செல்லப் போகிறோம்? எனவே, நான் இந்தப் போட்டியில் இல்லை! உங்களுடைய கரிசனத்திற்கு நன்றி!

*வி. ஆனந்தி, மதுரை.*

*பிடிவாதம், வைராக்கியம் - வேறுபாடு என்ன?*

நினைத்ததை எப்படியாவது சாதிக்க வேண்டும் என்பதற்காக ஏறிமிதித்தாலும் சரி, எத்தனை மனங்களைப் புண்படுத்தி னாலும் சரி என்று தான் பிடித்த பிடி விடாமல் வாதம் செய்து ஒன்றை அடை வது சுயநலமான பிடிவாதம். வைராக்கியம் என்பது உயர்நோக்குக் கொண்ட மன உறுதி. பிறர் நலம் கருதித் தன்னை வருத் திக் கொண்டாவது பிறருக்கு நன்மை பெற்றுத் தருவது வைராக்கியம். இப்போதைய சூழலில், மேதாபட்கர் கொண்டுள்ள வைராக்கியம் போற்றத் தகுந்தது.

*ராஜி குருஸ்வாமி, சென்னை - 88.*

*உங்களின் சிறந்த சிநேகிதியாக யாரை நினைக்கிறீர்கள்? என்னுடைய தோழி மற்றும் சகலமும் ஈச்வரி ஜகதீச்வரிதான்.*

நீங்கள்தான். என் தோழி உங்களுக்கும் தோழியானால் நாம் இருவரும் தோழிகள் தானே! நல்லது கெட்டது எல்லாவற்றிலும் பங்குகொண்டு அவ்வப்போது தட்டிக் கொடுத்து, "கவலைப்படாதே, இதுவும் கடந்து போம்" என்று சொல்பவள்தான் உற்ற தோழி! நமக்கு அவள் இருக்கும் போது என்ன குறை?

# ஒன்ஸ்மோர்

- ஜெ.நி. சபரி

உலகவாழ்வில்
உயர்வதற்கும்
உறுதியுள்ளம்
பெறுவதற்கும்
உறுதுணையாய்
உதவிடும்சொல்
ஒன்ஸ்மோர் - சோர்ந்து
உறங்கிவிட்ட நேரத்திலும்
ஊக்கம்தந்து எழுச்சியூட்டி
உற்சாகம் அளிக்கும் டானிக்
ஒன்ஸ்மோர்!

துவண்டுபோன நண்பர்களின்
துயர்துடைத்து நிமிரவைத்து
துணிச்சலூட்டும் சக்தி
இந்த ஒன்ஸ்மோர்!

சக்தியற்றுப் போனோமென்று
சஞ்சலப் படுபவர்க்கு
வெற்றிக்குறி சொல்லுவது
ஒன்ஸ்மோர் - பெரிய
வெற்றிகளைப் பெற்றவர்கள்
வெற்றிபல இன்னும்பெற
முத்தமிட்டு சக்திதரும் ஒன்ஸ்மோர்!

மனிதருக்கு மனிதர்களே
மணமுவந்து வாழ்த்துக்கூறி
முகமலர்ந்து எழுப்பும்
குரல் ஒன்ஸ்மோர் - நாம்
ஒருவரோடு ஒருவர் சேர்ந்து
ஒற்றுமையாய் வாழ்வதற்கு
உரக்கச் சொல்வோம்
பலதடவை ஒன்ஸ்மோர்








## மணமகள் தேவை

◆ ஐயர், வடமாள், ஸ்ரீவத்ஸ, கேட்டை, 5.5' 40 வயது, MBA, fair, Rs. 50,000/- per month, Own Business, Delhi, Requires graduate girl below 37, Subsect no bar. Contact : 0451-2431155, 044-23765129 Box No. 11555

◆ இந்து நாடார், மூலம் (தனுஷ் ராசி) 31/ 5.10', எம்.சி.ஏ., எம்.பி.ஏ. பன்னாட்டு நிறுவனம், 20,000/- மாதிறமான மணமக னுக்கு படித்த மணப்பெண் தேவை. பெட்டி எண் : 11556

◆ Madhwa, Kannada, Kasyapa Uthiradam-2, Aug-69, 165 cms, fair, B.E. working in PSU Company, well-settled Boy seeks suitable alliance. Box No. 11557

◆ Wanted good-looking, fair girl from decent family for Ashtasahasram boy, Ayilyam 33/173 diploma in Automobile Engineering, Agriculturist looking after own farm and self employed and well-to-do simple marriage and no expectations. Subsects no bar. Apply with horoscope. Ph : 22331999 Box No. 11558

◆ Thengalai Iyengar, Athreya, Pooradam, 39, Manager, A.P. Endowments, 20,000/- seeks graduate good-looking girl. Send horoscope to Box No. 11559

◆ Iyer, Kashyapa Gothram, Punartham, Chevvai in 7th place, Non-matriculate monthly Income Rs. 6000, 39 years, no caste preference. Only mother and married sister. Box No. 11562

◆ ஐயர், குருக்கள், காஸ்யப கோத்திரம், மூலம் நட்சத்திரம், 31, 5.2 கோயில் அர்ச்சகர் மற்றும் புரோகிதம் மாத வருமா னம் ரூ. 10,000/- வரனுக்கு தகுந்த மணப் பெண் தேவை. ஃபோன் : கரூர் - 954324 220771, (அ) சென்னை : 25584667. பெட்டி எண் : 11563

◆ ஐயங்கார், வடகலை, ஷடமர்ஷணம், 27, 5.6', கிருத்திகை, B.Sc., M.F.T., துபாயில், Logistics வேலை, ரூ. 60,000/- மாதம், முதுகலை பட்டதாரி பெண் தேவை. வேலைக் குச் சென்றால் உத்தமம். செவ்வாய் தோஷ ஜாதகங்கள் மட்டும் தேவை. ஃபோன்: 044-30927006/9380571120. பெட்டி எண்: 11564

◆ ஐயர், வடமாள், பாரத்வாஜ கோத் திரம், சித்திரை 4-ம் பாதம், 1964, பட்ட தாரி, வியாபாரம், ரூ. 15,000/- மாத வருமானம், உட்பிரிவுகள் சம்மதம். எளிய திருமணம். ஃபோன் : 0-94433 22369 ஈமெயில் : sivasambhu@gmail.com பெட்டி எண் : 11565

◆ ஐயர், வடமாள், பாரத்வாஜ கோத் திரம், சதயம், 1966, 5.11', B.Com., A.C.A. I.S.A., சார்ட்டர்டு அக்கௌன்ட டன்ட், உட்பிரிவுகள் சம்மதம். ஃபோன்: 0-94433 22369 ஈ-மெயில் : maniankbs@gmail.com பெட்டி எண் : 11566

◆ Wanted good-looking girl having H1B Visa/Working in USA for Kannada Brahmin Boy 31/160cm, M.C.A. Software U.S.A. Green Card holder, Kirthigai-3 (one leg polio) Send Horoscope. Ph : 044-55666821 Box No. 11567

◆ Iyer, Vathimal, 41 years, 170cms, Sal. Rs. 8000, Poosam, Bharatwajam, Seeks suitable Brahmin girl. Simple marriage. Box No. 11568

◆ Iyer, Vadamal, Srivatsa, Ayilyam 3rd padam, 31, 5.6, B.Sc., Rs. 10,000 p.m., Private Company, seeks good-looking, graduate, employed girl. Box No. 11569

◆ Thenkalai Iyengar, Srivatsam, Revathi (Meenam) 29/5.8', B.Sc., M.C.A. Senior Software Engineer, Earning Rs. 30,000/- p.m., Own House, Only Son, Parents (Both) Pensioners, seeks professionally qualified employed girl of same Kalai above 23 years. Horoscope/Details to Box No. 11570

◆ Iyer, Brahacharanam, 29, 165, MCA, Software Engineer, MNC, Bangalore, 50,000 Poorattadhi, Kowsikam, seeks good-looking Tamil Iyer graduate bride employed Bangalore below 25/165. Ph. No. 080-23324524 Send HBP Box No. 11571

◆ Thanjore, Vadama, Garga, 34, B.Sc., Avittam, Private employment Rs. 10,000/- also agent for LIC and the New India Assurance Co., Own Flat at Chennai seeks suitable girl. Ph : 044-26547349 Box No. 11572

◆ Iyer, Vadama, Koundinyam, Poosam, 29/165 M.Sc., MS (USA) Completing Phd (USA) in early 2007 having Chevvai in 8th place seeks good-looking bride. Send details. Ph :044-22443099 Box No. 11573

◆ Vadakalai, Srivatsa, Uthiram, M.C.A. 31/155 Software Project Manager MNC, Teetotaler, Left leg slightly handicapped, help not needed. Seeks suitable educated Brahmin girl. Ph : 044-26800924 Box No. 11574

◆ ஐயர், வடமாள், ஸ்ரீவத்ஸம், உத்திராடம், 33, 170, உத்திரட்டாதி, 31/165 படித்த வேலையிலுள்ள வசதியான சென்னையில் சொந்த வீடுள்ள சகோதரர்களுக்கு ஓரளவு படித்த வேலையிலுள்ள/இல்லாத மணமகள் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். ஃபோன்: 55266439. பெட்டி எண் : 11575

◆ Thenkalai Iyengar, Bharadwaja, Poorattadhi 3rd padam, 32/171, 50,000/- B.Com., FIII, Software Professional seeks suitable graduate girl with good family background. Ph : 2371 0109. email: lakshs@yahoo.com Box No. 11576

◆ Iyer brothers, Erahacharanam, Veetahavya, 1) Swathi, 1959, 160, ITI, Govt., 10,000/- 2) Poosam, 1961, 158, P.G., Bank 25,000/- Both Own Plots. Seek suitable brides. Educated, unemployed/employed. Subsects/Iyyangars/Telugu Brahmins acceptable. Ph : 08554-238087/9444285754 Box No. 11577

◆ சாண்டில்ய கோத்திரம், திருவோண நட்சத்திரம், சட்டப்படி விவாகரத்தானவர், ஐயங்கார், 5.6' சென்ட்ரல் கவர்ன்மெண்ட், உத்தியோகத்தில் இருப்பவருக்கு லைஃப் பார்ட்னருக்காக 10 வகுப்புக்குள் படித்த, குழந்தையில்லாத, விதவையோ, விவாகரத்தான 50 வயதிற்கு மேலுள்ள தமிழ் பேசத் தெரிந்த பிராமண பெண் தேவை. தொலைபேசி எண் : 080-25575134 பெட்டி எண் : 11578

◆ வடகலை ஐயங்கார், வயது 48, மணமாகாதவர், சொந்தத் தொழில், சென்னையில் சொந்த பிளாட், ஐயங்கார், ஐயர் உட்பிரிவுகள் சம்மதம். விவாகரத்தானவர் சம்மதம். உத்திரட்டாதி நட்சத்திரம் ஆத்ரேய கோத்திரம். 9444117323 பெட்டி எண் : 11579

◆ Tamil Iyer, Vadamal, Bharadwajam, Visagam 26/178 BE (E&TC) MS (USA) Software Engineer, California USA seeks good-looking professionally qualified girl from a decent family. Phone : 020-2745 6267 email: geetha. balachandran@gmail.com Box No. 11580

◆ Iyer, Asthasahasram, Kashyaba, Moolam 40 years Male working in MNC Nagpur seeks alliance within 35 having working knowledge as Teacher/Tailor Subsect no bar. Contact : Mrs. Janaki Krishnan, 033-24219681 Box No. 11581

◆ Saiva Vellala, Widower living with two boys 49 years, settled and working in U.S.A. seeks graduate girl preferably Hindu Vegetarian. Acceptable widow/legal divorcee. Contact Ph : 04364 228318/cell: 9444486656 Box No. 11582

◆ ஐயர், பிரஹசரணம், ஹரித கோத்திரம், மகம், சிம்மராசி, 30, 6.2', 20,000/- மாத வருமானம், வைதீகத் தொழில்புரிபவருக்கு குடும்பப்பாங்கான படித்த மணமகள் தேவை. பெட்டி எண் : 11583

◆ Green card Holder, 34/180, Handsome, Very fair, Engineer, M.S., U.S.A., propertied in India with Income of about one Lakh per month and employed in USA. Applying for Citizenship. Born to Ayyangar & Naidu parents, Legal Divorcee due to Incompatibility seeks suitable girl preferably professionally qualified. Girl's Merit & Compatibility only consideration. Send horoscope & Bio-data to Box No. 11584

◆ Iyer, Vadama, Kousikam Boy, Maham, 7.00 lakhs p.a. 31/171 Regional Head L.G. Electronics Ltd., Poona seeks suitable bride. Box No. 11585

◆ Iyer, Vadamal, Kaushika, Uthirattadhi, 36/ height 6', B.Com Boy working in Leading Pvt. Ltd., 11,000/- Own Flat in Mumbai. Simple marriage. Contact : 022-24052526 cell : 09820302652 Box No. 11586

◆ Iyer, Brahacharanam, Sreevatsa Gothram, Mrighaseerusham, 36 years, 5.8', B.A. History employed in MNC Chennai drawing Rs. 3.7 lakhs per annum seeks graduate bride. Telephone No. 044-23742271. Contact Box No. 11587

◆ Tamil Iyer, Ashtasahasram, Bharathwajam, Tiruvonam, 29, 5.7', S.S.L.C., 8000 Private Company, boy seeks +2 or any graduate employed/unemployed good-looking, home-loving girls with Chevvai in 7 or 8th house. Contact No. 55374187 cell: 9841277431. Box No. 11588

திருமண மலர் பகுதியில் இடம்பெறும் விளம்பரங்கள் அனைத்தும் விளம்பரம் செய்பவர்களின் கையொப்பத்துடன் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன. மணமகள் அல்லது மணமகன் பற்றிய வயது, வருமானம், அந்தஸ்து உள்ளிட்ட இதர விவரங்கள் விளம்பரதாரர் தரும் குறிப்புகளின் அடிப்படையில் பிரசுரிக்கப்படுகின்றன. இந்த விவரங்களைக் கொண்டு தொடர்பு கொள்ளும் பெற்றோர்கள் அவை சரியான விவரங்களா என்று தனிப்பட்ட முறையில் விசாரித்து உறுதிசெய்து கொள்வது நல்லது. மேலும் வாழ்க்கைத் துணையைத் தேர்ந்தெடுக்கும்பொழுதே மருத்துவப் பரிசோதனையும் மேற்கொண்டால் பிறவிக் குறைபாடுகளுடன் குழந்தைகள் பிறப்பதைத் தடுக்கலாமே!

- பதிப்பாளர், மங்கையர் மலர், சென்னை 600 032

◆ Wanted graduate homely girl for Boy 28/ 5.4' working in Reputed Firm, well settled, Own House Chennai. Inter-caste parents. Mother -Brahmin. Father - Non-Brahmin. (Father no more) Preferable Brahmin/Intercaste. Box No. 11589

◆ **Iyer, Vadamal, Naithruba Kashyaba, Karthigai-4, 1971, B.Sc., 168 cm, Pvt. Co., Chennai, Rs. 8000/- seeks fair, graduate Vadamal girl with good family background. Contact parents. Phone : 044-2474 1542, Box No. 11590**

◆ **Iyer, Vadamal, Bharadwajam, Thiruvonam 1st padam, B.Com., MBA Bank Officer, Chennai 26/5.4', smart Boy, seeks employed/unemployed graduate bride from suitable Iyer family. Contact : 98410 52989 Box No. 11591**

◆ Iyer, Clean habits, Vadamal, Vadhoolam, Anusham 1977/175/12,000 B.Com., E. Commerce, Accountant, Army Public School, Noida (Delhi) seeks graduate girl. Subsect no bar. Tel : 044-22383141 email:ganesangv@yahoo.com Box No. 11592

◆ Iyer, Vadama, Haritham, Poosam, 28, 177cm, MCA, Software Engineer, Reputed MNC, Chennai 4.50 lacs very fair, good-looking Boy seeks fair, slim, professionally qualified employed Vadama girl. Send horoscope to Box No. 11593

◆ **Iyer, Brahacharanam, Kaushika, Poorattadhi, Nov. 71/185 cm, Diploma in Engineering, Asst. Manager Private Ltd Co., Chennai, Income 18000, clean habits, Parents respectable well-to-do family, Own House settled in Chennai. Only brother elder married settled USA. No sisters. Seeks suitable tall girl educated preferably employed in Chennai from respectable family. No terms. Subsect acceptable. Phone : 044-24918430. Box No. 11594**

◆ ஐயர், வடமாள், விஸ்வாமித்ரம், திருவோணம் -4ம் பாதம், fair, 29/170cm, M.C.A., Software Engineer, சென்னையில் வேலையிலுள்ள பையனுக்கு நல்ல தோற்றமுள்ள படித்து வேலையிலுள்ள வயது 23 முதல் 26க்குள் உள்ள பெண் தேவை. 7ம்-8ம் இடத்தில் ராகு கேது சனி செவ்வாய் இல்லாது இருக்க வேண்டும். ஃபோன் : 2495 7696. பெட்டி எண் : 11595

◆ **Talented Clean habits, Iyer, Vadama, Bharadwajam, Punarpoosam, Kadagam, 27/170, B.E., MBA- Final Financial Analyst, MNC, Michigan, USA seeks good-looking bride 24/168 PG/Professionally qualified from respectable family. Visiting Chennai first September. Send horoscope/Photo to geejayar@gmail.com. Box No. 11596**

◆ Iyer, Vadamal, Bharadwaja, Hastham 39, B.Com., working in Private firm with clean habits, Owns Flat at Mylapore, seeks employed/ unemployed girl. Contact : Mobile 98400-115886 Box No. 11597

◆ **Vadakalai, Nithruva Kasyabha, Uthiram III, Kanni, age 26, height 169, B.Tech. (MBA) employed Rs. 25,000 p.m. seeks professionally qualified employed girl in Chennai. Thenkalai acceptable. Send horoscope biodata. Box No. 11598**

◆ **Iyer, Vadama, Agasthiar, Kettai 30/178, MS employed in Leading Software Chennai seeks fair, qualified employed girl 160 plus. subsect no bar. Ph : 044-24475875 Box No. 11599**

◆ Iyer, Brahatcharanam, Koundinyam, Moolam 30, B.Com., Finance Dept., Saint Globain Chennai Rs. 20,000/- Own Flat seeks graduate employed bride. Subsect acceptable. Apply with horoscope, Bio-data to Ph : 044-55667521. Box No. 11600

◆ **Iyer, Vadamal, Bharathwajam, Makam 44 years, Widower, Two Children Daughter (12) Son (5) working as Asst. Manager Govt. Insurance from unmarried Iyer/Iyengar girls 42 years. Subsect no bar. Box No. 11601**

◆ Alliance for Telugu Velnadu, Srivastha Gothram, Uthiradam Boy, 27/170/M.C.A., S.W. T.C.S. 30,000 p.m. Hailing from a respectable family. Subsect no bar. Educated with or without Job Apply to Box No. 11602

◆ Iyer, Brahacharanam, Sankrithi, Puram, 32, 5.8', B.Com., Secretary to CMD, Chennai, 13,000/- seeks employed Iyer Graduate girl. email:njs_iyer@rediffmail.com Box No. 11603

◆ Iyer, Vadama, Bharathwajam, Maham, 8.8.1975/160cm, B.Sc., M.S. (IT) Bharathidasan University working in MNC Software Engineer at USA seeks good-looking professionally qualified girl. Subsect no bar. Contact : 24742707 & Apply Box No. 11604

◆ Vadakalai Iyengar, Shadamarshanam, Pooram, year 1974, Height 5.6', B.Com., Own Business, Automobile Engineering in Chennai. Seeks employed girl from respectable family. Ph : 044-25510308 Box No. 11605

◆ ஐயர், மழநாடு, பிரஹசரணம், கௌண்டின்ய கோத்திரம், ரேவதி நட்சத்திரம், 29 வயது, 5.9', எம்.பி.ஏ., சிட்டி வங்கியில் சிங்கப்பூரில் பணிபுரியும் வரனுக்கு, தகுந்த எம்.சி.ஏ., எம்.பி.ஏ. படித்த மணமகள் தேவை. தொடர்பு கொள்ளவும். ஃபோன் : 044-26191464 பெட்டி எண் : 11606

◆ Iyer, Vadamal, North Arcot, Kowndinyam, Barani, 31/5.8', B.Com., Reliance Infocom, Vellore, Rs. 35,000/- per month, seeks graduate homely girl. P.R. Ganesan, No. 6, Sixth East Main Road, Gandhinagar, Vellore - 632 006. Ph : 0416-2246 045/Mob.93453 13210. Box No. 11607

◆ சென்னையில் பணி, சொந்த வீடு, 30 வயது பட்டதாரி சைவச் செட்டியார் பையனுக்கு புலால் உண்ணாத மணமகள் தேவை. ஜாதி தடையில்லை. வரதட்சணை வேண்டாம். ஜாதகம் அனுப்புக. பெட்டி எண்: 11608

◆ Iyer, Brahacharanam, Sankrithi, Bharani, 29/180, B.Sc., HDSC (MCA) fair, handsome Boy working in Chicago USA. seeks home loving, good-looking graduate girl. Subsect no bar. Reply with horoscope/Photo toBox No. 11609

◆ ஐயங்கார், தென்கலை, ஆத்ரேயம், அஸ்வதி, 08.01.1968, பி.எஸ்ஸி., காஸ்டிங் இன்டர், ராணிப்பேட்டை பிரபல ஜப்பான் நிறுவனத்தில் கணக்குத் துறை அதிகாரி. மாதச் சம்பளம் ரூபாய் 15000. நல்ல நிறம், உயரம் 157 செ.மீ., 5.3' நல்ல பட்டதாரிப் பெண் தேவை. செல்:98435-77780 98948-07981. பெட்டி எண் : 11610

◆ ஐயர், பிரஹசரணம், காஸ்யப கோத்திரம், சதயம், 1974, 171 செ.மீ., MCA (MNC sr. Software Engineer பெங்களூர்) வரனுக்கு, படித்த குடும்பப்பாங்கான, வேலையில் இல்லாத பெண் (from respectable family) தேவை. ஃபோன் :080-2565 8074) Native of Madurai. பெட்டி எண் : 11611

◆ **Kowsika Tamil Iyer, 45/165/MBA, respectable family, wealthy, young-looking, Madras based Businessman, legally divorced without encumbrance wants Brahmin bride fair, home-loving spinster/widow. Immediate dowryless simple marriage. Send horoscope, photo and full family details in the first reply itself. Box No. 11612**

◆ Iyer, Vadamal, Haritham, Bachelor brothers 1) Kettai, 44/5.5, M.A. B.Ed., B.S.N.L. employed Rs. 11,000/- p.m., seeks educated, good-looking employed/unemployed girl below 40 years, 2) Tiruvonam, 37/5.7', M.A., M.Phil., B.Ed., employed as Teacher, Rs. 4,000/- p.m. seeks educated employed girl below 32 years. Subsect no bar. Ph : 044-2472 1634, 9444002935. Box No. 11613

◆ வாணிய செட்டியார், பட்டமகரிஷி கோத்திரம், 5.8', உயரமுள்ள, 32 வயதாகும், இந்திய அரசு அசோசியேட் கம்பெனியில் நல்ல சம்பளம், P.F., Bonus, Incentive இவற்றுடன் பணிபுரியும் மணமகனுக்கு குடும்பப்பாங்கான பெண் தேவை. பெட்டி எண் : 11614

◆ Iyer, Brahacharanam, Haritha, Kettai, 31 years, 168 cms, B.Sc., (MBA) Boy doing Own Construction Business along with his Brother, Income more than Rs. 25,000/- per month. Seeks Iyer qualified bride. Subsect acceptable. Phone : 044-5218 1399 044-2835 0054. Box No. 11615

◆ Vadhula, Vadama Bachelor, Pushyam, 46, 5.8', smart, Post-graduate Dip. in Tata's Earning. Rs. 25,000 p.m. seeks fair graduate home-loving musically Inclined Spinster bride. Apply to Box No. 11616

◆ Iyer, Brahacharanam, Koundinyam, Maham, 26/6' M.Sc., Comp. Sc., Senior Technical Analyst in H.C.L. Rs. 25,000/- p.m. clean habits, seeks fair looking, educated homely girl. Ph : 04575/244429 Box No. 11617

◆ Iyer, Brahacharanam, Viswamithram, Chithirai, 31, B.Sc., Final, Diploma Electronics & Communications Engineering, Diploma Computer Hardware employed Chennai 8500, 165 cm, seeks fair graduate employed girl. Reply with horoscope to Box No. 11618

◆ Iyer, Vadama, Kousika Gothram, Sadhayam, 28, 6ft, B.S., (Engineering BITS Pilani) Engineer, Doing M.B.A. Rs. 15,000/- seeks domestically well trained graduate working girl. Vadama or Brahacharanam preferred. Ph : 044-22761514 Box No. 11619

◆ Wanted suitable Iyer bride for Iyer, Vadamal, Bharadwajam, Poosam, age 33, 5.5', P.G. employed in leading national publication, Chennai, drawing Rs. 1.80 lac p.a. subsect no bar. Contact Ph : 044-2474 3304. Box No. 11620

◆ Vadamal, Haritham, Revathi, 31, 172 cm, 15,000 Leading Pesticides Company at Hyderabad as Sales Manager seeks suitable bride. N. Narayanan, 14 A, Tiruppanar Street, East Tambaram, Chennai - 59. 9444329010.

◆ மாத்வ கன்னடம், பலகநாடு, ரோகிணி, உபமன்யவசிஷ்ட, 31/173/10,000 M.Com., DPCS தனியார் நிறுவனம், மணமகள் தேவை. ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். S. Saroja, B-5 Ruby Flats 15, 37th Street, Nanganallur, Chennai - 61. Phone : 044-5537 1658.

# திருமண மலர் - விளம்பரக் கட்டணம்

முதல் 30 வார்த்தைகளுக்கு ரூ. 400/- அதிகப்படியான வார்த்தை ஒவ்வொன்றுக்கும் ரூ. 15/- வண்ணத்தில் 'ஹைலைட்' செய்ய ரூ. 100/- கூடுதலாக அனுப்பவும்.

இந்த இதழில் பிரசுரமாகும் பெட்டி எண் விளம்பரதாரருக்கு பதில்கள் அனுப்ப கடைசி தேதி 10/9/2005. பதில்கள் அனுப்ப வேண்டிய முகவரி : பெட்டி எண் : ............ C/o மங்கையர் மலர், 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032.

◆ Iyer, Vadamal, Naithrupa Kashyapa, B.Com., 28, 5.11', Pooram, fair, employed in Private firm, Chennai seek suitable graduate girl. K. Jayaraman, "Sai Darshan", 15/62 Mohanapuri, IV Street, Adambakkam, Chennai - 88. Phone : 2253 3130.

◆ ஐயர், வடமாள், பாரத்வாஜம், திருவோணம்-3, ஜூன் '72, M.Sc., Maths V.fair, 5.6' சொந்த புக் ஷாப் சொந்த இடத்தில், சொந்த வீடு, மாத வருமானம் 15,000. A.V.S. Book Centre, 28, தேர் வீதி, சேலம் - 1. ஃபோன்: 2253630.

◆ ஐயர், பிரஹசரணம், ஆத்ரேயம், பூரம், 42, 5.7', ஹெட் கிளார்க், சதர்ன் ரயில்வே, பொன்மலை, தாரமிழந்தவர், மகன் வயது 13, கணவனை இழந்த பெண் அல்லது/ மற்றும் 40 வயதிற்குள்ளான பெண் தேவை. வேலைக்குச் செல்ல வேண்டாம். ஜே. சுவாமிநாதன், 45/8, டைமண்ட் பிளாக், விக்னேஸ்வரா கார்டன்ஸ், திருவானைக் காவல், திருச்சி - 620 005.

◆ Brahacharanam, Bharathwajam, Visagam-4, 32, 5.8., B.Sc., Computer Officer, 15,000/- Private Company, Own House seeks, home-loving girl send horoscope. Ph : 2472 6007. S. Nagarajan, 34, Umapathy St., West Mambalam, Chennai - 600 033.

◆ Iyer, Ashtasahasram, Bharadwajam, Uthrattadhi, 27, 10.3.1978, 169, M.C.A., SWE, employed in Reputed MNC, Hyderabad, 57,500/- p.m. seeks slim, fair, good-looking professionally qualified working girl. Contact : D. Ramani, 105D/108, Solaiappa Street, Kumbakonam. Ph : 0435-2433230

◆ Iyer, Brahacharanam, Bharadwaja, Aswathi, Dec. 75, 177, fair, MCA Officer, Nationalised Bank, Bangalore, 2.2 Lakhs p.a. seeks qualified employed bride. Subsects no bar. Contact : 044-24850402 send biodata and horoscope to C.S. Krishnan 20/40 Govindan Road, West Mambalam, Chennai - 600 033.

◆ Iyer, Brahacharanam, Athreya, Thiruvonam, Suddhajadhagam, 3.5.1975, 5.9', B.A. MNC, Chennai, 15,000+ Editor, Medical Transcription, seek fair, graduate employed girl. K.S. Venkataramani, 17, Shanmugam St., Mathiazhagan Nagar, Saligramam, Chennai - 600 093. 044-2376 2597.

◆ Iyer, Vathima, Haritha, Uthiradam, 29, 5.7' B.Com., Certificate in computing, working in Railways, seeks good-looking girl. Subsect no bar. 09444358116. N. Suresh Babu, No. 20/22 Bharathi Street, Chennai - 600 033.

◆ **Iyer, Vadamal, Bharadwaj, Pooram, Clean habits, well settled very fair, 41/175 Administrative Officer, Leading Textile Mill, Madurai seeks suitable bride. V. Seetharaman, 4/579, 'Sri Sri Sarada' Anna Nagar, Madurai - 625020. 0452-2524760. 044-2247 2778.**

◆ எம்.பி.ஏ. 35,000/- எம்.என்.சி.யில் வேலையிலுள்ள 27 வயது, கௌசிகம், சதயம், தென்கலை வரனுக்கு அதே பிரிவில் மணமகள் தேவை. எஸ். வரதன், plot நெ. 8, ராகவா நகர், அஸ்தினாபுரம், சென்னை - 44. ஃபோன்: 22235545.

◆ Suitable girl for Iyer, Vadama, Koundinya, Hastham, 5.11', 28 M.E., Engineer Brakes India Chennai, Rs. 2.3 lacs p.a. send Biodata Venkataraman, 31, Venkatesa Nagar Extension 1st Street, Virugambakkam, Chennai - 92.

◆ Vadamal, Kousigam, Visagam 4, Oct. 72, 165cms, B.Sc., Deputy Manager, Private Ltd., 25,000/- seeks graduate girl employed/unemployed. S. Rajaraman, 35 A, Venkateswara Street Extn. Ganapathipuram, Radha Nagar, Chromepet, Chennai - 600 044. Ph : 044-22650812.

◆ **ஐயர், அஷ்டசஹஸ்ரம், காஸ்யபம், பூரட்டாதி, 32/176 PGDCA, Banking Software Engineer, சென்னை 12,500/- குடும்பப் பாங்கான பெண் தேவை. ஆர். பராசக்தி, 1D, AKB ஆஷியானா, 13, அனுமார் கோயில் தெரு, ராதா நகர், குரோம்பேட்டை, சென்னை - 44. ஃபோன்: 044-22654819.**

◆ Iyer, Vadamal, Srivathsam, Uthiradam-3, 29/180cm, B.E. (Instrumentation), fair, Software Engineer, Chennai, 18,000/- p.m., seeks tall, good-looking bride. Contact : S.Venkataraman, 135, Chandran Nagar, Chromepet, Chennai - 44. Ph : 22417962.

◆ ஐயர், வடமான், பாரத்வாஜம், பூரட்டாதி, காமர்ஸ் கிராஜுவேட், **7.6.69, 164 cm, salary 50,000/ Manager Shelter's A Citi Bank, Associate,** சென்னை சிவந்த நிறம், அழகான தோற்றம், தெய்வபக்தியும், நல்ல நடத்தையும் உள்ளவருக்கு குடும்பப்பாங்கான வேலையில் உள்ள/இல்லாத பெண் தேவை. ஃபோன்.044-24990158. ஆர். விஸ்வநாதன், 10/12 6வது கிராஸ் தெரு, சி.ஐ.டி. காலனி, மைலாப்பூர், சென்னை - 600 004.

◆ Iyer, Brahacharanam, Bharadwajam, Avittam, 31.5.1975, 6.1', fair, Handsome, Graduate Dip. Computer Managing Large Agricultural Land Holdings Lalgudi, Trichy affluent seeks graduate Iyer girl above 5.4' prepared to settle down in Lalgudi. Subsect no bar. Contact : Subramanian, 15, East Mada Street, Lalgudi, Trichy. 0431-2541137

◆ Iyer, Madhwa + Vadama, Vadula, Thiruvadhirai, 24, 5.5', D.T.Ed., B.A., B.Ed., Teacher, Govt., Salary Rs. 8500/- very fair seeks homely girl, subsect & Job no bar. Subba Rao, 15, Easwaran Koil Agraharam, Manalurpet, Pin - 605 754. Tirukoilur Taluk. Phone : 04153/232280.

◆ வடமான், கௌசிகம், ரோகிணி, 16.2.78/5.8', **D.M.E., IndianNavy**யில் **Officer, Mumbai, Rs. 13,000/-** வரனுக்கு படித்த வேலைக்குச் செல்லும்/செல்லாத பெண் தேவை. ஜாதகம் அனுப்பவும். **R. Sundar, A3, Mahalakshmi Flats, Sivakami Street, Srinivasan Nagar, Perungalathur, Chennai - 600 063.**

◆ சௌராஷ்ட்ரா, சுத்த சைவம், ஸௌனக கோத்திரம், ரோகிணி நட்சத்திரம், வயது 31, உயரம் 165 செ.மீ., **B.Sc., IBM** கோவை ரூ. பதினைந்தாயிரம் தொடர்புக்கு பி.ஆர். பாலகிருஷ்ணன், 7/3 வெங்கடேஸ்வரா நகர் மூன்றாவது தெரு, கவுண்டம்பாளையம், கோவை - 30. போன் : 2453123.

◆ **Iyengar, Vadakalai, Vadulam, Hastham, 5.11', 1972, B.E. (MBA) Lecturer/HOD Reputed College, Own House, seeks pious, good-looking, employed girl from decent family. M.R. Srinivasan, 19A Karnakollai Agraharam, Kumbakonam - 612 001. Phone : 0435/2422389.**

◆ ஐயர், வடமான், நைத்ருப காஸ்யப கோத்திரம், 34, சொந்தத் தொழில், ரூ. 15,000/- கும்பம், அவிட்டம் 4ம்பாதம், 7ல் இராகு, 8ல் செவ்வாய், உட்பிரிவு சம்மதம். மணப்பெண் தேவை. வி. முரளீதரன், 49/4எ, இராம் நகர், குமாரசாமிப்பட்டி, சேலம் - 636 007. ஃபோன்: 9360830159.

◆ வடமான், கௌசிகம், ஹஸ்தம்-4, 1975, எம்.காம்., எம்.சி.ஏ., 30,000, 170, மணப்பெண் தேவை. பாலசுப்பிரமணியன், **Plot 80,** முதல் பிரதான சாலை, திலகர் அவென்யூ, பாலையா கார்டன், மடிப்பாக்கம், சென்னை - 91. 22425872.

◆ மலையாளி நாயர், 31/170 செ.மீ., யு.ஏ.ஈ.யில் வெல்டர், மாத வருமானம் 20,000 பெறும் மணமகனுக்கு இதே இனத்தைச் சேர்ந்த அரசு பணியில் (நர்சு, ஆசிரியை, மருந்தாளர், **UDC**) உள்ள விதவை மணமகள் தேவை. **P.** தேவி 246 7வது குறுக்குத் தெரு, குளித்தலை - 639 104, கரூர். ஃபோன்: 9894608083.

◆ ஐயர், வடமான், கௌசிகம், சித்திரை - 2, 34, பி.காம்., 5.8 சிவந்த நிறம், 8500, தனியார், பணிபுரியும் வரனுக்கு, 10, +2 (அ) பட்டதாரி படித்த குடும்பப்பாங்கான மணமகள் தேவை. தொடர்பு கொள்ளவும். **M.S. Mani, Flat No. 309, Vijayashree Towers, Venkateshwara Nagar, Sainathapuram, Hyderabad - 500 062. Tel No. 040-27223444.**

◆ Iyyar, Brahacharanam, Athreya Kothram, Visakam 4th padam, Virchiga Rasi, 29, 5.10', B.Sc., M.C.A. Sr. Software Engineer, B'lore, Seek suitable girl. B. Rathinam, 50, Silambani North St., Devakottai. Ph : 954561-270180

◆ Iyer, Brahacharanam, Koundinyam, Karthika, 35, 175cm, B.Com., Doing PG Diploma in HRM fair, employed T.V.S. & Sons Ltd., Kollam, Own House in Trivandrum. Contact : S. Viswanatha Iyer, T.C. 20/2456, Nagamayya Street, Karamana, Trivandrum - 695 002. Phone : 0471-2342236.

◆ Iyer, Vadamal, Bharatwaja, Krithigai, 31/179 cm, MCA, MBA, M.Phil., 15,000 Britannia Project Coordinator, Chennai seeks suitable girl. Contact : K.S. Vaidyanathan, 4/290 Main Road, NGGO Colony, Coimbatore - 22. Ph : (0422) 2644236.

◆ Iyer, Vadama, Bharatwajam, Uthiradam-4, 36, ITI, employed in Hindustan Power plus Ltd., Hosur, Rs. 16,000/- p.m., Boy seeks suitable bride. No demands. K.G. Radhakrishnan, Old No. 47/New No. 32, Halls Road, Egmore, Chennai - 600 008. Ph : 044-28192428.

◆ Only son (no daughters), 28/5.6', B.Com., MCA, employed MNC Bangalore, 5 lacs pa, Hindu Tamil Brahmin cultured (Mother Iyer, Father Protestant Christian) seeks Brahmin Graduate girl, employed/employable from decent family. No other expectations. Boy's horoscope (Tiruvadirai) available. Girl's Horoscope not a must. Contact : J. Anbiah, Flat 28, Dhanvanti, Perubaug, Goregaon East, Mumbai - 400 063. Ph : 022-26860991.

◆ Iyer, Vadamal, Srivatsa Gothram, Poosam, 27/173, B.E. North settled, presently working in U.S. with decent salary, seeks computer based Graduate/Post-graduate good-looking girl with good family background. Subsect no bar. Contact : 0788-2241419 Address : Raman Narain, A-15, Surya Vihar, Junwani Road, Bhilai (Chhatisgarh) - 490 020

◆ Iyer, Vadama, Kausigam, Ayilyam, 1973, 5.9, M.Com., 9000/- State Govt/Health Dept., Raghu in second, Two Own House at Kalawai. seeks Govt/Pvt/well educated girl/only son. K.C.Vidyavathi, 20, Makkan St., Kalavai - 632 506. Tel(04173) 242 410 cell: 094434-47320.

◆ Iyer, Vadama, Bharadwajam, Pooram, 29, 180, B.E., 25,000 employed Chennai seeks fair, good-looking, qualified girl employed Chennai. P.S. Ramany, SEA 3, Fernland Apartments, 103, Errikarai Road, Perungudi, Chennai - 600 096 Ph : 044-5541 4690, 9840845393

◆ Thengalai Iyengar, Srivatsam, Revathi, 26, 170cm, DCE, L&T Mumbai, Rs. 14,000 p.m. seeks good-looking graduate girl. Contact : S. Renghasamy, 9/5, Perumal West Mada St., Palayamkottai, Tirunelveli. Mob : 9245402515.

**◆ Tamil Iyer, Brahacharanam, Bharadwajam, Maham, 26, M.C.A. Executive, Bajaj Chennai, very fair, slim, good-looking seeks fair, slim, good-looking bride from good family. Send BHP S. Lakshmanan, G-3, Kannikasaral Apartment, Melur Road, Melavasal, Srirangam, Tiruchirappalli - 620 006. Ph : 0431-2434638, 09342226759.**

◆ Thengalai Iyengar, Athreya, Thiruvonam, 35, Senior Lecturer, Central University, Central Govt., Tirupati, 25,000/- seeks fair graduate girl. Send Horoscope, bio-data to K.Thiruvengadam, 7-6-231, Mitta Street, Tirupati - 517 501. Phone : 0877-2225289.

◆ ஐயர், வயது, 31, 5.7', பிரஹசரணம், மௌத்கல்யம், ரோஹிணி-1, டி.எம்.ஈ. துபாயில் வேலை வருமானம் ரூ. 20,000/- வேலைக்குச் செல்லும் பெண் தேவை. எளிமையான திருமணம். திருமதி வித்யா, 28/66, மூன்றாவது தெரு, காமராஜ் நகர், எண்ணூர், சென்னை - 600 057. ஃபோன்' 25751292

◆ வடமாள், வடாற்காடு, கௌசிகம், கேட்டை-3, வயது 32, 160செ.மீ., 10,000 அழகான தோற்றமுள்ள பட்டதாரி பையனுக்கு அழகான பட்டதாரி மணப்பெண் தேவை. ஃபோன் : 26507776 S. Krishnamurthy, No. 1, Subash St., Rajaji Nagar, Villivakkam, Chennai - 49.

◆ தமிழ் ஐயர், பிரஹசரணம், வாதுலம், உத்திரட்டாதி, 35, 165, டி.எம்.ஈ., தனியார், சென்னை, 7000, System Administrator, தகப்பனார் இல்லை, தாயார் அரசுப் பணி, சொந்த வீடு, தகுந்த பெண் தேவை. P. Padmanabhan, 217, Ayyanar Koil Street, B.B.Kulam, Madurai - 2.

◆ Vadamal, Haritham, Punarvasu, 33/180, M.Com., Self employed 4 Lacks p.a. clean habits & Characters, Own Houses & Properties seeks graduate unemployed home loving girl. Phone : 2430889. M. Narayanan, 9, Ayekulam Road, Kumbakonam - 612 001.

◆ ஐயர், வடமாள், குத்ஸ கோத்திரம், ரோஹிணி, 31 வயது, எம்.எஸ்ஸி., எம்.பி.ஏ., வேலையில் உள்ள பையனுக்கு B.E., M.C.A., MBA, M.Phil., அல்லது அரசு வேலை பார்க்கும் பெண் தேவை. ஜாதகம் அனுப்பவும். எஸ்.ஈ. விஸ்வநாதன், ஆசிரியர், 19, கருவூலக் காலனி, நந்தவனப்பட்டி, திண்டுக்கல். ஃபோன் : 0451/2428132.

**◆ Telugu Brahmin, Konaseema, Vasishta, Uthiradam - 4, 34, 176 cm, B.E. working in MNC Software, Bangalore seeks qualified Tamil Nadu Based, Telugu Brahmin. Ph:044-22335657/9444007715. C. Rajasekar, Plot No. 25, Door No. 2, 2nd Main Road, Ram Nagar, Nanganallur, Chennai - 600 061.**

◆ தென்கலை ஐயங்கார், பாரத்வாஜம் 39/6', மிருகசீரிஷம்-2, பி.காம்., சொந்த பிரிண்டிங் பிஸினஸ், 15,000/- தில்லியில் நல்ல மதிப்புள்ள சொந்த Flat உள்ள பையனுக்கு குடும்பப்பாங்கான பெண் தேவை. எதிர்பார்ப்புகள் இல்லை. வசதியற்றவர்களும் விண்ணப்பிக்கலாம். Parthasarathy, 323, Nirman Apartment, Mayur Vihar, Phase I Extn, Delhi - 110 091. Ph : 2271 4995.

◆ Thenkalai Iyengar, Bharatwajam, Visagam-III, 36/5'.11", M.A., employed Railway Board Permanent 15,000/- seek graduate girl, employed preferable. No Demand. Parthasarathy, 323, Nirman Apartments, Mayur Vihar Ph I Extn., Delhi - 110 091. Ph : 2271 4995.

◆ Palakkad Iyer, Vadamal, Bharadwajam, Visakam, 41 years, 5.8', Senior Position in a MNC Bank, Bangalore. Seeks suitably qualified bride. Contact Smt. Mala (080-2522 3509) or Krishnan 98412 43815 No. 23-Pandalai Road, Chennai - 600 021.

◆ Iyer, Koundinyam, Brahacharanam, Pooradam-4, 28.3.1973, 179, Japan Language Specialist MNC Bangalore Rs. 36,000/- p.m. MA History Japan III Level, MBA Studying seeks suitable bride. D. Pichai Venkataraman, 68, Ist Floor, 6th Cross, New Byappanahalli, Bangalore - 38. Ph (080) 2554 4183.

◆ ஐயர், சுக்லயேஜஸ் (வடமாள்) வயது 32, ஸ்ரீவத்ஸம், அசுவதி, 170 செ.மீ., பி.எஸ்ஸி., (கம்ப்யூட்டர்), P.G.D.M. படித்து நல்ல சம்பளத்

தில் சீனியர் சாஃப்டுவேர் இன்ஜினியராக (MNC பெங்களூரில்) பணிபுரியும் வரனுக்கு, கக்லயேஜஸ், வடமாள், பிருஹத்சரணம் பிரிவைச் சேர்ந்த, 28 வயதுக்குட்பட்ட நன்கு படித்து, கர்நாடக இசையில் விருப்பமுள்ள குடும்பப்பாங்கான (சாஃப்டுவேர் இன்ஜினியர் அல்லாத) மணமகள் தேவை. ஜாதகம் மற்றும் விவரங்கள் அனுப்ப வேண்டிய முகவரி : ஆர். சூரியநாராயணன், ஏ 81, குறிச்சி அவுசிங் யூனிட் பேஸ் II கோவை - 641 021. ஃபோன்: 2674 179.

# மணமகன் தேவை

◆ Madhwa Kannada, Kasyapa, Thiruvadirai -2, Sep. 73, 151 cms, Fair, B.Sc., PGDCA, Unemployed girl seeks suitable alliance. Box No. 29096

◆ ஐயர், பிரஹசரணம், சங்கிருதி, விசாகம்-4, 12.7.81, 5.3', Master of Corporate Secretaryship தெய்வபக்தி மிகுந்த பெண்ணிற்கு, தகுந்த நல்ல வேலையில் உள்ள போஸ்ட்கிராஜுவேட் பட்டதாரி, 5 வயது வித்தியாசத்தில் தேவை. ஜாதகத்துடனும், குடும்பம் பற்றிய தகவல்களுடனும் அணுகவும். பெட்டி எண் : 29097

◆ Iyer, Vadamal, Kousikam, Swathi 2nd padam, 24 years, 151 cms, BE working in MNC, Chennai, seeks suitable bridegroom. Call : 24482718 or contact ramanipithan@hotmail.com Box No. 29099

◆ ஐயர், வாத்திமா, ஹரித கோத்திரம், ரோஹிணி 23, எம்.எஸ்ஸி., 160 செ.மீ., வேலையிலுள்ள பெண்ணுக்கு, மாதம் ரூ. 30,000/- மேல் வருமானமுள்ள Professionally qualified வரன் தேவை. பெட்டி எண் : 29100

◆ **Thengalai Iyengar, Unmarried bride, September 1965 born, Beautiful, well qualified, Master in Finance, well trained in Carnatic Music, US Citizen, well settled and from respectable family. Spiritually Inclined seeks unmarried well qualified, good looking, well settled in USA. 41 to 44 years old or Equal age, Brahmin bridegroom with similar interests and background. Send detailed response to Box No. 29101**

◆ Iyer, Vadamal, Srivatsam, Makam-3, Mars in 7th place, very fair, 26/165/B.Com., well employed seeks qualified groom. Phone : 26580880 Box No. 29102

◆ Telugu Velanadu Brahmin, Chalasya, Revathi, 25 years/157 cms, very fair, M.A. working, seeks professionally qualified, well employed groom - India/Abroad, Subsect no bar. Send horoscope - Bio-data. Box No. 29103

◆ **Iyer, Vadamal, Bharadwaja, Rohini, 26, 168 cms, fair, M.D.S. (Orthodontia) (Mumbai Based) seeks alliance from postgraduate doctors, age 28-30, with clean habits and good family background. Subsect acceptable. Tel : 09324110118 email: surya1508@yahoo.co.in Box No. 29104**

◆ தென்கலை ஐயங்கார், வாதுலம், சுவாதி, 30, பி.ஏ., 5 அடி வில்லங்கமில்லாத குறுகிய காலத்திலேயே சட்டப்படி விவாகரத்து பெற்ற பெண்ணிற்கு தகுந்த ஐயங்கார் மணமகன் தேவை. பெட்டி எண் : 29105

◆ 8 வயது பையன் உள்ள சட்டப்படி விவாகரத்து பெற்ற உத்தியோகத்தில் உள்ள, சொந்த வீடு உள்ள 36 வயது ஆத்ரேயா, கன்னட மாத்வ பெண்மணிக்கு, முற்போக்கு எண்ணங்கள் கொண்ட தீய பழக்கங்கள் இல்லாத பிராமண வாழ்க்கைத் துணை தேவை. விவாகரத்தானவர்களும் மனைவியை இழந்தவர்களும் விண்ணப்பிக்கலாம். பெட்டி எண் : 29106

◆ **Iyer, Vadama, Bharadwajam, Kettai, 29/5.4', fair, Medium Build, M.Sc., MS (Biochemistry, working in Boston University, Proficient in Carnatic Music, seeks US/India employed groom. Subsects acceptable. Girl expected in September. N. Kumaraswamy, Ph: 22331296 email: nakumaparna@rediffmail.com. Tamil Matrimony.com. Regn No. M. 139927 Box No. 29107**

◆ Parents of Iyer girl Brahacharanam, Gowthama, Sadhayam, 24/167 B.E. (ECE) seek professionally qualified well employed Vadamal Brahacharanam grooms. BoxNo. 29108

◆ தெலுங்கு ஐயர், கர்ணகம்மலு, ஆயில்யம் 2, கௌசிக, 23.9.73, 5ft, M.Com., ICWA, Inter, Asst. Manager, UTI (Navi Mumbai) (willing to re-locate to any place after marriage) வரனுக்கு நல்ல படித்த உத்தியோகத்திலுள்ள மணமகன் தேவை. உட்பிரிவு சம்மதம். பெட்டி எண் : 29109

◆ வடகலை, வாதூலம், உத்திரம், சட்டப்படி விவாகரத்தானவர், குழந்தை இல்லை, 34 வயது, B.Sc., Chem, Computer in NIIT பெண்ணுக்கு நல்ல வேலையில் உள்ள, குணமுள்ள 40 வயதுக்குள் வெளிநாடு (அ) இந்தியாவிலுள்ள any Brahmin மணமகன் தேவை. புகைப்படம், ஜாதகம் அனுப்பி வைக்கவும். பெட்டி எண் : 29110

◆ Iyer, Kousika, Vadamal, Visakam-3, 24 years 5.2', B.Com., MFC working in ICICI Bank at Dindigul Rs. 7500/- p.m. seeks grooms upto 30 PG well qualified employed from decent family. Phone : 0452/2482525 Box No. 29111

**செப்டெம்பர் மாத இதழுக்கான திருமண மலர் விளம்பரங்கள் எமது அலுவலகத்திற்கு வந்து சேர வேண்டிய கடைசி தேதி : 5.08.2005**

◆ **Iyer, Brahacharanam, Moudgalyam, Moolam, 31/168 cm, B.A. 3 years, Diploma Interior designing, working IBM Gurgaon. Legal Divorcee, without issue. seeks well employed boy. Divorcee or unmarried. Caste no bar. Box No. 29112**

◆ குருக்கள் சிவாச்சார்யர், கௌசிகம், விசாகம்-2, 29/155 cm, B.Com., Steno Both Higher, அரசுப் பணி, சென்னை ரூ. 10,000 மாத வருமானம், சிகப்பான பெண்ணிற்கு நன்கு படித்து பணியில் உள்ள இதே இனத்தைச் சேர்ந்த மணமகன் தேவை. ஃபோன். 044-25500284 பெட்டி எண் : 29113

◆ துளுவ வேளாளர், அகமுடையார், தலச்சன் பெண் பரணி-3, செவ்வாய் 8ல் ஆட்சி (குருபார்வை) 27/5.3", எம்.எஸ்.சி. GNIIT, சென்னையில் ITES கம்பெனியில் பணிபுரியும் பெண்ணிற்கு Professionally qualified வரன் தேவை. ஃபோன்: 2435 4265/ 9841345383 email Subathr05@yahoo.com Box No. 29114

◆ Brahacharanam, Srivatsam, Bharani-4th, 5ft, Wheatish, Mars in 7th place Neecham, B.A. (eco), DCS, Not willing to do job-need professionally qualified. C.A. with Regular job can apply. Contact : 04179-221383 Box No. 29116

◆ Alliance from Iyer/Iyengar groom below 31 for Aathreya, Chithirai, Kanya, 1.4.1980, 160cms, slim, fair, good-looking girl, B.Com., (Delhi) Multimedia Graphics, team leader in BPO Bangalore. Mother (Iyer), Father (Iyengar) separated by mutual consent for 20 years. Son (married) and daughter are with mother. Contact Ph : 080-23545880. Box No. 29117

◆ **Iyer, Vadama, Srivathsa, Moolam-2, March 1979/167cm, Suddha Jathagam, Post-graduate and Computer Qualified good-looking girl seeks Chennai based well qualified and decently employed boy born 1974 onwards. Box No. 29118**

◆ Vadagalai Iyengar, Kousika Kothram, Anusham-1, B.Sc., (MBA), Ht. 5.3", Employed in Private Concern Rs. 10,000/- p.m., 24 years fair, seeks suitable groom. Contact : Sree Devanathan, 5566 5632, 98412 50415. Box No. 29119

◆ ஐயர், பிரஹசரணம், கௌண்டின்யம், அனுஷம், 25/158 செ.மீ., B.E. (ECE) படித்த பெண்ணுக்கு, நல்ல குடும்பத்தைச் சேர்ந்த, நல்ல வேலையில் உள்ள, 30 வயதுக்கு உட்பட்ட மணமகன் தேவை. ஃபோன்: 04287-225349. ஆர். ஆத்மசரன், 7, கோனேரிப்பட்டி விரிவு எண் 1, இராசிபுரம் - 637 408.

◆ பத்ம வெலம நாயுடு, சதயம், 5.10.76, 165 செ.மீ., எம்.சி.ஏ. படித்த பெண்ணிற்கு நன்கு படித்து பணியிலுள்ள அதே இனம் (அ) உட்பிரிவு சேர்ந்த மணமகன் தேவை. குமாரி, 39/82, 4வது தெரு, அழகிரி நகர், வடபழனி, சென்னை - 26. ஃபோன்:2488 1466.

◆ ஐயர், பிரஹசரணம், கௌசிகம், ஹஸ்தம், 24, 5.1", பி.ஈ. படித்த பெண்ணிற்கு நல்ல பணியிலுள்ள பி.ஈ./எம்.ஈ., எம்.சி.ஏ. மணமகன் தேவை. ஏ.ஆர். கிருஷ்ணன், 31/19B சேரன் தெரு, சின்ன திருப்பதி, சேலம் - 8. ஃபோன்: 2414 276.

◆ Tirunelveli, Saiva Pillai, Graduate 27 years, 5.4", Krithigai-I, Mesha Lagnam & Rasi good-looking fair girl employed in Computer Organisation New Delhi seeks well qualified employed groom from same caste. Contact : Venkatakrishnan, 105-H, Sector - IV, BKS Marg. Diz. Area. New Delhi - 110 001. 011/2334 7501

◆ Suitable alliances are invited from non-koundaniya Gotra, well-educated/settled/Engineer/MBA in MNC or Doctor from Madhwa Kannada/Smartha or Tamil Iyer Brahmin boys preferably employed in Mumbai/Bangalore, in the age group of 25-28 years for a beautiful, educated (M.A. Psychology) girl of Madhwa Brahmin (Rishaba Rasi - Star Rohini) Age : 22 years, Height : 5.8" belonging to a respectable family. Please respond with BHP directly to the father of the girl Shri Venkatesh A. Narayanan, C-15, Rohini, Ganesh Society, Maharashtra Seva Sangh Marg, Near : Apna Bazar, Mulund (W), Mumbai - 400 080. Phone : 022-25625622/25906265.

◆ குருக்கள், பாரத்வாஜம், பூரட்டாதி, எம்.பி.ஏ., 22, 165 செ.மீ., ரூ. 8000/- தனியார் நிறுவனத்தில் பணிபுரியும் பெண்ணிற்கு அதே இனத்தைச் சேர்ந்த நல்ல வேலையில் உள்ள வரன் தேவை. என். சந்திரசேகரன், பிளாட் எண் 7, மாதங்கி அபார்ட்மெண்ட்ஸ், 28/72 சடையப்பன் தெரு, சைதாப்பேட்டை, சென்னை - 600 015

◆ ஐயர், பிரஹசரணம், கௌண்டன்யம், மகம், வயது 26, எம்.ஃபில்., பயோ கெமிஸ்ட்ரி பெண்ணிற்கு அரசு தனியார் பணியிலுள்ள தகுந்த வரன் தேவை. உட்பிரிவு சம்மதம். ஜாதகம் அனுப்பவும். எஸ்.என். அருணாச்சலம், உதவி ஆட்சியர், 106/102 அய்யங்குள அக்ரஹாரம், திருவண்ணாமலை. 04175/ 225708 செல்:9443890072.

# திருமகளே வருக வருக!





ரேவதி சங்கரன்

**திருமகளே! திருப்பாற்கடல் ஊடு அன்று தேவர்தொழ வருமகளே! உலகு எல்லாமும் என்றென்றும் வாழவைக்கும் ஒரு மகளே! நெடுமால் உரத்தே உற்று வரம்பெரிது தருமகளே! தமியேன் தலைமீது நின் தாள் வையே!**

சாதி, மதம், இனம் இவற்றையெல்லாம் கடந்து எல்லாம்வல்ல பரம்பொருள் எல்லோருக்கும் செல்வச் செழிப்பினை வாரி வழங்க வாழ்த்துகிறேன்.

செல்வம் என நான் குறிப்பிடுவது நல்ல மன அமைதி, உடல்நலம், பொருள் வளம் - நிலவளம், நீர்வளம், நல்ல செழிப்பு இவைகளே! தென்நாட்டில் செல்வத்தினை வழங்கும் தெய்வமாக இலக்குமியைக் குறிப்பிடுவர்.

அந்தத் திருமகளை ஒவ்வொரு இல்லத்திற்கும் 'வளம்பொழிய வருக! வருக!' என அழைப்போம் அருள்பெறுவோம்.

# ஆடிப்பெருக்கு



ஆற்றங்கரையில்,
அக்கம்பக்கத்தார்
தோழியருடன்
ஆடிப்பாடி மகிழ்ந்து
காவிரி நதியாகிய
பெண்ணுக்குக்
காதோலை
கருகமணி
தாம்பூலம் ஆகிய
வற்றோடு தீபம் ஏற்றி மிதக்க
விட்ட காலம் இனி வருவது எப்போவோ? ம்... ஆடி
மாதம் 18-ம் நாளைக் கொண்டாடுவதில் குறைவு வைக்க
வேண்டாம்.

நான்குவகை சாதங்கள், மோர்க்குழம்பு, வடகம், அப்பளம், வறுவல் ஆகியவை பொரித்து காவேரி அம்மனுக்கு (வீட்டிலேயே) படைத்து விட்டுச் சாப்பிடலாம்.

சர்க்கரை அல்லது வெல்லச் சாதம், புளியஞ்சாதம், தேங்காய் அல்லது எலுமிச்சை சாதம், தயிர் சாதம்.

**எளிய வழிகள்**



நேரம் கிடைக்கும் போது (வேலைக்குப் போகும் பெண்களுக்கு) - எலுமிச்சை சாதத்துக்குத் தாளித்து அதில் வேர்க்கடலையைப் போட்டு ஒரு சிறு டப்பாவில் ஃப்ரிஜ்ஜில் வைத்து விடவும். சாதம் கலக்கும் போது எலுமிச்சம் பழம் பிழிந்து கொள்ளலாம்.





தேங்காய்ச் சாதத்திற்கு தேங்காயையும் முன்னதாகவே வறுத்து 'ஃப்ரிஜ்'ஜில் வைத்து விட்டால் சாதம் கலப்பது எளிது.

புளிக்காய்ச்சல் 'ஃப்ரிஜ்'ஜில் ஒரு மாதம் வரை கெடாமல் இருக்கும்.

வெல்லச் சாதம் மட்டும் அன்று செய்து கொள்ளலாம்.

வெல்லத்தைத் தண்ணீரில் கரைத்து வடிகட்டிப் பாகாகக் காய்ச்சிக் கெட்டிக் கம்பிப்பாகு பதத்தில் சாதத்தைப் போட்டுக் கிளறவும். நெய்யில் முந்திரிப் பருப்பு வறுத்துப் போட்டு ஏலப்பொடி சேர்த்தால் வெல்லச் சாதம் ரெடி!

முன்னதாகவே செய்து வைத்தால் நிவேதனம் செய்து படைக்கலாமா என்று திருமதி பத்மா கேட்டிருக்கிறார்கள். அட! எத்தனை மாற்றங்களை நாமே விரும்பி ஏற்கிறோம்- பிறகு இதில் என்ன தயக்கம்? பண்டிகையைக் கொண்டாடுவதுதான் முக்கியம்... இல்லாவிட்டால் அடுத்த தலைமுறை மறந்து விடும்.



# வரம் தரும் வரலக்ஷ்மி விரதம்

ஆகஸ்ட் 19



அஷ்ட ஐஸ்வர்யங்களையும் அள்ளித் தந்து நமது துயரத்தை நீக்கி அதிருஷ்டத்தைத் தரும் அதி உன்னதமான விரதம் வரலக்ஷ்மி விரதம்.

கன்னிப் பெண்கள் முதல் கல்யாணமான சுமங்கலிப் பெண்கள் வரை இந்த விரதத்தை மேற்கொண்டு வழிபட்டால் கேட்ட வரத்தை வரலக்ஷ்மி தருவாள் என்பது உறுதி.



ஆவணி மாதம் பௌர்ணமிக்கு முன்பு வரும் வெள்ளிக் கிழமையில் கொண்டாடப்படும் இந்த விரதத்தினால் குடும்பம் மேன்மையடையும். எல்லோரும் நல்வாழ்வு வாழ்வர். செல்வம் செழிக்கும். சிந்தனை தெளிவுறும். எங்கும் மகிழ்ச்சி நிலவும்.

# புதிதாக நோன்பு எடுத்துக் கொள்ளலாமா?!



**பா**ண்டிச்சேரியிலிருந்து சாந்தி என்ற வாசகி தனக்கு யாருமே பெரியவர்கள் குடும்பத்தில் இல்லை என்றும், வரலக்ஷ்மி விரதம் எடுத்துச் செய்ய ஆசையாக இருக்கிறது என்றும், (வடமொழி சுலோகம் தெரியாது என்று சொல்லி விட்டுத் தயங்கியபடியே) எளிய செய்முறை விளக்கம் சொல்லித் தருமாறு கேட்டார். தொலைபேசியில் விடுக்கப்பட்ட அந்த வேண்டுகோளை நிறைவேற்றுவது மங்கையர் மலரின் கடமை அல்லவா?

## வரமருள்வாய் வரலக்ஷ்மி

**வ**ரலட்சுமி முகமோ அல்லது படமோ வாங்கி வீட்டின் அருகிலுள்ள கோவிலில் அன்னை காலடியில் வைத்து விட்டு வீட்டுக்கு எடுத்து வந்து பூஜையறையில் வைக்கலாம்.

ஆவணி மாதம் பௌர்ணமிக்கு முன்வரும் வெள்ளிக்கிழமையில் இந்த விரதம் கொண்டாடப்படுகிறது. முதல் நாளே வீட்டை மெழுகிக் கோலமிட்டு வைக்கலாம். பூஜை அறையில் அல்லது நடு வீட்டில மாக்கோலம் இட்டு, அதன் மீது ஒரு பலகையை வைக்கவும். பலகை மீதும் கோலம் போட வேண்டும். அந்தப் பலகையில் நெல் பரப்பி அதன் மீது வாழை இலையை வடக்குப் பக்கம் நுனி இருக்கும்படி போட்டு அதன் மீது பச்சரிசியைப் பரப்பவும். ஒரு பித்தளை அல்லது செப்புச் செம்பை வைத்து அதில் முக்காலுக்கும் மேலாக பச்சரிசியை நிரப்பி அதில் வெற்றிலை ஐந்து, பாக்கு இரண்டு, ஐந்து மஞ்சள்



கிழங்கு, ஒரு ரூபாய் நாணயம், காதோலை, கருகமணி, கருவளை (இது எல்லாக் கோவில் கடைகளிலும் கிடைக்கும்), ஒரு எலுமிச்சம் பழம் இவைகளை இட்டு மாவிலைக் கொத்தை வைத்து அதன் மீது (அழுகல் இல்லாத) நல்ல தேங்காயை மஞ்சள் தடவி, சுற்றி ஐந்து இடங்களில் சந்தனம், குங்குமம் இட்டுப் பூச்சுற்றி அலங்கரித்து வைக்கவும். இதுதான் கலசம்.

வாங்கி வைத்துள்ள படத்தை அல்லது முகத்தைக் கலசத்தின் மேலே சார்த்தி வைத்து (கறுப்பு கலக்காத) நல்ல மங்களகரமான நிறத்தில் ஒரு புது ரவிக்கைத் துணியை மடித்து மாலை போல் அலங்கரிக்க வேண்டும்.



படத்துக்கு அல்லது முகத்துக்கு சந்தனம், குங்குமப் பொட்டு வைக்கவும். (சிலர் கலசம் வைக்க மண்டபம், வரலட்சுமிக்கு ஜடை அலங்காரமும் செய்வர். இதெல்லாம் அவரவர் சௌகரியத்துக்கு ஏற்றபடி செய்யலாம்). இப்போது கலசமும், வரலக்ஷ்மி அம்மனும் தயார்.

பூஜை செய்வதற்கு ஒற்றைப் படை எண்ணில் நோன்புக் கயிறு (நாட்டு மருந்துக் கடைகளில் கிடைக்கும்) வாங்கி வைக்கலாம்.

# — பூஜை செய்வது



## பூஜை செய்யத் தேவையான பொருள்கள் :

தீபங்கள் - 2, ஒரு சிறிய தட்டில் மஞ்சளினால் பிடிக்கப்பட்ட பிள்ளையார் அல்லது சிறு பிள்ளையார் உருவத்தை வைத்து அதற்கு சந்தனம், குங்குமம் இட்டு மலர் வைத்து அலங்காரம் செய்ய வேண்டும்.

பிள்ளையாருக்குப் படைக்க - வெற்றிலை, பாக்கு, பழம்.

வரலக்ஷ்மிக்குப் படைக்க - வெற்றிலை, பாக்கு, பழங்கள், பாயசம், வடை, தேங்காய் இவைகளைத் தயாராக வைத்துக்



# எப்படி?



கொள்ள வேண்டும். வெள்ளிக்கிழமை என்பதனால் (10.30 முதல் 12 மணி வரை ராகு காலம்) 9 மணிக்கே பூஜை செய்து விடலாம்.

பூஜை செய்பவர் கை கால்களைக் கழுவி விட்டு, கலசத்துக்கு முன்னால் இடப்புறமாக ஒரு பலகையை இட்டு அமர வேண்டும். முதலில் வணங்கி, மனதார 'குற்றம் குறைகள் இருந்தால் மன்னிக்கவும்' என்று மனதில் வேண்டியபடி பூஜையைத் தொடங்கலாம்.

முதலில் பிள்ளையாரை மலர்களால் அலங்கரித்துக் கையைக் கூப்பிக் கொண்டு கைநிறைய மலர்களை எடுத்துத் தெரிந்த தமிழ்ப் பாடலைப் பாடலாம். தெரியாவிட்டாலும் பரவாயில்லை. ஔவையின் பாடலைப் பாடலாம் :

பாலும் தெளிதேனும் பாகும் பருப்பும் இவை
நாலும் கலந்துனக்கு நான்தருவேன் - கோலம் செய்
துங்கக்கரிமுகத்துத் தூமணியே நீ எனக்குச்
சங்கத்தமிழ் மூன்றும் தா.

(அல்லது)

ஐந்து கரத்தனை ஆனை முகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்தனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்து அடிபோற்றுகின்றேனே!



இதைச் சொல்லிவிட்டு வெற்றிலை, பாக்கு, பழம் வைத்துச் சிறிது நீரைக் கையில் எடுத்து இவற்றைச் சுற்றி அந்த நீரை விடவும். இது நிவேதனம் செய்வது எனப்படும்.

இதன் பிறகு வரலக்ஷ்மி பூஜையைச் செய்யத் தொடங்கலாம். மலர்களாலும் மஞ்சள் கலந்த அரிசியாலும் பூஜை செய்யலாம். இந்த மங்கையர் மலர் புத்தகத்தில் தரப்பட்டிருக்கும் தமிழ்த் துதிகளைப் படித்தாலே போதும்.



இறைவனை வணங்கிட மொழி தேவையில்லை. நல்ல மனமும் சரியான குறிக்கோளும் இருந்தாலே வெற்றி நிச்சயம்.

துதிகளைப் படித்தபின் தேங்காயை உடைத்து வைத்துப் பழங்கள், வெற்றிலை, பாக்கு, பாயசம், வடை இவைகளைப் படைக்கவும். அதனைத் தொடர்ந்து கற்பூரம் ஏற்றி கலசத்திற்கும்,



வரலக்ஷ்மி அம்மனுக்கும் காட்டும் போது 'எல்லா நன்மைகளும், செல்வங்களும் நிறைவாகப் பொழிய வேண்டும் அம்மா' என்று வேண்டி வணங்கவும். வணங்கிய பிறகு அம்மனுக்கு அருகில் வைத்துள்ள நோன்புச் சரடைக் கிழக்கு நோக்கி அமர்ந்து பெண்கள் வலது கை மணிக்கட்டில் கட்டிக் கொண்டு அதன் மீது மஞ்சள், குங்குமம் வைக்க வேண்டும்.



பூஜை முடிந்த மறுநாள் காலையில் அம்மனுக்குக் கொஞ்சம் பால் பழம் வைத்துப் படைத்து விட்டு, பூஜையில் வைத்த அரிசியை அரிசிப் பானையில் "வளர்க பெருக" என்று போட்டு உபயோகிக்கலாம்.

கோரிக்கை எதுவானாலும் உள்ளன்போடு வேண்டி வணங்கினால் போதும். வரலக்ஷ்மி அருள் பொழிவாள்! செல்வம் பொங்கும்! மகிழ்ச்சி நிறையும்!

# அஷ்டலக்ஷ்மி





1. மஹாலக்ஷ்மி : மஹாதேவீம் மஹாமாயாம்
சங்க சக்ர சதுர்ப்புஜாம்
பத்மாஸனே பத்மஹஸ்தாம்
பத்மாரூட மிஹோஜ்வலாம்



2. தான்யலக்ஷ்மி : தானவான் நகரீம் தேவீம்
தான்ய லக்ஷ்மீம் ஸுகப்ரதாம்
பத்மநேத்ராம் பத்மமுகீம்
ஸர்வாபரண பூஷிதாம்



3. தனலக்ஷ்மி: மஹாதேவீம் மஹாமாயாம்
தனாகர்ஷண ஸுந்தரீம்
தனாதிஷ் டான மாதங்கீம்
தனதான்யா பிவர்த்தனீம்

4. பாக்யலக்ஷ்மி: பாக்யலக்ஷ்மீம் மஹாதேவீம்
பாக்ய பாக்யாபி வர்த்தனீம்
மங்கல ஸ்வரூபாம்போதேவீம்
மாங்கல்ய மணி பூஷிதாம்



5. ஸந்தானலக்ஷ்மி: ஸௌந்தரீம் ஸுந்தரமுகீம்
ஸத்ஸந்தான அபிவர்த்தனீம்
ஸௌபாக்ய ராஜ்ய ஸம்மானாம்
ஸர்வ ஸௌபாக்ய வர்த்தனீம்

# ஸ்தோத்ரம்





6. வச்யலக்ஷ்மி: கிரீடினி மஹாவஜ்ரே
ஸஹஸ்ர நயனோஜ்வலே
வ்ருத்தப்ராண ஹரே சைந்த்ரீ
நாராயணி நமோஸ்துதே

7. கஜலக்ஷ்மி : ச்ரீங்கார வேத்யா ச்ரீங்கார
பூஜ்யா ச்ரீங்கார பீடிகா
ச்ரீங்கார வேத்யா ச்ரீங்கார
கஜலக்ஷ்மி நமோஸ்துதே

8. வரலக்ஷ்மி: பத்மாஸனே பத்மகரே
பத்மமாலா விபூஷிணே
விஷ்ணு பத்னீம் மஹாதேவீம்
வரலக்ஷ்மி நமோஸ்துதே

9. நமஸ்காரம்:
யாதேவீ ஸர்வ பூதேஷு
லக்ஷ்மீ ரூபேண ஸம்ஸ்திதா
நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை
நமஸ்தஸ்யை நமோ நம:

10. மங்கள ஹாரதி:
மங்களம் தேஹி மஹாலக்ஷ்மி
ஸர்வ ஸௌபாக்யதாயினி
விஷ்ணு பத்னி நமஸ்துப்யம்
மஹாலக்ஷ்ம்யை ஸுமங்களம்



# வருக வருக



**செ**ல்வம் மல்கும் செட்டி நாட்டில் வாழ்ந்த புலவர்களில் குறிப்பிடத்தக்கவர் முத்தப்பர் என்பவர்; இவர் திருவாயால் மொழிந்த எதுவும் அப்படியே நடந்தது!

- தங்கம் கிருஷ்ணமூர்த்தி

அத்தகைய நிறைமொழி மாந்தராய் விளங்கிய இவர், தன் இனத்து மக்கள் அனைவரும் செல்வச் செழிப்புடன் வாழ வேண்டும் என்கிற உயர்ந்த நோக்குடன், திருமகளைக் குறித்து மூன்று பாடல்களைப் பாடினார். அவற்றுள் ஒன்றான "காடு வெட்டிப் போட்டு" எனத் துவங்கும் பாடல் அனைத்து நகரத்தாராலும் போற்றிக் கொண்டாடப்படுகிறது. இப்பாடலை வீட்டுச் சுவரிலும் கூட, எழுதி வைப்பதை வழக்கமாகவே கொண்டிருந்தனர்!



பாடல் :

"காடு வெட்டிப் போட்டுக்
கடிய நிலந்திருத்தி
வீடு கட்டிக் கொண்டிருக்கும்
வேள்வணிகர் - வீடுகட்கு
அன்றைக்கு வந்த எங்கள்
அம்மா
இலக்குமியே
என்றைக்கும்
நீங்கா திரு..."

(திருமகளை 'எங்களம்மா, இலக்குமியே' என்று உரிமையுடன் அழைத்து என்றும் எங்களை விட்டு நீங்காதிரு என்று வேண்டுதல் புரிகிறார் முத்தப்பர்)

வண்ணச்சரபம் ஸ்ரீமத் தண்டபாணி ஸ்வாமிகள் என்பவர், 'திருமகள் அந்தாதி' என்கிற தனது நூலில் திருமகளின் சிறப்பினைக் குறித்து 100 பாடல்கள் இயற்றியுள்

# திருமகளே வருக!





ளார்.

இந் நூலில் அடங்கியுள்ள முதல் பாடல் 'திருமகளே' என்று துவங்கி, 'திருமகளே' என்று முடிகிறது!

இந்தத் திருமகள் அந்தாதியில் அடங்கியுள்ள முதற்பாடலையும், இறுதிப் பாடலையும் தினமும் பாராயணம் செய்து வர, இல்லத்தில் லட்சுமி கடாட்சம் தாண்டவமாடுவதுடன், அஷ்ட ஐஸ்வர்யம் என்று அழைக்கப்படும் ஞானம், செல்வம், புகழ், மன உறுதி, உணவு, வீரம், நற்மக்கட்பேறு மற்றும் விரும்பியதை விரைவாக முடிக்கும் ஆற்றல் ஆகிய எட்டும் கிட்டும்.



முதற்பாடல்

"திருமகளே! திருப்பாற்கடல்
உளடு அன்று தேவர்தொழ
வருமகளே! உலகு எல்லாமும்
என்றென்றும் வாழவைக்கும்
ஒரு மகளே! நெடுமால் உரத்தே உற்று
வரம்பெரிது
தருமகளே! தமியேன் தலைமீது
நின் தாள்வையே"

(பொருள்:) திருவாகிய செல்வ மகளே! திருப் பாற்கடலை அமுதத்துடன் தேவர்கள் தொழும்படியாக வந்த பெண்ணே! உலகம் யாவற்றையும் உனது செல்வச் செழிப்பால் வாழவைப்பவளே! திருமாலின் மார்பிலே தங்கி வீரத்தைத் தந்து அவருக்கு வெற்றியைத் தருபவளே! அடியேன் தலையின் மீது உனது திருவடிகளை வைப்பாயாக!



## இறுதிப் பாடல் (100 வது பாடல்)

"தனிப்புறு யோகமும் முயன்று ஆதரித்து தழைமலர் பெய்து
இனிப்புறு தோத்திரமும் செய்ய வல்லார்க்கு எத்திசையும்
தொனிப்புறு சீர்த்தி நல்கி கலியாகிய துன்பொழித்துச்
செனிப்புறு சன்மமும் தீர்ப்பாள் கமலத் திருமகளே..."

சதக நூல்கள் என்பன, வாழ்வியலின் அடிப்படைச் செய்திகளை எளிதில் நினைவுகொள்ளும் வகையிலே தொகுத்துக் கூற எழுந்தவையாகும்;



திருமகள் எங்கே வாழ்கிறாள் என்றும் கூறப்பட்டுள்ளது; குமரேச சதகம், அறப்பளீச்சர சதகம் ஆகியவற்றில் திருமகளின் இருப்பிடங்களைக் கூறும் பாடல்கள் அமைந்துள்ளன. அவ்வகையில் குமரேச சதகத்தில் அமைந்துள்ள இந்தப் பாடலைப் பாருங்கள்!

"கடவா ரணத்திலுங் கங்கா
சலத்திலும்
கமலா சனத் தன்னிலுங்
காகுத்தன் மார்பிலுங் கொற்றவர் இடத்திலும்
காலியின் கூட்டத்திலும்
நடமாடு பயிரிலும் பொய்வார்த்தை சொல்லாத
நல்லோ ரிடத் தன்னிலும்
ரண சுத்த வீரர் பாலும்



அடர்கே தனத்திலும் சுயம்வரந்தன்னிலும்
அருந்துளசி வில்வத்திலும்
அவர்தரு கடப்பமலர் தனிலும்இர தத்திலும்
அதிக குணமான ரூப
மடவா ரிடத்திலும் குடிகொண்டு திருமாது
மாறா திருப்ப என்றோ
மயிலேறி விளையாடு குகனே புல் வயலீடு
மலை மேவு குமரேசனே..."

**பொருள் :**

வலிய அழகிய யானைகளிலும், கங்கை நீரிலும், தாமரை ஆசனத்திலும், திருமாலின் மார்பிலும், மன்னவரிடத்திலும், பசுக்கூட்டத்திலும், நன்கு முற்றி வளர்ந்து காற்றில் நடனமாடும் நெற்பயிர் விளைவிலும் பொய் பேசாத சான்றோரிடத்திலும், நல்ல சுபம் பொருந்திய மங்கலம் நிறைந்த இல்லங்களிலும், வீரர்களின் தோள்களிலும், அரசனின் கொடியிலும், பெண்டிர் தங்கள் மனதிற்குகந்த மணாளனைத் தேர்ந்தெடுக்கும் சுயம்வர மண்டபத்திலும், துளசி, வில்வம் ஆகியவற்றிலும் பூத்துக் குலுங்கும் கடம்ப மரங்களிலும், பழங்களின் சுவையிலும், தேர்களிலும், அதி அழகும், குணமும் மிக்க பெண்டிர் களிடத்தும், திருமகளாகிய மகாலட்சுமி நீங்காது இருப்பாள்.







## அறப்பள்ளீச்சர சதகம்

நற்பரி முகத்திலே
மன்னவரிடத்திலே
நாகரிகர் மாமனையிலே
நளின மலர் தன்னிலே
கூவிளந் தருவிலே
நறை கொண்ட பைந்துள
வி லே
கற்புடையவர் வடிவிலே
கடலிலே கொடியிலே
கல்யாண வாயில் தன்னிலே
கடி நகரிடத்திலே
நற்செந்நெல் விளைவிலே
கதிர் பெறு விளக்கத்தினிலே
பொற்புடைய சங்கிலே
மிக்கோர்கள் வாக்கிலே
பொய்யாத பேர் பாலிலே
பூந்தடந் தன்னிலே
பாற்குடத் திடையிலே
போதகத்தின் சிரசிலே
அறம் பெருங் கோதை மலர்
மங்கை வாழிடம் என்பர்
அண்ணல் எம தருமை
மதவேள்
அனுதினமும் மனதில்
நினைதரு சதுரகிரி வளர்
அறப்பளீ சுர தேவனே"

பொருள் :

(ராஜலட்சுமியாய்) நல்ல குதிரையின் முகத்திலேயும்,

(விஜயலட்சுமியாய்) தருமத்தின் வழிநடக்கின்ற மன்னரிடத்திலும்,

(கிரகலட்சுமியாய்) நயத்தக்க நாகரிக குணங்களைக் கொண்டவர் இல்லங்களிலும்

(புஷ்பலட்சுமியாய்) அழகிய பூக்களிலும்,

(பிருந்தா தேவியாய்) வில்வ மரத்திலும்,

(ஸ்ரீயாய்) தேன் சொரிகின்ற துளசிச் செடிகளிலும்,

(மகாலட்சுமியாய்) கற்புடைய பெண்கள் வடிவிலும்,





(சாகரலட்சுமியாய்) பரந்து விளங்குகின்ற கடலிலும்
(துவஜலட்சுமியாய்) தேசத்தின் கொடியிலும்,
(ஐஸ்வர்யலட்சுமியாய்) திருமணம் நடக்கின்ற மாளிகையின் வாயிலிலும்,.
(துர்காலட்சுமியாய்) பாதுகாக்கப்பட்ட நகரிலும்,
(தான்யலட்சுமியாய்) செந்நெல் விளைகின்ற நிலங்களிலும்,
(தீபலட்சுமியாய்) வலம்புரிச் சங்கிலும்
(வித்யாலட்சுமியாய்) பெரியோர்களின் வார்த்தையிலும்
(சாந்த லட்சுமியாய்) பொய் பேசாத சான்றோரிடத்திலும்,
(சரசலட்சுமியாய்) பூக்கள் நிரம்பிய குளங்களிலும்,
(கோலட்சுமியாய்) அமுதமாகிய பாற்குடங்களுக்கு இடையேயும்
(மகுடலட்சுமியாய்) யானையினது மத்தாகிய சிரசிலும் சிறந்த மாலைகளை அணிந்து தாமரையில் வாழ்கின்ற மகாலட்சுமி பிரியாது வாழ்கின்றாள்.)

மனிதர்களின் உடலில் எட்டு விதமான பெயர்களுடன் மகாலட்சுமி விளங்குகின்றாள் என்று சாணக்கியர் அர்த்தசாஸ்திரத்தில் குறிப்பிட்டுள்ளார்; அதாவது,

பக்தர்களின் இதயக் கமலத்திலே பாக்யலட்சுமியாகவும், கரங்களாகிய கமல மலர்களில் சகலவிதமான தான்யலட்சுமியாகவும் வீர புஜங்களில் வீரலட்சுமியாகவும், இருதயக் கமலத்தில் நிறைவான கருணை சத்யலட்சுமியாகவும் மேலான குணங்களினால் கீர்த்தி லட்சுமியாகவும் உடல் முழுவதும் அழகைத் தரும் சௌம்யலட்சுமியாகவும் திகழும் மகாலட்சுமி எனது மனதை விட்டு நீங்காத சர்வசாம்ராஜ்ய லட்சுமியாகவும் விளங்குகின்றாள் என்கிறார்.

# தேவிபாகவதத்தில் கூறப்பட்டுள்ள லக்ஷ்மி ஸ்தோத்ரம்



- புஷ்பா நரசிம்மன்



*1. ஸஹஸ்ரதள பத்மஸ்த கர்ணிகா*
*வாஸிநீம்பராம்*
*சரத்பார்வண கோடீந்து*
*ப்ரபாமுஷ்டி கராம் பராம்*
*2. ஸ்வதேஜஸா ப்ரஜ்வலந்தீம்*
*ஸுகத்ருச்யாம் மநோஹராம்*
*ப்ரதப்த காஞ்சநநிப சோபாம்*
*மூர்த்திமதீம் ஸதீம்*
*3. சத்ருபூஷண பூஷாட்யாம் சோபிதாம் பீதவாஸஸா*
*ஈஷத்தாஸ்யாம் ப்ரஸந்நாஸ்யாம் சச்வத்ஸுஸ்திர யௌவநாம்*
*ஸர்வ ஸம்பத் ப்ரதாத்ரீம்ச மஹாலக்ஷ்மீம் பஜேசுபாம்.*

**இவற்றின் விளக்கம்**

1. ஆயிரம் இதழார் கஞ்சத் தமர்ந்தவள் கருஞ்சிவப்பு
மேய வண்ணத்தினாடை விரும்பியே உடுத்தாள் கூதிர்
பாயதண் திங்களேபோல் பைங்கதிர் வீசும்மேனித்
தாய் எழில் திருமா மங்கை தளிரடி போற்றி போற்றி.
2. ஒப்பில்லா மேனித் தேசால் ஒளிர்பவள் திருக்கண்ணோக்கால்
தப்பில்லா இன்பம் ஈயும் தன்மையள் தழலில் காய்ந்து
கப்பிய மாசு நீங்கி உருகிய கனகச் சோதித்
திப்பிய உருவாள் கற்பிற் சிறந்தவள் அடிகள் போற்றி.
3. மணியணி புனைந்து கோல மஞ்சட்பட்டுடுத்தும் தேவி
பணிவினில் சிறிதீந்தாலும் பன்மடங்காக ஈவாள்
அணிபெறும் இளமை என்றும் அகன்றிடா(து) ஒளிரும் அன்னை
இணிபொருள் யாவும் ஈயும் செல்வி சேவடிகள் போற்றி.

# இலக்குமி துதி



(அகத்திய முனிவரால் இயற்றப்பட்டது)

(அதிவீர ராமபாண்டியரால் தமிழாக்கம் செய்யப்பட்டது)

**(இலக்குமி துதி ஆறு பாடல்களும் மங்கையர் மலர் நவம்பர் 2004 இதழில் தரப்பட்டுள்ளன. அந்தப் பாடலுக்கான பொருள் விளக்கம் மட்டுமே இங்கு கொடுக்கப்பட்டுள்ளது.)**



1. மூன்று உலகங்களையும் துன்புறுத்தி வந்த அசுரர்களை வென்ற திருமாலின் அகன்ற மார்பில் அழகாக விளங்குபவளும், தேவ லோகம் போல் விளங்கும் கொல்லாபுரம் எனும் கோலாப்பூரில் அமர்ந்து அருளும் திருமகளின் பாத கமலங்கள் இரண்டையும் பணிந்து வேதங்களைப் பயின்ற அகத்தியராகிய யான் இந்தத் துதியைப் பாடுகிறேன்.

2. மனமகிழ்ந்து வண்டுகள் இசைபாடி மொய்க்கின்ற தாமரை மலரின் பொகுட்டினைப் போல் கார்மேனித் திருமாலவன் மார்பில் திகழ்பவளே! இந்த உலகனைத்தும் உருவாக்கிய அருட்சக்தியே! இருகரம் கூப்பி உன்னை அன்போடு வணங்கும் அன்பருடைய குறைகள் தீர்க்கும் தாமரைக் கண்ணாளே! பணிந்து வணங்குகிறோம்!

3. திருமாலின் தேவி! தாமரை மலர் போன்ற கரங்களை





உடையவளே! கரும்புவில் ஏந்தும் வேனிலான் ஆன மன்மதனை ஈன்றவளே! அமுதக்கலசம் போன்று அருளும் கரங்களை உடையவளே! பாற்கடலில் உதித்தவளே! அன்பர்கள் உள்ளத்தில் ஒளிரும் சுடரே என்றெல்லாம் துதித்து மகிழ்கிறேன்!

4. தாமரை மலரின் நடுவில் அரசி என விளங்குபவளே! சிவந்த இதழ்களைக் கொண்ட அழகுமயிலே! உனது கடைக்கண் பார்வையின் சிறப்பினால் அன்றோ பிரமன் இவ்வுலகைப் படைத்தான். திருமால் காத்து நின்றான், இளநிலவைச் சடையில் அணிந்த ஈசனும் அழித்தான், ஆக முத்தொழிலும் இயங்குவது உன் கண் பார்வையின் சிறப்பல்லவா? உனது பெருமையை என்போன்றவர்களால் எடுத்துரைக்க முடியுமோ!

5. தாமரை மலரில் உறையும் உன் அருள் நோக்கினால் அன்றோ சாமானியனும் கல்வி, அறிவு, கட்டழகு, இவற்றில் ஒப்பற்று அரசனைப் போல் விளங்குகின்றனர்! மன்னர்கள் போரிலும் வெற்றி பெற்று வாகை சூடுகின்றனர்!



6. செங்கமல மலரில் இகழும் அழகுத்திரு உருவே! கடல் சூழ்ந்த இவ்வுலகில் சூரியனாகவும் சந்திரனாகவும் வாழவைக்கும் நெருப்பாகவும் விளங்கும் பூங்கொடியே! காடு, மலை, மண் இப்படி எல்லாவற்றிலும் வளம் கொழிப்பவள் நீயன்றோ!

7. இவ்வுலகில் உன்னைப் பக்தியுடனும் பணிவுடனும் நான்மறை வல்ல அகத்தியர் இயற்றிய இந்தத் துதியை மகிழ்ந்து படிப்பவர்கள் தேவர்களைப் போல் அனைத்து இன்பங்களையும் பெறுவர். அதோடு, இந்தத் துதி எழுதப்பட்டுள்ள ஏடு வீட்டில் இருந்தாலே போதும் வறுமை அவர்களை ஒருநாளும் அண்டாது!

## வரலக்ஷ்மியால் ஒன்றுபட்டோம்!



**வ**ரலக்ஷ்மியைத் "திருமகளே வருக" என்று தமிழில் வரவேற்றாலும் தலைமுறை தலைமுறையாகக் கன்னடத்திலும், தெலுங்கிலும் பாடல்கள் பாடப்பட்டு வருவது ஒருமைப்பாட்டுக்குச் சான்று. அடுத்த தலைமுறைக்கு மறந்து போகாமலிருக்க உதவலாம் என்பதனால் அந்தப் பாடல்களை மங்கையர் மலர் வழங்கிப் பெருமைப்படுகிறது. மலர் மங்கையின் அருள் மங்கையர் மலர் வாசகிகளுக்கு என்றென்றும் கிட்டட்டும்!



## లక్ష్మీ రావమ్మా మా ఇంటికి

## [லசக்ஷ்மி ராவே மா இண்டிகி]

**லக்ஷ்மியை வரவேற்கும் தெலுங்குப் பாடல் :**

*லக்ஷ்மி ராவே மா இண்டிகி க்ஷீராப்தி புத்ரி - வரலக்ஷ்மி*

*1. லக்ஷ்மிராவே மா இண்டிகி - லாலிதமுக நெலகொன்ன*
*ஸுப்ரஸன்ன மத்ய ராவே - ஸௌந்தரிப்ருந்தாவனதாரி (லக்ஷ்மி)*

*2. குங்கும பச்சகஸ்தூரி கோரிகதோ கோரோ ஜவ்வாது*
*அங்கிதமுக அலருகந்தம் சந்தமுக சாம்ப்ராணிதூபம்*
*மதாநீகு ப்ரீதிகா ப்ரக்யாதிகா ஸமர்ப்பிந்துனம்மா (லக்ஷ்மி)*

*3. பஸுபு அசந்துலு பரிமளகந்தமு*
*பஞ்சபில்வமு பூர்ணகலயமு*
*அந்தமுக ஸரிகஞ்சு சீரயு*
*குந்தனம்பு பச்சநீ ரவிகயு*
*மாதா நீகு ப்ரீதிகா ப்ரக்யதிகா ஸமர்ப்பிந்துனம்மா (லக்ஷ்மி)*

*4. ரதகஜதுரகபதாதுலு நடவக*
*தசவித வாத்யமு லெல்லம்ரோயக*
*தசதிக்குலு ப்ரமயிஞ்சி சூடக*
*மாதாநீகு ப்ரீதிகா ப்ரக்யாதிகா ஸமர்ப்பிந்துனம்ம (லக்ஷ்மி)*

# ஒன்றுபட்டோம்!



## தெலுங்குப் பாடலின் தமிழாக்கம்

அம்மா! வரலக்ஷ்மி வருவாய்... பாற்கடலின் திருவே (அம்மா)
அம்மா எந்தன் இல்லம் தன்னில்
அழகாய் வந்து நிலையாய் அமர்வாய்
ஒளியாய்த் திகழும் ஸௌந்தரியே துளசி அணி திருமாலின்
தேவி (அம்மா)
குங்குமப் பூ பச்சைக் கற்பூரம் கோரோஜனை ஜவ்வாது
அகிலுடன் சந்தனக் குழம்பு
எங்கும் மணக்கும் நறுமணதூபம்
அம்மா நிறைந்த அன்புடனே
ஆசையாய்ச் சமர்ப்பித்தோம் தாயே (அம்மா)

மஞ்சள் குங்குமம் வாசம் வீச
நறுமண மலர்களும் பூர்ணகும்பமும்
அழகிய ஜரிகைச் சேலை ரவிக்கையும்
அம்மா நிறைந்த அன்புடனே
ஆசையாய்ச் சமர்ப்பித்தோம் தாயே! (அம்மா)

நால்வகைப் படைகள் சூழ்ந்து வந்திட
நாதத்துடன் பல வாத்தியங்கள் முழங்க
உலகே வியந்து உன் பெருமையைக் காண
அம்மா நிறைந்த அன்புடனே
ஆசையாய்ச் சமர்ப்பித்தோம் தாயே அம்மா! (அம்மா)

- துர்கா

# ಭಾಗ್ಯದ ಲಕ್ಷ್ಮಿ ಬಾರಮ್ಮ

## (பாக்யத லக்ஷ்மி பாரம்மா)



**லக்ஷ்மியை வரவேற்கும் கன்னடப் பாடல் (தாஸர் கீதே)**

**பாக்யதலக்ஷ்மி பாரம்மா - நம்மம்மநீஸெள (பாக்ய)**

1. ஹெஜ்ஜேயகாலு கிலுகிலு எனுத
ஹெஜ் ஜேயெ ம்யாலே ஹெஜ்ஜய நிருத
ஸஜ்ஜன ஸாது பூஜய வேளகே
மஜ்ஜிக ஒளகின பெண்ணேயந்தே (பாக்ய)

2. கனகா வ்ருஷ்டிய கரயுத பாரே
மனகே மனகே ஸித்திஸி தோரே
தினகரகோடி தேஜவு ஹொளயுத
ஜனகராயன குமாரிபாரே (பாக்ய)

3. அத்தித் தொளகத பக்தரமனையலி
நித்யமகோத்ஸவ நித்யஸுமங்கல
சத்யவு தோருத ஸஜ்ஜன மனதலி
சித்த ஹொளயுவ புத்தளி பொம்பே (பாக்ய)

4. சங்கேயில்லத பாக்யவகொட்டு
கங்கண கைய திருகுதபாரே
குங்குமாங்கித பங்கஜலோசன
வெங்கடரமணன பட்டத ராணி (பாக்ய)

5. ஸக்கரே துப்பவ காலவிஹரிசி
சுக்ரவாரத பூஜய வேளகே
அக்கரயுள்ள அளகிரிராயன
சொக்கபுரந்தர விட்டலனப்ரிய (பாக்ய)



## கன்னடப் பாடலின் தமிழாக்கம் :

செல்வத் திருமகளே வருவாய் - எம் அன்னையே நீ
சலங்கையின் நாதம் கால்களில் ஒலிக்க
மங்கலத்திருவடி பூமியை வருட
புனிதர்கள் செய்திடும் பூஜை நேரத்தில்
மோரினில் திகழும் வெண்ணெயைப் போல் (செல்வ)

பொன்மழை தன்னைப் பொழிந்தே வருவாய்
எம்மனை தன்னில் நிறைவைத் தருவாய்
ஆயிரம் கோடி ஞாயிறு ஒளியாய்
ஜனகனின் மகளே விரைந்தே வருவாய்! (செல்வ)

அங்கிங்கு அகலாது அடியார் இல்லத்தில்
என்றும் இன்பம் என்றும் மகிழ்வே
வாய்மையே உயிராய் வாழ்ந்திடும் அடியார்
சிந்தையில் ஒளிரும் புத்தொளிச் சுடரே (செல்)

குறையே இல்லா நிறை பொருள் தருவாய்
கரங்களில் வளையல் குலுங்கிட வருவாய்
குங்கும மேனியள் தாமரை விழியாள்
வெங்கடரமணனின் பட்டத்து ராணியே (செல்வ)

நெய்யுடன் சர்க்கரை பாலுடன் படைத்தோம்
வெள்ளிக் கிழமையில் பூஜை வேளையில்
எக்கணம் மறவா அழகிய ரங்கனின்
சொக்கும் புரந்தர விட்டலனின் ராணி (செல்வ)

- லக்ஷ்மி ஸ்ரீநிவாஸன்.

# அம்மன்



- சுரேந்திரநாத்
(சுமுகிராஜசேகரன்
பவுண்டேஷன்)



1. முதலில் அம்மன் முகத்தை விபூதியால் 'பளபள' என்று ஆகும் வரை நன்கு தேய்த்துக் கழுவவும்.

2. ஒரு பெரிய வெள்ளித் தட்டில் ஒரு ஸ்பூன் வாஷிங் சோடா போட்டு சூடான தண்ணீரை நிரப்பி அதனுள் அம்மன் முகத்தை (மூழ்கும் அளவு தண்ணீர் இருக்க வேண்டும்) வைத்து ஊறவிட வேண்டும்.

3. சிறிது நேரம் ஊறிய பிறகு நல்ல தண்ணீர் விட்டு அலம்பித் துடைத்தால் சிறு துவாரங்களில் உள்ள அழுக்கெல்லாம் கூட வெளியேறி இருக்கும். இதே முறையில் அம்மனின் நகைகளையும் துலக்கலாம்).

4. மெல்லிய துணி கொண்டு அம்மன் நகைகளை ஈரம் போகத் துடைக்க வேண்டும்.

5. '0' அல்லது '1' அளவுள்ள பிரஷ் எடுத்துக் கொண்டு கறுப்பு மை தொட்டு புருவம், கண்ணின் கரு விழி, கண் இமைகள் இவற்றைப் பொறுமையாக வரைய வேண்டும். தலைமுடிக்கு நன்கு பெரிய அளவு கொண்ட பிரஷ்ஷினால் முடியை பட்டையாகத் தீட்ட வேண்டும்.

6. உதட்டுக்கு சாந்து அல்லது குங்குமத்தைக் குழைத்துத் தீட்டவும்.

7. இப்பொழுது அம்மனை திருமாங்கல்யம், கருகுமணி தாலி, நெக்லஸ், தோடு, மூக்குத்தி, கல்லு வைத்த பொட்டு, காசுமாலை போட்டு அலங்கரிக்கவும்.

# அலங்காரம்



## கலச அலங்காரம்:

1. ஒரு ஆழாக்கு அரிசி, (பெரிய சொம்பு என்றால் அதற்கு ஏற்றாற் போல் அரிசி சேர்த்துக் கொள்வதில் தவறில்லை). பிச்சோலை கருகுமணி, எலுமிச்சை (ஒன்று) தங்கம்/வெள்ளி அல்லது சாதாரணக் காசு இவற்றைச் செம்பினுள் போடலாம். விரளி மஞ்சள், ஜாதிக்காய் இவற்றையும் சேர்க்கவும்.

2. செம்பு, பித்தளை அல்லது வெள்ளி செம்பு இவற்றில் ஏதேனும் ஒன்றை கலசமாகப் பயன்படுத்தலாம்.



3. அம்மன் பாவாடையை கலசத்தில் கட்டவும். இது பட்டு அல்லது வேறு வகையாகவும் இருக்கலாம். அரக்கு, பச்சை



அல்லது மஞ்சள் கலர்த் துணியாக இருப்பின் விசேஷம்.

• பெரிய குடுமியுள்ள பெரிய சைஸ் தேங்காயை (கலசம் வாய் கொள்ளளவு உள்ள) கலசத்தின் மேலே வைப்பதற்கு அலம்பி வைக்கவும்.

• ஒரு அடி கனமான குச்சி அல்லது பிள்ளையார் குடையில் கிடைக்கும் குச்சி (மூங்கில்) இந்தக் குச்சியை தேங்காய் குடுமியில் சொருகவும். இந்தக் குச்சியின் அளவு அவரவருக்குச் செய்யும் அலங்காரங்களுக்கு ஏற்றது போலிருக்க வேண்டும்.

• தேங்காயை மஞ்சள் கரைசலால் தடவி நடுவில் குங்குமப் பொட்டு வைக்கவும்.

• தேங்காயைக் கலசத்தினுள்



வைப்பதற்கு முன் ஒரு கொத்து மாவிலையும் தாழம்பூ இதழ் களையும் வைத்து, தேங்காயை அதன் மேல் வைக்கவும்.

• தாழம்பூ இதழையும், மாவிலையும் ஒரே சீராக அடுத் தடுத்து கலசத்தில் அலங்கரித் தல் வேண்டும்.

• அலங்கரித்த கலசத்தில் அம்மனை அமர்த்தவும். பின்பு கலசத்தை வாழையிலையின் மேல் அரிசியை சேர்த்து, அதன் நடுவில் கலசத்தை அமர்த்தவும்.



## ஜடை அலங்காரம்

**தா**ழம்பூ ஜடை - தாழம்பூ மற்றும் பல வகையான பூக்கள் சேர்த்து அம்மனுக்கு ஜடை சாத்த லாம்.

• தாழம்பூவில் இரண்டு வகை இருக்கிறது. மஞ்சள் மற்றும் வெள்ளை. அம்மனுக்கு மஞ்சள் தாழம்பூ மிக விசேஷமானது மற்றும் வாசனையாகவும் இருக்கும்.

• நம் மனதிற்கு ஏற்றாற்போல் சாமந்தி, அரளி, வாடாமல்லி, மரு, சம்பங்கி, தவனம் ஆகிய பூக்களை ஜடை பின்னலுக்கு உபயோகிக்க லாம்.

• அம்மனுக்கென்றே ஒரு அடிக்கு கிடைக்கும் புத்தம் புதிய சில்க் அல்லது காட்டன் சவுரி வாங்கவும். இதனை மற்றவர்கள் (நாம்) உபயோகிக்கக் கூடாது. முதலில் குஞ்சலத்துடன் சவுரி வைத்துப் பின்னிக் கொள்ளவும்.

• தாழம்பூவில் இருக்கும் வெளி யில் உள்ள நீளமான பெரிய இதழ் களை எடுத்துக் கொண்டு, சிறிய துண்டுகளாக வெட்டிக் கொள்ள வும். வெட்டிய தாழம்பூவை இரண்டு இதழ்களாக எடுத்துக் கொண்டு சவுரியின் மேற்பகுதியில் ஆரம்பித்து



ஊசி நூல் கொண்டு தைத்துக் கொண்டு வரவும். சவுரி முழுவதும் அதனை மூடும் விதமாக வைத்து விடவும்.

• அதற்கு மேல் நம் விருப்பத்திற்கு ஏற்றாற் போல் பூக்களை வைத்து தைக்கவும்.

ஜடைகளில் இரு வகை உண்டு -

1. பொட்டி ஜடை
2. கத்தி ஜடை

தாழம்பூ வைக்கும் முறை :



Registered with the Registrar of Newspaper of India under No. 30309/75 * Registered No. TN / PMG (CCR) 601 / 03 - 05* Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 392 / 03 - 05* Registered as a Newspaper in Srilanka Supplement to the Mangayar Malar August 2005 issue





பொட்டி ஜடை இரண்டு தாழம்பூவை ஒன்றன் பின் ஒன்றாக சவுரியில் வைத்து கீழ் வரை தைக்கவும்.

கத்தி ஜடை : ஜடை ஆரம்பம் முதல் முடிவு வரை தாழம்பூவை ஒன்றன் கீழ் ஒன்றாக அளவு குறைத்து வைத்துக் கொண்டே வரவும்.

## மண்டப அலங்காரம்

• மண்டபத்தின் இரண்டு பக்கமும் வாழைக் கன்றுகள் கட்டி மாவிலை, தோரணம் ஆகியவற்றை மண்டபத்தைச் சுற்றி அழகாகவும், நேர்த்தியாகவும் கட்ட வேண்டும். (பெரிய ஸ்டூல் இருந்தால் அதை கவிழ்த்துப் போட்டும் மண்டபமாகச் செய்யலாம்).

• வாழைக் கன்றுகள் இரண்டும் ஒரே அளவாகவும், இலைகள் ஒரே சீராகவும் தேர்ந்தெடுக்க வேண்டும்.

• இவைகளை மண்டபத்தில் கட்டும் போது ஒரு தம்ளரிலோ, அல்லது சிறு குவளை அல்லது பாத்திரத்திலோ குளிர்ந்த தண்ணீரை நிரப்பி அதனுள் வாழைக் கன்றுகளை வைத்து மண்டபத்தில் கட்டினால் இலைகள் மூன்று நாட்களும் வாடாமல் இருக்கும்.

• மண்டபத்தின் பின்புறத்தில் வரலக்ஷ்மி அம்மன் படத்தை வைத்து, முன்னால் கலசத்தை வைக்க வேண்டும்.

• சிலர் கலசத்தில் அம்மன் முகத்தை அழகாக வரைந்து வைத்தும் பூஜை செய்வார்கள்.

